உ

சிவமயம்.

கணபதிதுணை.

பட்டினத்துப்பிள்ளையார்

என்று வழங்கும்

# திருவெண்காட்டடிகள் சரித்திரம்

அவரதுபாடற்றிருமுறை.

இச்சரித்திரம்

ம-ள-ள-ஸ்ரீ, நாகை

கண்ணு. இராமலிங்கபிள்ளையவர்கள்

கேட்டுக்கொண்டபடி

சென்னை பிரசிடென்சி காலேசு தமிழ்ப்பண்டிதரும்

சமரசவேத சன்மார்க்க சங்கத்து

வித்துவான்களி லொருவருமாகிய

தொழுவூர். வேலாயுதமுதலியாரால்

வடமொழியினின்றும்

வாசகமாக மொழிபெயர்க்கப்பட்டு

சென்னை:

மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

கலியுகாதி ௵ 4988.

விய௵ ஆடிமீ

1886.



(இதன்விலை ரூ.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

---

ஒப்புயர்வில்லாத பேரின்பவீட்டுநிலை யுண்மையிதுவென்று, யாவர்க்கும் விளங்கும்படி காட்டவந்த குருமூர்த்தங்களுள் ஒருவராகிய இப்பட்டினத்துப்பிள்ளையார் சுமார் ௲-வருடத்திற்குமுன், காவிரிப்பூம்பட்டினத்திலே வேளாண்குலத்திலே அவதாரஞ் செய்திருக்கலாமென்று தோன்றுகின்றது.

எப்படியென்னில், இவர் செய்தருளிய கோயினான்மணிமாலை முதலிய பிரபந்தங்கள் பதினோராந் திருமுறையுள் நம்பியாண்டார் நம்பிகளாற் சேர்க்கப்பட்டிருப்பதனாலேயும், அவர்க்குப்பின்னிட்டு அவதரித்த சேக்கிழார் பெருமான் செய்தருளிய பெரிய புராணத்தினைப் பின்னிட்ட பெரியோர்கள் பன்னிரண்டாந்திருமுறையென்று அமைத்துவைத்துப் பூசித்து வருவதாலும், அச்சேக்கிழார் பெருந்தகையை மகா கவியாகிய கம்பர் திருக்கைவழக்கத்துள், "——காவலவன் - மண்ணிற் கடலின் மலையிற் பெரியதென - எண்ணியெழுதிக்கொடுத்த வேறமக்கை" என்று துதித்திருப்பதனாலும், அக்கம்பர்காலம் "எண்ணரியசகாத்தம் எண்ணூற்றேழின் மேற் கம்பநாடன் கண்ணியவரங்கமுன்னே கவியரங்கேற்றினானே" எனக்குறிப்பித் திருப்பதனாலுமென்றுணர்க.

இப்பட்டினத்தாரைச் செட்டியார் என்று வழங்குவதாகவே புராணத்துள்ளும் வைசியர் என்று கூறப்பட்டுள்ளதே, வேளாளரோ வெனத் தெளிவுறுமெனின், வேளாளர் வைசியரொன்றனிவகாரம் நால்வமுச்செனப்படு வேளாண்மரபியலுள்ளேயாம் கூறினும். அன்றி இன்னும் அக்காவிரிப்பூம்பட்டினத்துள்ள வேளாண்செட்டிகளில் அம்மரபினோர் உள்ளாராகக் கேள்விப்படுகின்றமை ஆதலினென்க. இவரைத் தத்துவராயர், ஒழிவிலொடுக்க நூலுடையார், தாயுமானவர், முதலிய பல பெரியோர்கள் துதித்திருக்கின்றனர்.

இலக்கணக்கொத்துடையார் தமது நூலுள் இவரையெடுத்தோதித் தாம் கூறுமிலக்கணத்துக்கு இவரதிலக்கியத்தினை மேற்கோள் காட்டினர்.

இவர் சிவானுபவத்திற் சிறப்புற்றிருந்தாற்போலவே கல்வி கேள்விகளிலும், செல்வத்திலும் மிக்க சிறப்புற்றிருந்தனராக விளங்குகின்றது.

## முகவுரை.

இப்பட்டினத்துப்பிள்ளையார் துறவுபூண்டு திருவண்ணாமலைக் குவந்தங்கிருக்குநாளில் ஓர்கணிகையைக்காமுற்றுவீரியத்தை வெளிப்படுத்த அதனை யவளுண்டு கருவுறவுபிறந்தசேயே, திருப்புகழ்செய்தருளிய அருணகிரிநாதர் என்ச் சிலர்கூறுகின்றனர். ஆயின் அதனுண்மை வெளிப்படுவது அருமையாக விருத்தலாலும் எமக்குக் கிடைத்த முதனூல்களொன்றனுள்ளும் அக்கதையினைக் குறிப்பியாமையாலும் யாமும் அதனை விட்டனம்.

இவரது சரித்திரங்களைத் தமிழ்ச்செய்யுளாற் கூறும் புராணமொன்றும் வடமொழியாற் கூறும் புராணமொன்றும் வழங்குகின்றன. ஆனால் தமிழ்ச் செய்யுளாற் கூறும் புராணம் செய்த நூலாசிரியர் இலக்கியவிலக்கண சாத்திர சம்பிரதாயங்களிலே சிறந்த கல்வி கேள்வியுடையராகவும் சிறந்தவாக்கியாகவும் தோன்றுகின்றார் ஆனால் அவர் செய்த புராணம் கையெழுத்துப்பிரதிகளில் பலவழுவுற்று வழங்கியபடி அச்சிடப்பட்டதாகக் காணுகின்றதனைப் பரிசுத்தபாடநோக்கி யச்சிடப்படவில்லையாதலின் அநேகவிடங்களிற்பொருள் விளங்கவில்லை. ஆனாலும் கருத்துமாத்திரம் மிக வாழ்முடையதாகவிருக்கின்றது. ஆதலின் அந்நூலாசிரியர் சிறந்த பெரியோரென்பதற் கையமில்லை. அவரினதொன்ப பேரும் வரலாறும் தெரியவில்லை.

இவ்வாசிரியர் தாம் புராணஞ்செய்வதற்கு முன்னூல்பெறாது பெரியோர் வழங்கும் வாய்மொழிபற்றிக் கூறியதாக "வெண்காடர்குலவணிகரின்புகார் மன்னிய நல்லறிஞர் சிலர் பகர்ந்த கதையினைத் தொகுத்து வகுத்துக்காட்டும் என்னவெழிற் புலியூரிலிருந்த கலைஞராறியு நெறியிசைத்துளேன்யான." எனவும், "புலிமுனியும் பதஞ்சலியு முதலான பெரியோர் தம்புகழ்ப்புராணம், இலங்கிடவாமவாக்கு முன்னங்கதியடைந்தோரளவிலரு ரியமபுராணம், பலபல வாமனைவபோல வருவனவு மவ்வண்ணம் பகரலாகும், கலைவடநூல்சொல்லி லெனசொல்லாவிடி லெனகதைகள் கழறலாமே" எனவும் கூறினர்.

அப்புராணத்துள் அவ்வாசிரியர் கூறிய கதையாவது, புகார்ப்பட்டினத்தை யிந்திரன் கண்டவரலாறும், அந்நகருள் வெண்காடர் வாழ்ந்திருக்குநாளில் மருதூருடையார் சிறுவராகவந்து விலைப்பட்டுக்கொண்டு மகனாகப்பாராட்டி வருகையில் ஞானோபதேசஞ்செய்தவர் மறைய அவர் துறவுபூண்டு திருவிசைப்பா பல பாடிச் சேந்தனாரைச்சிறைமீட்டு முத்திக்குவிடுத்து ஒற்றியூரடைந்து திருமேனி சிவலிங்கமாக நிறுத்தியதுமாம். அன்றி யிப்பட்டினத்தார் அவதாரமும் இவரால் அருள்பெற்ற பத்திரகிரியார் சரி

தமும், இவர் செய்த புராணமியமும் கூறிலர். இவ்வாசிரியர் "புராந்த கதைதொகுத்து" என்றதால இன்னு மநேக கதைகள் கூறுதொழிந்ததாகக் காட்டுகின்றது.

அதற்கேற்ப அப்பட்டினத்துப்பிள்ளையார் திருப்பாடல்களாற் குறிப்பிக்கின்ற கருத்திசைய பலகதைகளைப் பெரியோர்கள் கூறுகின்றனர். அக்கதை புராணத்துள்ளில்லையாயினும் மறுக்கலாகாததாக விருக்கின்றது. மேலும் இந்நூலாசிரியர் வடமொழியிற் புராணமில்லையென்றே கூறினர். ஆகவே வடமொழிக்கதையிவர்க்குக் கிடைத்தபடி யனறு போலும்.

இனி எமக்குக் கிடைத்த வடமொழிப்புராணமோ "பவிஷ்யோத்தர புராணத்துள் திருவிடைமருதூர் மான்மியத்தில் கூறப்பட்டதாகக் கூறுகின்றது. கதைகள் சுறறேறக்குறைய சாங்கமாக விருக்கின்றது ஆயினும் அதன் சொன்னடைமுதலியன விசேடஞ் சிறந்ததாகக் காணப்படவில்லை ஏனெனில் அடிகளார் அருளிச்செய்த திருப்பாடல்களின் கருத்தமைந்த தோத்திரங்களொன்றும் பொருந்தவில்லை.

இனி எமக்குக் கிடைத்த விருவகைப்புராணங்களுள்ளும் இப்பட்டினத்தடிகளுக்கு ஞானாசிரியர் திருவிடைமருதூருடையாராகிய சிவபெருமானே மகவாக வந்து முடிவிலருள்செய்து மறைந்ததாகக் குறிப்பித்திருக்கின்றது. அங்ஙனமிருக்க

"திருவேடமாகித்தெருவிற்பயின்றெனைத்தேடிவந்து
பரிவாகப்பிச்சைப்பகருமென்றுனைப்பதம்பணிந்தேன
கருவாகுமேதக்கடற்கரைமேவக்கருதுமென்னை
யுருவாக்கிக்கொள்ளவல்லோவிங்ஙனேசிவனுற்றதுவே.

என்ற அவரது செய்யுளைப்பற்றிப் பட்டினத்தார் வழக்கப்படியடியவர் பூசைசெய்யு நிமித்தம் தேடிச் சென்றிருக்கையில் சிவபெருமான் அடியவர் கோலத்துடன் அவரது மனைக்குச்சென்று கர்த்தறவூசியு மோலையுங் கொடுத்து இருந்தபடி பாவனை நிகழ்ச்செய்து மறைந்ததாகச் சிலபெரியர் கூறுகின்றனர். ஆயினும் இருவகைப் புராணத்தைப்பற்றியே யாம் எழுதி யிருக்கின்றனம்.

தமிழ்ப்புராணத்துள், அடிகளார் அருளிச்செய்தது என்று முதல குறித்திருக்கும் திருப்பாடல்களிற் சிலது கிடைக்கவில்லை. அவற்றைப் பிறைக்குறி ( ) யிட்டு அதனுள் அம்முதற்குறிப்பெழுதியிருக்கின்றது

# முகவுரை.

இங்ஙனம் நாம் வெளிப்படுத்திய வ[illegible]சகசரித்திரம் அந்தத் தமிழ்ப்புராணக் கருத்தையுந் தழுவி வடமொழிப்புராண சரிதத்தை முற்றுங்கொண்டு அடிகளார் திருப்பாடற்சரித்திரங்களை நல்லோர்பால் விசாரித்து எழுதியபடியென வுணர்க.

இன்னும் அடிகளது பல அற்புத சரிதங்களும் பாடல்களு முள்ளனவாகக் கேள்விப்படுகின்றோம். ஆதலால், உணர்ந்த பெரியோர்கள் அவற்றை அருள்செய்தனுப்புவார்களாயின் அவர்கட்கு வந்தனஞ்செய்து பெற்று இரண்டாமுறை யச்சியற்றி வெளிப்படுத்தப்படும்.

இப்பட்டினத்தார் மாணாக்கரும், திருப்பல்லாண்டு செய்தருளியவரும், திருவிசைப்பா செய்தருளிய ஒன்பது நாயன்மார்களு ளொருவருமாகிய சேந்தனார் சரித்திரம் எமக்குக் கிடைத்த விருவகைப் புராணங்களுள் குறித்தமட்டில் வெளிப்படுத்தலாயிற்று. இன்னும் வேறு சரித்திரங்களிருக்கின் அவற்றையும், திருவிசைப்பா வருளிச்செய்த மற்றை நாயன்மார்கள் சரித்திரத்தையும் கிடைத்துள்ளவர்கள் தயவுசெய்தனுப்புவார்களாயின் யாவர்க்கும் உபயோகமாம்படி வெளிப்படுத்தப்படும்.

சென்னபட்டணம், }<br>
௧௮அறிஹ ஆகஸ்டுமீ }

இங்ஙனம்<br>
தொ. வே.

சிவமயம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

படடினததுப பிளளையார எனறு வழங்கும்

# திருவெண்காடர் சரித்திரம்.

## வாழ்த்து.

பிறவியளககருமபீழைப்பொற்றையும
உறுவினைககாணுமவெறுவியசுரமும
வெருவியவீடுமேவருவயாவின்
அருட்புணைகெழீஇயவவலமோம்புபு
மடணிகுமுலகுமாதவததடததுறீஇ
யிடரளறறுயபாசுகினியமுகசட்
கடமியலொறறைககொமபரூன்றுபவே
தெறுபுலவேடாகறுவுநணியஞசுபு
குமவிதோணமணந்தவேலவிடலைவேணடுபவே

அதாஅன்று.

பொதியிறபொதிந்துமறையினமணநகு
தணடமிழசுவைததுவையநீடியநத
சுவடுபடுமிடறறுககவடுபலபோககி
மாவடியிருநததேவியலமுதை
உணடுளஙகுளிரநதுதொண்டகிரமப்
வாடாவாரவததுமாண்பறமபூதத
பைஙகொடியடிநிழலபறறிததொணடத
தொகைககுடிசுறறஞசூழபவாழியரோ
அருடபிரகாசனன்பாவாழியரோ
வாழியாநலனேவாழியாநிலனே
வாழியாமறையேவாழியாமுறையே

ஆதிநடுவந்தமிலாவுண்மையனைப்பராபரனையனைததுநதாஙகும
சோதியைததாக்கறறிருநததூயனைமாயாதசுகவாரிதனனை [கும்
யேதிலாமுப்புரமபொடித்தவிறையவனையிச்சையெலாமிசைய நல
மாதியலும்பாதியினைமணிமனறமுடையானை மனத்துளவைப்பாம,

திருமணக்கும்பயத்துத்தீர்த்தரிருவருந் தெய்வத்
தருமணக்குஙிழலாசுமுதலவருந்தணிவழுதக்
கருமணக்காநெறியளிக்குங்கடக்களிற்றைக்கைதொழுது
மருமணக்கும்பட்டினத்துவள்ளலாாசதையுரைப்பாம. ௨)

பாயிரம்.

முன்பொருவரிககதையை முனினூலைப் பெருதறவோா மொழியும
நத, வின்புகல்கொண்டுரைத்தனமெளறியற்றமிழ்ப்பாவிதனூலைபி
சைத்தாரன்றே, பின்பினியபவுடிகோத்தாததினாரனடியாாகள்பெ
ருமைக்கூற்றி, னனபுபெறசசொலககேடடகிருட்டிணநந்தனவன
ருணமாணுக்கன (௩)

முதனிலைக்கேமுடிவுநிலைமுற்றுணாநதுகடைபபிடிததுமுயலவோ
னுனற, விதயனவ்ன்சிவானநதேவனமுதறபெரியோருமீசனுரு
ளிற, சிதவலமுமனபினருஞசலனசேயசண்முகனுஞசெயலவலா
னும, கதையுரியவடசொலலைச்செநதமிழினமைவிததலகடனென
ரேத. (௪)

ஒகையாணுயாதவததும்வஙகடாசலப்பெயரோனுதவுமைந்தன் [றி
நாகையானசெயலெலலலாமினனுயிாகட்கிதமெனவேநயநதானமா
லிகையானறேவர்குறட்கிலாகிபந்தேர்நனனொருசனியலபாாநூ
வாகையானில்லிருநதுமபற்றில்லான்கஙகைகுலமகிழவநதான். [ன

கானபெறற குவளையநதாாக கணணியாணிராமலிஙகன கணணன
வைபபிற, றுனபெறறசெலவமெல்லாநதககாாககேயொனறுநதகை
யானசாறறுகிது,வானபெற்றபெருமபேறுமண்ணவாககாமபடியெ
னனமதிததுநானும, ஊனபெற்றவுடல்பெறறபேறெனனவாசகத
திஞைாககலுறறேன. (௬)

மலசசெருககிஙகறுதகெமமை வாழ்விக்குமவெணகாடா
நலச்செருககினின்சரிதநாலுரைக்குமபடிதுணிநதேன
புலசசெருக்குப்புறந்தந்தோனபுரிதவமுமபொருளில்லான
குலசசெருககுஙகொடைச்செருககும்போலுமாஙகுவலயததே (௭)

நைமிசாரணியத்திறம.

தெயவ்ததமிழநூலினபொருளைப்போலும விசாலமாய அந்
நூலகளைச்கற்ற பெரியோாகள புகழ்போலுயாநது, அவாகள் நம
குணம்போற் றழைத்துத் தண்ணளியோடு சாந்தமணமவீசி, உள
ளமபோல மலர்ந்த பெருமையை யுடையதாகிய ஸ்ரீ நைமிசாரணி
யததில் வாசஞ்செய்கின்றவாகளும் தவஞ்சிறந்து கலவி கேளவிக
ளால் நிறைநதவர்களுமாகிய முனிவர்கள், சகல சாத்திரஙகளையும
ஐயந்திரிபற நனறு யாராயநது சைவசித்தாந்த முடிபுக ளெல்லா

வற்றையுமுற்று முணர்ந்து புராணங்களெல்லாவற்றையும் உள்ளிரகசியக்கருத்தோடுமுளவிட்டறிந்த ஸ்ரீவியாசமுனிவர்மாணாக்கராகிய சூதமுனிவர் வரக்கண்டெதிர்சென்று பணிந்துபசரித்து அழைத்து வந்து இருக்கச்செய்து அருச்சித்துத் தாமனைவரும் சூழவிருந்து, அவரை நோக்கி, 'கவலைக் காடாக கொருகட்டுமரம்போல வெமக்குக் கிடைத்த பெருங்கருணை வள்ளலாகிய ஐயரே! இந்தவனத்தில சித்தசாந்தம் பிறக்கும்படி தேவரீரிடத்து அனேகமாயிரந் தெய்வக்கதைகள் கேட்டனம் ஆயினும் அவைகள் தேவரீருடைய வாக்கினின்றும் வரும் சொல லமுதத்தோடு கூடி மிகுந்த சுவையுடையதாயிருந்த படியால இன்னும் கேட்டல வேண்டுமென்னும் ஆசை வெள்ளம் கரைகடந்து பெருகுவதேயலலாமல இவவளவிற போதுமென்னுந் திருத்தி பிறந்ததில்லை. பழகுந்தோறும் நலலவர்களுடைய நட்பு எவ்வாறு இனிப்பைத்தருமோ அவவாறு இனிக்கின்றது. ஒருவன் இவ்வுலகத்துள்ளே பெறத்தக்க செல்வம் எல்லாவற்றுள்ளேயுஞ் சிறந்தது செவிச்செலவமாகிய கேள்வியே யன்றோ? அக்கேள்வியை மாத்திரம் தேவரீரை யொத்த பெரியோர்களிடத்தில் கேட்கப்பெற்றால் தூலமாகிய விவவுடமபை நிலைநிறுத்தும்படி கொள்ளுகின்ற வேறு ஆகாரமும் வேண்டுமோ. இக்கேள்வியாகிய செவியுணவு பெற்றவர்கள் இவவுலகத்திற்றானே அவியுணவு பெற்ற தேவர்களோடொப்பவர்களே. கல்வியொரு சிறிதும் கற்றறியாதவனாயினும் ஒருவன் நல்லோர்களாலே நற்கேள்வி கேட்டிருப்பானானால அது அவனுக்கு நேரிடும் ஆபத்துக்கிடமான பெலவீனச்சோர்வுகளையும் ஒழித்துவிடுமே. தேவரீரையொத்த பெரியோர்கள் வாயினின்றும் வருஞ்சொற்கள், வழுக்கு நிலத்தில நடப்பவர்களுக்கு ஊன்றுகோல உதவுவதுபோலும் இவவுலக வியலபி லொழுகும் எங்கட்குத் தளர்ச்சி வராது தாங்குந் தன்மையுடையவாமன்றோ? "செவியிற்சுவையுணரா வாயுணர்வின்மாக்கள், அவியினும் வாழினுமென்." என்று பெரியோர் கூறினர். கேள்வி உருசி யறியாமல வாய் உருசி அறிந்து பிழைத்திருப்பதினும் சாவதே நலம். தேவரீரிடத்துப் பலபுராணக்கேள்விகள் அதிக நுட்பமாகக்கேட்டிருப்பதால எங்களை யறியாமலே எங்களிடத்து உண்டாயிருந்த கலவிச்செருக்கு, தவச்செருக்குமுதலியவெலலாம ஒழிந்தேபோய் விட்டது. நலல கேள்விகளால மிகவுந் தொளைக்கப்பட்ட காதுடைய நாங்கள், "பிழைத்துணர்ந்தும் பேதைமைசொலலா ரிழைத்துணர்ந், தீண்டிய கேள்வியவர்." என்ற முன்னோர்கள் விதியை அனுபவமாகக் கண்டறிந்திருக்கின்றோமாதலால் "எனைத்தானும் நல்லவைகேட்கவனைத்தானும், ஆன்றபெருமைதரும்." என்னும

ஆபத்வாக்கியத்தைச் சிந்தித்து, இப்போது தேவரீருக்குச் சிறிது வருத்தங்கொடுக்க வுடன்பட்டனம். ஆனால் அது எங்கள் மட்டிலே யன்றி யிவ்வுலகத்துள்ள மக்கட் பிறப்பை யுடையவர்கள் யாவர்க்கும் பெருநன்மை விளைக்கத்தக்கதாமாதலால் கடாக்ஷித்து தேவரீர் அந்த சிரமத்தை அங்கீகரித்துக் கொள்ளவேண்டும். அதாவது, முன் ஸ்ரீ சுதரிசனருடைய இன்ப சரித்திரத்தைச்சொல்லி முடித்தபின்னர், சிவானுக்கிரகத்தால் பரிபாகியாயிருந்த சிவசகனான குபேரன் இப்பூவுலகத்திற் றென்றிசைக் காவிரிப்பூம்பட்டினத்தில் வசியனாகப்பிறந்து, கடவுளை மகவாகப்பெற்று வாழ்ந்திருந்து சிவஞானியாய்ச்சித்தி முத்திகளை யடைந்ததாகத் திருவுளம்பற்றினீர். அச்சரித்திரத்தை விரிவாயெங்கட்கு விளங்கச் சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்தித்து விண்ணப்பித்தனர்.

அதுகேட்ட சூதமுனிவர் பரவச முடையவராய்க் கண்களில் ஆனந்த நீர்பெருக, உடம்பு புளகம்போர்ப்ப, சிறிதுநேரங் கம்பித்தபடி தியான யோகத்திருந்து, ஐயா முனிவர்களே! நீங்கள் செயற்கரிய காரியங்களைச் செய்துமுடித்து நல்ல பக்குவம் பழுத்த சத்திநிபாதமுடையவர்கள் ஆதலால் இக்கதையைக் கேட்க விருப்புமுற்றீர்கள். சாதுக்களுக் கன்றிச் சிவஞானிகள் கதையைக் கேட்கும் விருப்பம் ஏனையோர்க்குண்டாகாது. வண்டும், ஈயும் ஆறு காலுடைய சிறு பறவை யென்று பெயராலும் அவயவத்தாலும் ஒருவாறு ஒத்திருந்தாலும் வண்டு வாசனையுள்ள மதுரமான பூக்களின் தேனையே விரும்பித் தேடிச் சென்று உண்ணும்; ஈயோவெனில் நாற்றமுடைய அழுகற்புண்ணின் சீயையே விரும்பியுண்ணும். ஆதலால் உங்கள் தராதரத்திற்கேற்ற கதையையே கேட்க விருப்பமுற்றீர்கள். இதை யுங்கட்குச்சொல்லுதலால் நானும் புனிதனாய் மெய்ப்பயன் பெற்றவனானேன் என்று இனிய வார்த்தை கூறிப் பின்பு தமது ஆசிரியரைத் தியானித்து வழிபட்டு முனிவர்கட்கு அத்தெய்வ சரித்திரத்தினைக் கூறத்தொடங்கினர்.

கேளும், அந்தணாளர்களே! இக்கதை முன்னொரு காலத்தில் சாமவேத சாகையைச்சார்ந்த சாந்தோக்கியமுதலிய வுபநிடதங்களால் சுத்த ஞானியென்று புகழ்ந்தெடுத்து ஓதப்பட்ட சிவஞான முனிவராகிய ஸ்ரீ உபமன்னியபகவான், தன் மாணாக்கர்களாகிய பல முனிவர்களுக்குங் கூறியதாகப் பௌஷியோத்தர புராணத்திற் கூறப்பட்டுள்ளது.

## புராண வரலாறு.

எவ்வாறென்னில் தன்னை யடைந்தவர் யாவர்க்கும் நிர்ப்பயத்தையும், துக்கநாசத்தையும், நோயில்லாமையையும், இஷ்டசித்தி

யையும், நித்திய சுகத்தையும் கொடுத்து ஊழிகாலத்தில் உலகமெல்லாம் மூழ்கினாலுந் தன்னித் தலைவர்போல அழிவற்றோங்குஞ் சத்திய ஞான சொரூபமாகிய ஸ்ரீகைலாசமலையின சாரலிலே புகழெனப் பரந்து பொறுமைபோலோங்கித தயவிற்குளிர்ந்து ஆசாரமொப்பப்பூத்து உதாரமென்னக் காய்த்துப பழுத்தசெலவஞ் செழித்த இன்ப மயமான வனமொன்றுண்டு. அதில் கற்றுணர்ந்தோராது அடக்கம்போலும விளங்கும் பர்ணசாலை நடுவே ஒழுக்கங் கலவியெல்லாம வடிவெடுத்தாற்போலும விளங்கிய படிவமுடையவர்களாயக்கேட்டல், சிந்தித்தல், தெளிதலென்னுங்கடன பூண்ட பல முனிவர்களாகிய சீடர்கள் புடைசூழ ஸ்ரீமன் உபமன்னிய பகவான் எழுந்தருளியிருக்கும்போது, அம்மாணவர்களாகிய முனிவர்கள் எழுந்து வணங்கி நின்று, ஓ! வியாக்கிரபாதமுனி புத்திரரே! சிவபெருமானால அனுக்கிரகிக்கப்பட்ட திருப்பாற்கடலையுண்ட செல்வரே! வேதாகமங்களின எல்லை கண்ட வெம்பெருமானே! ஸ்ரீகண்ணனு சிவதீக்ஷாகுருவே! அடியோங்கள உலகியலும அருளியலும ஒருமிக்க வுணாந்து உய்யும்படி ஸ்ரீ பத்தபரமேசுரர்களென்று வேதாகமங்களால புகழப்பட்ட சாதுக்களாகிய சிவனடியார்கள சரித்திரங்களைச்சொல்லியருளவேணடுமென்று விண்ணப்பித்தனர்கள்.

அப்போது ஞானாசாரியராகிய ஸ்ரீ உபமன்னிய பகவான நெஞ்சங்குளிர்ந்து, உடலபூரித்து, அன்பு நெக்குவிட்டு, அன்பினுருகிப்பெருகி ஆராமைமேலிடக் குழைந்து குழைந்து பரவசராய்த்தமமித்துநின்று, தெளிந்து கமபிகைச் சொலலுவாராயினா. ஐயா! முனிவர்களே! எல்லாமுடைய விறைவராகிய சிவபெருமான திவ்விய சரித்திரம்போலவே, அச்சிவமுணர்ந்த பெரியோர்களாகிய அடியார்களது அற்புதசரித்திரமும அளவிடுதற் கரியதென்று இன்னமும வேதாகமங்களே முறையிடுகின்றனவாதலால், நான என்னென்று அறிந்து அளவிட்டுச்சொல்லப்போகின்றேன உடம்பெல்லா நாவாகவும, ஊழிகாலமெல்லா நாளாகவும் கொண்டு இவ்வுலகமுழுவதும் ஒருங்குகூடிச சிறிது சிறிதே எடுத்துக் கூறிச் சென்றாலும முற்று முடியாதே!! நாம் என செய்யக்கடவோம. ஆயினும "கடலோடிப்பொருளதேடினேன." மலைகடந்துமருந்துதந்தேன்" என்பாரைப்போல, ஆற்றலுக்குத் தக்கபடி சிறிது கூறுவேன். கேட்பீர்களாக, ஓ! அந்தணாளரே! உணர்ச்சி தேய வரும்பிறப்புவேதனைக்கும், பொறிபுலன்மனமுதலியவெல்லாங்கலங்கி யுடல சோர வரும் மரணவேதனைக்கும மிகப்பயந்து, அவ்விரண்டையுமொருமிக்கத் தொலைக்கும வழி யெது வென்று தன்னிறம்பிப்பற்ம் நோக்கேடிச செலவவோனைப்போல வங்கேம்ச்

செல்வத்தேட்டமுடைய நீவிர்களாகிய வுங்கட்குச் சொல்லத் தக்கதோர் கதையுள்ளது; அது சுத்த மந்தனையும் அதிசீக்கிரத்தில் நிவாரணக்கிப் பக்குவம் வருவித்துப பிறவிநோய நீக்கி அமுத நிலையாகிய முத்திசித்திகளைத்தரத்தக்கது; கேட்டவர்கள் யாரையும மஹா புனிதராக்க வல்லது; சாவாநிலைக்கு வழிகாட்டியாயுள்ளது; சோகமோக மயக்கங்களை நாசஞ்செய்வது; அஞ்ஞானககாட்டுக்குப பெருந்தீயாயுள்ளது; ஞானமுதமழைபோல்வது பேரின்ப பிரவாஹமாயிருப்பது; எவ்வகைப்பட்ட பயத்தையு மொழிக்கும் நற்றுணையாவது; நினைக்க நினைக்க நெஞ்சுருகச்சுவைப்பது! சொல்லச்சொல்ல நாவினின்றமுதூறுவது; கேட்கக் கேட்கக் கிளாச்சரியா சுத்தைரியத்தை விளைப்பது, தருமங்களுக்கெல்லாம நிக்ஷேபம் போன்றது; செல்வங்களுக்கெல்லாம் காரணமாயுள்ளது; தேடுவார் தேடத்தக்க பொருளிதுவெனக்காட்டும தீபமானது, முன் சைவாசிரியராகிய ஸ்ரீநந்தியடிகள் அருளபெற்ற சனற்குமாரர் வழியில் வழங்கியது; சுவேதாரணியர் சரித்திரம் என்னும திருவெணகாட்டடிகளுடைய திருக்கதை இதனைமற்றக்கதைகளபோல நினையாது உள்ளுன்றிச் சிந்தித்தறியவேண்டும. யாவர்க்கு மஙகல முணடாகவென்று சொல்லலாயினர்.

## சிவபெருமான் திருவுலா வணணம.

ஐயா முனிவர்களே! முனனொருகற்பத்தில் புண்ணியமேலிட்டாற் குபேரபதவியைப்பெற்றிருந்த வொருவர், கீழ்ப்போன சனமங்களில் சரியை, கிரியை யெனனும் இரண்டுபாதஙகளையும அனுட்டித்து முறையே தாதமார்க்கம, சற்புத்திரமார்க்கஙகளைக் கடந்து பரிபாகியாய மேலயோகபாதத்தை அனுட்டித்துச் சகமார்க்கமடைந்ததால் சிவனுடைய தோழனெனறு உலகுபுகழச் சிவபெருமானிடத்து அனபும நண்பும பெருக வாழ்ந்திருக்குங் காலத்தில் ஒருநாள ஸ்ரீகைலாசத்திற்குச் சிவதரிசனஞ் செயயும்படி சென்றிருந்தார். அப்போது அஙகே, சர்வகாரணராகிய சிவபெருமானமேல நடக்குங் கருமத்தால் தாங்கொண்ட சகளகோலத்திற்கு ஏற்க; உலகில், இலீலாவிலாசமாக உலாவருமபடி திருவுள்ளத்தில் அருளிச்சைகொண்டு அபினயித்து; உலகமாதாவாகிய மஹாதேவியாருடன் கூடி, இடபாரூடராய் ஸ்ரீகணபதி, முருகப்பிள்ளையார், வீரபத்திரர், கூழமாண்டர், ஆடகேசுரர், காலாக்கினிருத்திரர், ஸ்ரீநந்தியடிகள், பிருங்கிமுனிவர், பிங்கிருடி, குண்டோதரர், கும்போதரர், யானுகமபர், சஙகுகன்னர்முதலிய பிரமதகணேசுவரர்களெல்லாம் ஜயஜயவெனறு புகழ்ந்து சேவித்துவர, கயிலைத் திருவோலக்கம் தரிசிக்கவந்திருந்த பிரமதேவர், விஷ்ணு, இந்திரன், ஆதித்தர், வசுக்கள், மருத்துவர், உருத்திரர் திக்குப

பாலகர், முதலியதேவர்களும், அகத்தியர், ததீசி, பிருகு,
கண்டர், வசிட்டர், அங்கிரா, பரத்துவாசர் முதலிய முனிவர்க
ளும், அரக்கர், இராக்கதர், கருடர், காந்தருவர், சித்தர், வித்தியா
தரர், இயக்கர், கிம்புருடர் முதலிய கணங்களும் புடைசூழ்ந்து
ஹரா!! ஹரா!! வென்று போற்றுதல் செய்யத் தமது அன்பின்
றோழராகிய குபேரனும் பிரியாநேயத்திற் றொடர எழுந்தருளி
வருகையில், வழிக்கணுள்ள ஸ்ரீ இமயம், மந்தரம், பசுபதீச்சரம்,
கேதாரம், காசி, ஸ்ரீசைலம், காளத்தி, வடவனம், காஞ்சி, அருணா
சலம், விருத்தகிரி முதலிய மஹாக்ஷேத்திரங்களின் விபவங்களைக்
கடாக்ஷித்து, எமது பிதாவாகிய வியாக்கிரபாதர் பேரன்பு செ
ய்து பூசித்திருந்து நித்தந் திருநடனங் கும்பிடுங்காரணத்தாற் பெ
ரும்பற்றப் புலியூரென்றோர் காரண நாமம் பெற்று விளங்கும் ஸ்ரீ
சிதம்பர மஹாக்ஷேத்திரத்தின் மங்களங்களை யனுக்கிரகித்துச்
சிதாகாச ரஹசியத்தை வெளிப்படுத்தும் திருச்சிற்றம்பலம் என்
னும் தெய்வத்தானத்துள் வீற்றிருந் தருளியிருந்தார்.

அந்த நாளில் தனதராகியதோழர், பெருமானுனையடைந்து
போக்குவரவு ஒன்றுமில்லாத பரிபூரணப் பொருளாகிய எம்பெரு
மானே! ஒன்றினும் விருப்பும் வெறுப்பும் தேவரீர்க்கில்லையாயி
னும் அடியோங்கள்வேண்டுவதை யளித்துக்குறைமுடிப்பதே திரு
வருளினியற்கை யாதலால் இனி மற்றைய திருப்பதிகளையுஞ் செ
ன்று, பெருமான் செய்யும் அருளப்பாட்டினைத் தரிசிக்கவென்று
என்னுள்ளத்து ஓராசையெழுகின்றதென்று விண்ணப்பித்தனர்.
அதுகேட்ட ஆளுடையாரும் தமது தோழனார் குறையை முடிக்
க திருவுளஞ்செய்து ஸ்ரீநந்திதேவர் முதலிய பிரமதகணங்களுந்
தேவர் முனிவர் முதலிய யாவரும் புடைசூழ்ந்து சேவித்துவரச்
சிதம்பரத்து நின்றும் எழுந்தருளி ஸ்ரீ சுவேதாரணியமென்னும்
வடமொழிப் பெயரையுடையதாய் நினைத்தவர்கள் பாவத்தையெல்
லாம் போக்கத்தக்க திருவெண்காடென்னுந் தலத்தை யடைந்
தருளினார்.

அப்போது, ஆளுடையார் பக்கலாக வரும் சகராகிய குபேர
னார், தமக்கு உத்தமசத்திநிபாதம் பிறந்து இனி ஞானசன்மார்க்
கத்தை யடையும் பருவம் சமீபித்திருந்தபடியால் அத்திருவெண்
காட்டருகு தேவர்களுலகங்களினுஞ் சிறந்த அழகுசெல்வம் வா
ய்ந்திருந்த காவிரிப்பூம்பட்டினத்தைப் பார்த்தார். அவ்வளவில்
அது இவர் கண்ணையும் மனத்தையும் கவர்ந்துகொண்டது. ஏனெ
னில், முன்னாளிலே தேவேந்திரன், தன்னுடைய தாயாகிய அதிதி
யானவள் சாயாவனமாகிய திருச்சாய்க்காட்டுக்குத் தினந்தோறும்
சிவதரிசனஞ் செய்யும்பொருட்டு வருவதைக்கண்டு, அவ்வருத்த

நீங்கும்படி அவ்வாலயத்தையே தன்னகரத்திற்கு எடுத்துச்செல்லவேண்டிவந்து ஆலயத்தினை அடியோடு பேர்த்தெடுத்தபோது, உலகெலாம் பெற்றமாதாவாகிய பார்வதியார் புறம்போந்து "கூகூ" என்றோசைகாட்டப் பெருமான் கண்டிந்திரனை எடுக்காதபடி தடுத்தருளி அவனுக்கும் அவனனைக்கும் பேரருள்செய்யப் பின்னர் பாகசாதனன் அங்கு முன்போல ஆலயப்பதிட்டை செய்யும்படி நகரமொன்றுகண்டு வேதியர் முதலிய உயர்வருணத்தார் நால்வரையுந் தந்து வசியர் மரபு மிகவுந் தழைத்தோங்க வளம்படுத்தி, சாயாவனத்து ஸ்ரீ அமுதவண்ணப் பிரானுக்கும் "கூகூ" வென்ற காரணத்தால் வழங்கும் "கூவென்றமென்மொழிப் பிராட்டிக்கும்" ஆலயஞ்சமைத்து, நித்தநைமித்தமுதலிய சிறப்புகளை வழுவாது மேன்மேலோங்க நடத்தித் திருப்பல்லவனீச்சர முதலிய மற்றவாலயப் பதிட்டைத் திருப்பணிகளையு நிறைவேற்ற வகுத்தனன்.

அப்பால் அந்நகரங் காலமுறையின் மன்னரின் மேம்பட்டு, அற்புதன் கயிலைப் பொறையினில் விளங்குஞ் சைவக்கோயிலால் விளக்கமுற்றபடியோ அச்சைவக்கோயிலை விளக்கவுற்றபடியோ அறியேன், அருமறையோதுங்கிடக்கைகளையும், அருநூல்பயிலு மிருக்கைகளையும், அந்தணர் வாழுமுறையுளும், ஆகுதிவழங்குந் துறைகளும், சிறம்புரியுமிடங்களும் பேறம்புரியுமிடங்களும், தூநலம் பெருகுஞ் சாலையுந் தேனலமருவுஞ் சோலையும், இருநிலம்புரக்கு மரசரணமனையும், அவ்வரசரைப் பிரிவருமெய்க்கலா பெயராச சூழலும், ஐவகைச்சுற்றத்தினர் அமர்மாளிகைகளும், உயர்ந்த துணையவா உவந்தமாடங்களும், நிலாமுற்றத்தொடு நிரைநிரைக காலதர், பலகணிசாளரம் பலபலவிசைநதன அரசிறைமண்டபம், அமைச்சியல்மண்டபம், முரசெறிமண்டபம், முன்றுமண்டபம், அத்தாணிமண்டபம், வித்தாரமண்டபம், சித்திரமண்டபம், விசித்திரமண்டபம், ஆராய்ச்சிமண்டபம், தேராயமண்டபம், பட்டிமண்டபம், குட்டிமமண்டபம், கலைபயில் மண்டபம், கழகமண்டபம், கல்விமண்டபம், செல்வமண்டபம், விநோதமண்டபம், மனோரதமண்டபம், சிலம்பமண்டபம், நியலறிமண்டபம், அலங்காரமண்டபம், ஆசாரமண்டபம், ஆடல்மண்டபம், பாடல்மண்டபம், தேவமண்டபம், சேவலமண்டபம் முதலிய மண்டபங்களும் அன்னசாலை, ஆயுதசாலை, ஏழுதகறிசாலை, ஏகாந்தசாலை, நாடகசாலை, பாட்டசாலை, மந்திரசாலை, யந்திரசாலை, தோணிசாலை, தோரணசாலை, வசந்தசாலை, வாகனசாலை முதலிய சாலைகளும் கணக்கறிதெற்றி, வழக்கறிதெற்றி, கூடத்தெற்றி, மாடத்தெற்றி, வாதத்தெற்றி, சீதத்தெற்றிமுதலிய தெற்றிகளும், நீதிமன்றம், நியா

ஊமன்றம், நல்லோர்மன்றம், வல்லோர்மன்றமுதலிய மன்றங் களும், தேவர்வாழ்பொது, காவலர்சேர்பொது, ஊரவர் தேர் பொது, சொலர்பேர்பொது, கற்றவர்முதலாம்றையா யரும் கெழும், கூடும் விததகப்பொதுக்களும், சதுக்கமுஞ்சந்தியும், விதப்பருமிடங்களும், செய்குன்றுகளும், திருந்துசூளிகைகளும் கோபுரநிலைகளும், கூடமாடங்களும், நெடுந்தேர்ச்சாலையும், கடும தயானைக்கூட்டமும், அடுபரிக்குதிரை மந்திரமும், பெரும்பேர் மற வர் சூழலும், திருந்து படைப்பலபயிலும்வீரர்பாடியும், தேரோட் டுஞ்சூதரும், களிறுநடத்து மாதோரணரும், பரிசெலுத்தும வா துவரு முறையுமுறையுளும், தேரோடுவீதியும், செண்டுவெளித்தெ ருவும், வேளாண் வசியர் தாளாண்மைகருதி வீறுசால் வீதியும், கூறுசாலகூலமும், ஆவணமறுகுங காவண நிலையும், பீடிகைத்தெ ருவும் மாடமாளிகைகளும, பொற்கருவூலம் பொலிமணிகருவைக ளும், சொற்பயில கம்பலைச்சூழலும் நீழலும், அணிபலபகல்செயும் அழகிய முனறிலும, யவனர், சோனகர், கவனமாமக்கர் சீனர், சா ளுவர், ஊணநாட்டினா, பல-தீவர், வஙகாளர், ஈழர், கொங்கணர், மாகதா, மச்சா, மிலேச்சா, வனவடுகர், பப்பரர், கூர்ச்சரர், பஞ் சகவுடர், அஙகர், வஙகா, அருஙகருநாடா, குட்டுவா, குடகர், ஒட்டர், பாஞ்சாலர் முதற்பெருநாட்டினர் விதப் பலசரக்கு, வே ண்டி வந்துலவும் நீண்ட பண்டசாலைகளும், சுண்ணஞ்சந்தநம வண்ணஙகலவை, நானமான்மத நல்ல வாசஙகள், தொடுபூவிடு பூதொடைலைககண்ணி, நறுவேர் பச்சிலை விரைபுகைவிற்பவர், காசுத் தெருவும, பட்டுபபருத்தி பலநிறக கமபலம், கட்டும்பட்டசாலியர் வீதியும, வயிரமாணிக்க மரகதம் பவளம், முத்துஙகுயிற்று மூழு வீதிகளும, அவரை துவரை உழுந்து பயறுமுதலிய முதிரை யும், நெல்லும புல்லும வரகுந்தினையும் சாமையும் சோளமுமாகி கூலங்களை விற்கும கூலவீதிகளும், பிட்டு முதலிய விற்கும் காழியர்வீதியும, அமபர் முதலிய விற்கும கூவியர் வீதியும், உப்பு விற்கும உமணர்வீதியும், சங்குவளை முதலிய அறுப்பார்வீதிகளும் களவிற்கும் கண்ணொடையாட்டியர்வீதியும, இலை கயிறு முதலிய விற்கும் பாசவர் வீதியும், தசசா தட்டாா கன்னர் கருமார்சிற்ப ரோவியா பற்பல தொழிலினர் வியக்கும கலஙகள செயது நயக கும் வீதிகளும், கைவினைமக்கள் வீதியும், துளைக்கருவியாகிய குழ லும், நரப்புகருவியாகியயாழ்முதலியவு மிசைகருஙகுழலருமபாண ரும்வாழும்வீதியும், தோற்கருவியாகியமத்தளமுதலியவுந்தாளமா தியவும் கொண்டு முழக்கும் குயிலுவரும், நின்று புகழுஞ்சூதரும், இருந்து புகழும் மாதகரும, வைதாளியாடும் வேதாளியரும், நாழி கைக்கணக்கரும, சாந்திக்கூத்தாடும் கண்ணுளரும், மதங்கரும்,

காவற்கணிகையரும், கூழக்கூத்தியரும், அகக்கூத்தாடும் பதியிலாராகிய ஆடற்கூத்தியரும், ஏவற்பெண்களும், வரியாசகஞ்செய்தாடி நகைப்பிக்கும் வேழம்பரும், மூங்கின்மேனின்றாடும் கழாயம்பரும் பிறதொழிலரும் வாழும் வீதிகளும், பண்டமாற்றுவார் செய்யும் ஓசை, கடலொடு மாறி யொலிக்கு மியல்புடையவாய மரமே காலாககட்டப்பட்ட நாளங்காடியும், கண்டவர் வியந்து மயங்க நெருங்கி யிருப்பதேயன்றி, பூதமொன்று தேவேந்திரனேவலேப்பட்டு முசுகுந்தனென்னும் அரசனுக்குவருமிடையூறு காக்கவந்து நிற்கும் அந்நாளங்காடித்தெருவிலுள்ள பீடிகையும, கரிகாற் சோழன் வெற்றியின்பொருட்டு வடதிசைநோக்கிச்சென்று பாரதேயமன்னரை வெற்றிகொண்ட நாளில், மனிதராலாக்கப்படாது தேவா கம்மியனாலாக்கப்பட்டு யாவர்க்கும் வியப்பினையுண்டாக்குமற்புதத்தனவாகியவற்றுள் ஒன்றாகி வச்சிரநாட்டரசன் திறையாகக்கொடுத்த நிழல பிரியா இரவையும பகலாக்கும முத்துப்பந்தரும, மகதநாட்டரசன் இறையாகத்தந்தபட்டிமண்டபமும, (இது, யாமிக்க கல்வியுடையோமென்று விருதுகூறிவந்தவரை யெல்லாமளந்தறிய வல்ல வித்தியாமண்டபமாம) அவந்திநாட்டரசன கப்பமாகத் தந்த வாயிற்றோரணமும, (இது, பகைத்தவரை யச்சுறுத்திநட்டவரை யாதரிக்க வல்லதாம) உடையதாயிருக்கின்றதுமன்றி, தாழிட்டவாயிலுங் காவலுமின்றிப் பல பண்டப் பொதிகளைப் பெயர் பொறித்து விடப்பட்டதாதலால யாரேனுங் களவினாலவற்றைக் கைக்கொண்டு சென்றால் கருதிய விடத்துக்கு அவர்களைப் போக வொட்டாது தடுத்துத்தன் வெளியிடத்தே தானே சுழன்று இடைக்கப்பண்ணி யினியாரும் களவென்பதனைக் கனவிலுங் கருதவொட்டாது செய்யும வெள்ளிடைமன்றமும, கூன்குருடு செவிடூமை தொழுநோயுமுடையார் சென்று வலம்வந்து பணிந்து முழுகினால் அக்குற்றம நீங்கி அழகும் வலியுமுடைய யாக்கையராக்கவல்ல பொய்கையையுடைய இலஞ்சிமன்றமும், மருந்தூட்ட வுண்டு மயங்கினரும் பித்தேறினரும் பேய பிடிக்கப்பட்டாரும் நஞ்சுண்டாரும் பாமபுகடிக்கப்பட்டாரும், பிறகாரணத்தால் அஞ்சினரும் வந்தடைந்து வலஞ்செய்து பணிய அவர்க்கத் துன்பமொழிவிக்கும் ஒளிநெடுங்கல் நிற்குமன்றமும், தவஞ்செயவாரைபபோல் அபிநயஞ்செயது தீயகாரியஞ்செயயும் பாதகத் தவசிப்பூனைகளும், கணவர் நம்புமபடி யிலலறதருமம வழுவாது நடத்துவாரைப் போற்காட்டித் தீயகாரியஞ்செய்யும் வஞ்சபபெண்டிரும், தம்மை யாதரிக்கு மிராசரை வஞ்சிக்கும் துட்டமந்திரிகளும், தமதுமனைவியை விட்டுப் பிறா மனைவியால் விரும்பிச்செல்லுந் தூர்த்தாகளும், பொயசாக்ஷி கூறுவாரும், பயன்பெறுங்காலத்தொருவர் பக்கத்

திருந்து புகழ்ந்து நின்று, பெறாத காலத்தவர் புழிதூற்றும் கோள ருமாகிய இவர்களைன் கைப்பாசத்தாற் கட்டுண்டு துய்ப்பபடுபவ ர்களாமென் றொருபூதம் பெருங்கூச்சலிடுலாவும் பூதசதுகக மும், அரசன் செயகோன்முறை பிறழ்ந்தாலும் நீதித்தலத்தில் நடுவுநிலை தவறினும் சாக்ஷியாக நாவினாற் சொலலாது ஒரு பாவையிருநது கண்ணீருகுத்துக் காட்டி யுண்மை யுணர்த்தும் பா வை மன்றமும் அமையவிளங்கியது. அன்றியும முத்து, பவளஞ சங்குப்பு முதலவாகும அலைதருபண்டத்தாலும, மயிற்பீலியானை சுகோடு தேனைகழைமுதந் முதலியவாகும மலைதருபணடததாலு ம், புலதேயந்தீவுகளிலுளள மணி பொன பட்டு முதலியவான க லந்தருபணடத்தாலும, குளிர் நனனீர்நிலை, பலபொருடபுதையல, பளிங்கு சிதவணணச்சிலையாதியாலும,நெல கமுகு வாழை கருமபு தெங்குபலாவாதிபயன செறிமரககா முதலியவறறாலும, ஏனைய மருத நிலந்தருபண்டததாலும,கவரி வறகலை பால் தயிா இழுது மு தலிய காடுதரு பண்டத்தாலும, குடை கண்ணாடி கருபபூரங கல வை வண்ணபபொனனுடை பணிமுதலிய நாடுதருபணடததா லும் குறைவற்ற தென்பூானேன் எநநகரததிறகு மெப்பொருளா லுங குறைவறுபபதாயுள்ள தென்பதே தேற்றம. என்னை? அஙகு வாழ்வாா ஒருபொருள் வேண்டி மறறெப்புறததும் புகாராகவே, அது பூம்புகார்ப்பட்டினமாயது எனவுமபொருள் படுதலால.

குபேரன பிறககுமபடி யிறைவா கட்டளை பெறறது.

இங்ஙனந் தேவரு முனிவரு மானிடருமவிழைவு கொள்ளத் தகக அறபுத மழகு செலவம வாயந்த ஆககாவிரிபபூமபட்டினம முன்னம இறைவர் வலிது சென்று ஆவணங்காட்டித தடுததாண் டருளபபெற்ற நமபி யாரூராகிய வன்றொணடப் பெருநதகை யார் திருவாரூர்த்திருப்பூங்கோயிலமாந்த வீதிவிடங்கப்பெருமான முதலடி யெடுததுக் கொடுத்தருளககொண்டு பாடியருளி வைதத திருததொண்டத் தொகையாகிய கருவூலதது அமைந்த பொன் னன்ன வெமது இயற்பகை யடிகள் திருவவதாரஞ் செய்யபபெற் றுள்ள தாதலால், தன்னைக்கண்ட சிவதோழனாகிய குபேரனா மனத்தையுங கண்ணையும கவர்ந்ததேயன்றி யவா தனனை விட்டுப் பிரியாவகையும் பிணித்துவிட்டது. ஆகவே, அவ்வசசிர வண்ணர் தம்மைத் தோழமை கொண்டாண்ட தேவர் பெருமான் திருவடி களில் பலகாலும விழுந்து பணிந்து எழுந்து துதித்துநின்று, "எம் பெருமானே! இத்தெயவத்திருப்பதி யாதுகாரணமோ யான் தன் னைவிட்டுப் பிரியாவகையோராசையைத்தூண்டி என்னை முற்றும் வசஞ்செய்துகொண்டது; திருவுள்ளமானால இங்கு சிலகாலம வசிக்கப் பெறுவேனாகவென்று விண்ணபபஞ்செய்தார்.

அதுகேட்டருளிய நமதாண்டவரும் மேலநடக்குங் கருமங் கருதி, அக்குபேரனை நோக்கி, ஐய, நீ போக தனுவுடையவனாய ப்போக பூமிவாழ்கின்றனே, இக்கருமபூமிவாழ்க்கை விரும்புவ தடாதாயினும் விருப்பம விளைந்ததால "அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்தவாஅ பிறப்பீனும்வித்து" என்றதற்கு ன்முடிபு ஆகவே மானுடயாக்கையை யடைந்து இங்கு வாழ் தியென்றருளிச்செய்தனா.

அப்போது, தனதனார், பிறத்தலுக்கஞ்சி நெஞ்சுது ணுக்குற் றுடல பதைக்கப்பணிந்து நின்று, எமமுடையாய! முனவினை யிருந் தவாறு சிறிதுமறியேன; இஙஙனம விளைந்தது. இனி யென செய கோ! எமபெருமானே! பேயுமபிரிவதற்கியையாத திருததொண்டி னிலைமை பிரியச்செயத பெருந்தீவினையுடையேன, பேதைமானுடப் பிறப்பினை யடைநது செல்வததான மயங்குமவழி, தேவரீாமேலே பானமுனை விளையாதபடி கானமுனையாகவந்து அவலமறுததுண் மைநிலையனுக்கிரகித் தருளவேண்டுமென்று பலமுறை வணஙகினா ா. வணஙகிய தோழனை யவ்வாறாக் வெனறருளிபபெருமான, உ லகமெல்லா மீனறருளிய பெருமாட்டியாரோடு மறைநத திருப் பதியாவுங கணடு சென்று கைலைபுககு வீறறிருநதருளினா.

பட்டினததுபபிளளையாா திருவவதாரம.

கேடமினகளோ முனிவாகளே! அபபால அககுபேரனா மூவ ருங் கடகக முடியாத சிவபெருமான திருவாணையைக கடப்பதற் கஞ்சி, "செங்கெலாலாய செழுமுனைமீட்டுமச - செஙநெலேயாகி விளைதலா - லங்நெல் - வயனிறையககாயககும் வளவயலூா-மகன றிவு தநதையறிவு" என "அறநூல" வகுததலின யாவாபாறசெ ன்றுசெனனமடைவோமெனற விசாரததுடனிருககையில, அத் தெய்வப்புகாாப பட்டினததொருசாரில, அந்நகர வூசியமாபி லவ தரிததுப் பொனனைததேடி வளாப்பதுபோலவே தருமம, புகழ, ஒழுககம, அறிவு, அன்பு, அடககம, சிவபததி, அடியார்பத்தி, குருபத்தியையும் தேடித, தொகுததுவைதத சரககறைபோல விளஙகும் சிவநேசரென்பவா, திருமகள்விழையுமழகும, கலைம கள் புனையும் அறிவும, மலைமகளருளும அழகும அமைநது, "தெ ய்வந்தொழாள் கொழுநறறொழுதெழுவாள் - பெய்யென்ப்பெயயு மழை" எனறமுதுவோா மொழிககு, இலககியமாகி யருந்ததியும வணஙகுங் கற்புடையராகி இருபெருஙகுலமும் விளககவந்த ஞாந கலாம்பையென்னும் மனைவியாரோடும் கூடித் தேவர் பூசை, பிதி ரர்கடன், விருந்துபசரித்தல, பல்லுயிரோம்பல், பழமறை பயிறல் முதலிய ஐவகைவேள்விகளும வழுவாது நாடோறும் நடத்திஇல

லறம் புரிந்து ஒரே பெண் மகப்பேறுடையவராய் வாழ்ந்து வரு. நகாலத்து ஆண்மக்கட்பேறின்றி மிகவருந்தி மானிடப் பிறப்பினை யடைந்தவிவிறுற இறந்தோர்க்கு, இம்மை மறுமையென்னு மிருவகை யின்பமும பயத்தலால, "பெறுமவற்றுள யாமறிவதிலலையறிவறிந்த மககடபேறலலபிற" என்றது தமிழவேதமனனருளணணியெண்ணி நெடுமூச்செறிந்து நெஞசமபுண்ணாகி யென்செயக்கடவோம என வருந்தி, அவ்வில்லறகிழவோா இருவரும, விளககு நிலையொடு விரிசசியாராயநதும கட்டு வைபபிததும கணககுயததுணருங கண்ணுடைசசோதிடநாடியும, புணணியதீாததம பொருநதியாடியும, தரை மெழுகி யுண்டு தவம பலபுரிநதும, புழுதிபடகிடநது போகநதுறநதும, பகலுணா இரவுணாபட்டினி புரிநதும, அருநோன்பு செயதும பெருவேள்வியாறறியும், மாதவரைப பேணியும ஆதுலரை யளித்தும, வானவரை வழிபடடுந தானமது பலசெயதும, அறவரை யடைநது நெறிமுறைபணிநது, சுவலைகளறததினரு சிவகதை கேட்டும, உலகினையளநத நெடியமால முன்னே, ஒருமகன வேண்டிப பெரியமாதவஞசெயது, பூசைபுரிந்தாசனை யமமுறை, கந்தனெனநதையொடு கவுரியெனனமமை, பநதமாவைதத படி யருசசிததும அநதசிாகேடடும ஆதரிததிருநதும, பன்னாளுழந்தனரினனோவிரதம.

அதுநோககிக குபேரனும, இவாகளிடத்து நாம மகவாகப பிறபபதே பெருநனமை, அறிவொழுககங்குறையாது வளரும, அறமபெருகும பாவந்தேயுமெனறெண்ணிச சிவ்ததியானத்தோடும அநத ஞானகலாமபையாருடைய கருப்பததிற பிரவேசிததனா. அப்போது அவ்வம்மையாா முததுககளைககருவில வைத்த செலவச்செஙகரும்புபோல வயிறுவாயதது விளஙகினா. அதனைக கேளவிபபட்டு சுறறததினரும், நட்பினரும், அயலாரும, பிறருங காாபபருவங்கண்ட கலாபமயிலாயினர். புதலவாப்பேறுவேணடிய விருவர்க்கேயன்றி யூரிலுளளாா பலாககும நறகனவுகாணல், இழநத பொருளைப்பெறுதல, சிறுமுயற்சியாற் பெருமபயன பெறுதல பகைவர் வலிந்துவந்து உணமையினடபுகக‍ொளளுதல், கருததினறிச்சிவத்தியானம் புண்ணியசிந்தை யுளளககிளாச்சி யுண்டாதல முதலிய பல நற்குறிகளுண்டாகவே, யாவரு மிககருவினகணுள்ள சிசுவினால் பெற்றோாக்கும் மற்றோாககும பெரும்பயன விளைவுண்டாமபோலுமென்று சிந்தித்துக்களிததிருந்தனர். மாதம் வளருந்தோறும், சிவநேசனும புமஸவனம் சீமந்த முதலிய கருப்பக்கடன்களை நிறைவேற்றிவநதனர். ஞானகலாம்பையாரும் கருவளரவளா மேனி விளர்த்துப் பச்சை நரமபோடிக்கண்பசந்து குழிய

மயக்கப்பொயத்துயில்கொண்டு புளிக்குடியும விரும்பிச் சிவசிந்
னையோடும் அககருவைபபோமறிவந்தனர்.

இஙஙனம பத்துததிஙகளு மாகவே நல்ல திவாரநக்ஷத்திர யோககரண மமைநத தினததில ஐநதுகோள்களுச்சமாய 'டற் றவையோடு திரிகோணகேநதிரஙகளி லமையச் சுபலககினததில் வலமபுரிசசஙகம ஒளியொருநதிய நல்ல முததினைப பெற்றுறபோ லும பாற்கடல் சநதிரனைப் பெற்றும்போலும அந்த ஞானகலாம பையானவா புததிரனைப்பெற்றா. உடனே தேவர் பூமழை பொ ழிந்தனா தேவதுநதுமி முழஙகிற்று; இளநதென்றற காற்றுவீசிற று; கூவலகுளமு ஒடைகயம் முதலிய நீாநிலைகள தெளிவை யடை நதன, ஆகாய மறுவின்றி விளஙகியது; காரணமின்றி யெலலா வு யிாகளுககும உளளக கிளாசசியும ஊககமும களிபபும் பொஙகி யெழுந்தன; மரமுதலிய வோரறிவுயிரும பருவஙகடந்தவாயும தளிாததுப்பூததுச சிறநதன;யாவாககுஞ சிவஞானமும பததியும அனபும அடியவர்கள்பால் ஆராதகாதலும் பெருகியது,சைவர்கள வலததோளுங கண்ணுநதுடிததன. பெற்றவாகள் களிபபை யென் னென்று பேசுவது; சுற்றமுதலிய மறறவாகள் வாராதவாழவு வா யததவாகளானார்கள; அதுகணடநககாததிலுளள அறிவமிகக மு தியோா யாவரும ஆநநதமடைநது சிவபுண்ணியமெலலாந்திரண டொருவடிவமாயிறறோ? சிவஞானம யாமபெறவேணடி யிவவாறு வநததோ? சிவன்றிருவருளிஙஙனம் தடுத்தாளககுழநதை வடிவில வந்ததோ வென்று அதிசயித்துத் துதித்து னிறாாகள்.

உடனே வேளாணமையிறசிறநத பிதாவாகிய சிவநேசனு ரும தெயவககாவிரியாறறிறகுசசென்று நீராடிப் பிதிரதேவதை கள களிபப நீாககடன முற்றி மனைபுகுநது சுருதிமிருதிகளைக கற றுங கேட்டு முணாநத முதுமறையோாகளை யழைப்பித்து, விதை வழங்கி நவமணிகளையும பொன்னையு நிலததையும பிறவற்றையும தானமாககொடுதது, யாவாககும முபபழங்கண்டு சாககரைதாம பூவும் பகிர்ந்தளித்து,அனனதானமுதலிய சிறப்பச்செயது தேவா லயத்துச செல்வ விழாவும பூசையுங குறைவற நடததுவிதது, ஏழைகள அனைவர்க்கும் வேண்டியவாறு குறைவறுததுபகரிதது, நலல கணித முணர்ந்த சோதிடாகளால்சாதகருமஞ்செய்வித்து,ம னைத்தெய்வச் சிறப்புப பூசனையும் வேள்விச்சாந்தியு முடித்துப் புத்திரப்பேறு திருவிழாகொண்டாடினா. அப்பால் பததுநாளும் தணெணய் விழாமுதலிய சிறப்பச்செயது பதினோராநாள் பெற் றோ ரிருவரும் நீராடி மகவாகிய மணிக்கும் நீராட்டிப்,பொட்டிட் டுகைகொட்டிச்சிறகிடத்தி தெய்வககாப்புச்செய்து நல்லோரையில்

பந்துக்கள் வேதியர் முதலியோர் புடைசூழ விருந்து, விதிப்படி திருவெண்காடர் என்று நாமகரணஞ்சாத்தி அருமைபலசெய்தார்கள். அச்செல்வக்குழந்தை தொட்டிலிற்கிடந்து, அம்மையப்பரைப் பிரிந்து வருந்துமக் குறிப்பு வெளிப்பட அழுதும், இனிப் பாசப் பிணிப்பையும் மயக்கப்பற்றையு முதறி யுதைத்துத் தள்ளுங்குறிப்பு வெளிப்படுத்துவதுபோற் கையுதறிக் காலுதைத்து ஆடியும், உலகர் பேயமதிகண்டு நகைப்பார்போல் நகைத்தும், பிறவித் துன்பத்திற் கஞ்சுவார்போலஞ்சியும், மயல் கவிழ்குறிபோல முகங் கவிழ்ந்தும் அருளொளிகண்டு தலையெடுத்தசைத்தாடுமது போல விளக்கொளிகண்டு தலையெடுத்தசைத்துச் செங்கீரையாடியும், மேற்சிவயோகத்திருக்குஞ் செய்தி வெளிப்படவிருந்து சப்பாணிகொட்டியும், தாய்முகநோக்கிப் புன்முறுவல் செய்து முலைநெருடி யுண்டும் மகிழ்செய்யும். இங்ஙனமாக அருமகப்பெற்றோரும் பெருங்கற்றோரும் பூரணசந்திரனைக்கண்ட சமுத்திரம்போல மகிழ்ச்சி பொங்க நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக அச்சைவக் கொழுந்தாகிய பிள்ளைப்பெருந்தகையை வளர்த்து நான்காமாதத்திற் சந்தி மிதிப்பித்து ஆறாமாதத்தில் விதிப்படி உருத்திரப் பலகணத்தாராகிய சிவனடியாரை உண்டி வினையாதியாற்பூசித்து, அம்மாஹேசுவரப்பிரசாதத்தால் அன்னப்பிராசனஞ்செய்வித்தார்கள்.

அப்பால் தவழ் பருவங்கடந்து தளர் நடைப்பருவமடைதலும் கொந்தளமாகிய சூழியம் விளங்க, காதிற் சிறுகுதம்பை யூசலாட, மார்பிலைம்படை மதாணி முதலாரங்கள் மழலை வழிவோட முகுசெய்யக் கையிற் சடகமின்ன, அரையின்மணிக்கோவை சிறந்தோசைசெய்யக் காலிற்சிறுசதங்கையோடு தண்டைகலீரென வொலிப்பத் தத்தடியிட்டு நடந்தும் ஓடியும், வீதியிற் சிறுதேருருட்டியும், பேதைச்சிறுமியரிழைத்தாடுஞ் சிற்றிலழித்தும், நற்றாய் செவிலித்தாய், கைத்தாய், ஊட்டுந்தாய், சேடியர், சிலதியர் பாங்கியரொடு பின்சென்று அழைப்ப ஓடியொளித்தும் வந்து மேல் விழுந்து முத்தமளித்தாடியும், ஊரினர்கண் யார்க்கும் காமப்பகுதி வெளிப்பட நமது திருவெண்காடர் விளையாடியருளினர்.

சிவநேசர் சிவபதப்பேறு.

இங்ஙனமாக, "மக்கண்மெய்தீண்ட லுடற்கின்பம் மற்றவர்சொற் கேட்ட லின்பஞ்செவிக்கு" என்ற திருக்குறளிலக்கியமாம்படி தாய்தந்தையரிருவர்க்கு மின்பம் விளைய இவ்விளைய பெருந்தகையார் அன்பு, அறிவு, அடக்கம், ஆசாரம், நிராசை, சத்தியம், தவம், ஆராய்ச்சி, சிவநேசமுதலியவெல்லா முடன் வளர வளர்ந்து ஐந்து திருவயதடைந்தார். அக்காலத்தே, தந்தையாகும்படி தவஞ்செ

த சிவநேசனார், அம்மைந்தர் வரலாற்றை முற்றுங்கண்டு களிக்கப்பெறாது வினையத்தாராய்த் தேகவியோகஞ்செய்து சிவபதம் பெற்றனர்.

அப்போது அவர் மனைவியாரும் சுற்றத்தினரும் நட்பினரும் கடலென மறுகினர். பின்பு குழந்தைப்பருவத்திருந்த திருவெண்காட்டையர், அன்னையா ரேற்படி சுற்றத்தார் சார்புபெற்றுப் பிதாவுக்குச் செய்யவேண்டிய நீர்க்கடன் முதலிய யாவும் நூன்முறை தவறாது செய்து முடித்தனர்.

பிள்ளையார் வித்தியாப்பியாசம்.

அப்பால் கணவனை யிழந்த அத்தாபத்தசளாகிய தாயார் தமது தவப்பயனாகிய மைந்தர்பால் ஆராத காதலையுடையராய் வளர்ப்பவர், மகனார் கல்வி பயிலத்தக்க பருவம் வந்திருப்பதை யுணர்ந்து பலகலைகளையு முற்றுமுணர்ந்த நல்லதோர் வேதியரை வருவித்து, அவரை யுபசரித்துவேண்டுவன வெறுப்பக்கொடுத்து அவரிடந்தமது புத்திரரை யோதுவதற்குப் பள்ளியில் அமைத்தார். திருவெண்காடரும் தவக்குறை முடிக்கவந்தவராதலால், அவ்வளவில் கண்டவ ரெல்லாரும் வியக்கும்படி சிறிததமாத்திரையில் ஆசாரியர் முன்னிலையாகவெல்லா நூலையுங் குறைவற வோதிமுடித்து, முற்று முணர்ந்தவர்களில் முதல்வராக விளங்கி யிருந்தனர். அவருக்குப் பூர்வவாசனையால் சிவஞானந்தானே விளங்கியது, சிவபத்தி, அடியார்பத்தி, ஜீவகாருணியம், உலகிடையப் பற்றுக்களில் மனஞ்செல்லா தருவருத்தல் முதலிய பெரியோரொழுக்க முழுவதும், அப்பிள்ளையாரை யடுத்தவர்க்கும், அவர் சரிதங்கண்டவர்க்கும் கேட்டவர்க்கும் இயற்கைக்குணம்போல அமைய விளங்கி வந்ததானால் அவர் செய்தி யித்தன்மைத்தென்று வேறு கூறுவானேன்.

பிள்ளையார் வஸ்துவிசாரஞ்செய்தல்.

ஆகவே அவ்விளம்பருவத்தினராகிய திருவெண்காடருக்கு முற்பிறப்பின் றொடர்ச்சியால் சிவபூசையிற்பற்றும் விருப்பமும் மனத்தின் றோன்றச் சிந்திக்கலாயினர்.

எங்ஙனமெனில், கண், வாய், மூக்கு, செவி, குதம், குறியெனனும் ஒன்பதுவாயிலாலும் மலசலங்களை யொழுகச்செய்கின்ற இவ்வுடம்பு புழுக்களால் நிறைந்த பாண்டம்போலும் அருவருப்புள்ளதாய் ஒருகணமு நிலையென்று கொள்ளக்கூடாததாய்ப் பல துன்பங்களுக்குஞ் சரக்கறையாயுள்ளது. இவ்வுடம்பினை முன்னம் தாய் நமது என்பாள், தந்தை நமது என்பான், மனைவி மக்

கள் முதலிய சுற்றத்தினர் நமது என்பார்கள், ஒழியாத நோய்க ளோ நமது நமதென்று நலிதலுறக்கொண்டு நிற்கும்; பின்னரோ வெனில், நாய் நமது என்னும், நரி நமதென்னும், காகம்-கழுகு-பருந்து-பேய் - கூளி முதலிய நமது நமதென்னும், இடையிடை யே யானு மென்னதென்தென்றிருப்பேன். யோசிக்குமிடத்தில் இது யாருடையதோ? என்போல நின்றொத்ததனைப் பெருட்டமைப்பு, எவ்வாறாய் விட்டது? என் கண்காண முன்னர் என்ன வுபசாரத்திருந்து பின்னுல் இழிக்கப்பட்டு எடுத்தெறிகிடத்தியும் புரட்டியும் அப்பா ஐயா வென்ற சொல்லை மறந்து பிணமென்றழைத்து எடுமென்றும், இடுமென்றும், சுடுமென்றும், மண்ணிலிட்டும் தீயிலிட்டும் வீணே கழிக்கநேர்கிடந்ததே, என்னபயன் பெற்றது? கருவொழியக் குழவிப்பருவத் தழிந்ததோ கோடி; குமரப்பருவத்தழிந்ததோ பலகோடி, கிழப்பருவத்தழிந்ததோ கணக்கில்லை, அதுநிற்க. இந்தப்பாடு, இவ்வோருடம்புடனே யொழிந்தவாறு, அல்லவோ சமுத்திரதரங்கம்போல எத்தனைப்பிறப்புப்பிறந்து எத்தனை பாடுபட்டவாறு யுளது; கல்லாய்ப் பிறந்து கடந்தது கோடி, மாடாகிநின்று கழிந்து கோடி; புல்லாய்ப்பிறந்து புலர்ந்ததுகோடி; பூடாகித்தோன்றி மடிந்ததுகோடி, புழுவாய்ச்சனித்து மரித்ததுகோடி, பல மிருகமு பாம்பாகிப்பட்டதுகோடி, பறவை மீன் வாசகமாம்பாடதோ கோடி; அலகைப்பேயாகி யலைந்ததோகோடி, அரக்கரொடு தேவராய அருமுனிவராகி, நிலைகுலைந்து நெறிமயங்க நோந்ததோகோடி; நினைக்க நினைக்க ஐயோ!! நெஞ்சு துடிப்பதுவே! இதுவன்றியும் இவ்வுலகத்தின் கண்ணே ஒவ்வொரு உயிர்களும், எறும்பு முதல் யானையீறாக அண்டசம், சுவேதசம், சராயுசம், உற்பிசம் என்னும் நால்வகை யோனியுள்ளும், தேவர், மானிடர், விலங்கு, பறவை நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம் என்ற வெழுவகைத் தோற்றத்துள் எடுக்காத யாக்கையில்லை, கிடக்காத நிலமில்லை, படுக்காதபாயில்லை, அடுக்காதகாலமில்லை, பெறாததாயில்லை, உறாதசுற்றமில்லை உண்ணாத வுண்டியில்லை, பண்ணாத தொழிலில்லை, எடாதவெடுப்பில்லை, படாதபாடில்லை அந்தோ!! என்செய்வோம் உறங்குவதையும் விழிப்பதையு மெண்ணிப்பார்த்திரங்குவதென்னே? மறப்பது நினைப்பதுமே செத்து மறுபிறப்பாவதாயிருக்கின்றது. இவ்வகைத்தாக இடையிட்ட காலமோவெனில் பசி, தாகம், நித்திரை, சோகம், மோகமுதலியவற்றுள்ளும், அவற்றைத் தணிக்கும் வழி தேடு முயற்சியுள்ளும் ஒவ்வொன்றுனே ஒழிவதாகவிருக்கின்றது. ஆனுல், எக்காலத்தில் இப்பிறவிப்பெருந்துன்பத்தினையொழிக்கவல்ல திருவென்றறிவதும், அறிந்தவற்றைக் கடைப்பிடித்துச் செய்வதும், ஐயோ! என்செய்வோம்! என்று இரங்கி அழுதழுது. வாடிவருந்தி

க்களைப்பு மிளைப்புமுற்றுக் கையறவடைந்து, "பிறப்பென்னும்பே
தைமை நீங்கச்சிறப்பென்னுஞ்செம்பொருள் காண்பதறிவு" என
று, சிந்தித்துச்சிந்தித்து, "கடலைவாழ்வு கொண்டென செய்திரா
நாணிலீர், சுடலை சேர்வதுசொற்பிரமாணமே, கடலினுஞ்சமுத்து
ண்டவர் கைவிட்டால், உடலினார் கிடந்தூர் முனியன்றமே" ஆ
கையால், "பூக்கைகொண்டரன் பொன்னடி போற்றிலார், நாக்
கை கொண்டரனும நவிற்றிலார், யாக்கைக்கே யிரைதேடி யல
மந்து, காக்கைக்கேயிரையாகிக்கழிவரோ." இவ்வுலகத்தறிவிலா
தவர். அவர்களைப்போலவே "வாழ்த்தவாயு நினைக்கமடநெஞ்சும்,
தாழ்க்கச்சென்னியுந்தந்ததலைவனைச், சூழ்த்தமாமலர் தூவித்துதி
யாதே, வீழ்த்தவாவினையேன்நெடுங்காலமே." என்று ஆராமை
மேற்கொண்டு, "கறுக்கொள்வன வாயுள நாவுள, இட்டுக்கொள்
வனபூவுள நீருள, கறைச்செஞ்சடையானுளனுளோம்—எறுக
கோ நமனால் முனிவுண்பதே" என்று சிவபூசை செய்யநெஞ்சிற்
றுணிவுகொண்டெழுந்தார்

இங்ஙனம் விசாரத்தால் மனங்கரைந்தெழுந்த திருவெண்கா
டனார், இனி பூசிக்கப்படும் சிவலிங்க வியல்பினையாராய்ந்து "மலர்
ந்த வயன்மாலுருத்திரன் மகேசன்-பலந்தருமைம்முகன்பரவிந்து
நாத-நலந்தருஞ்சத்திசிவன்வடிவாகிப - பலந்தருலிங்கம் பராநந்தி
யாமே." என்னுமாகமத்துணிபுணர்ந்து, இத்தகையசிவலிங்கத்தினை
நாமெவ்வாறு பெறுவது, எவ்வாறு அருச்சனைசெய்வது, இக்கரு
மங் குருமுகத்தாலன்றி முடியாதே "நேயத்தேநிற்கு நிமலன்மல
மற்ற-நேயத்தைநல்கவல்லோனித்தன்சுத்தனே - ஆயத்துவாத்த
துவமுணர்ந்தாங்கற-நேயாக்களிப்பவனீடுங்குரவனே" என்றெ
ண்ணி மனங்குழைந்து, 'பரிசனவேதிபரிசித்ததெல்லாம்-வரிசை
தருமபொன்வகையாகுமாபோற - குருபரிசித்தகுவலயமெல்லாம்-
திரிமலந்தீர்ந்துசிவகதியாமே." என்று குருமகிமையைத்தியானித்
து, அந்தோ! வாழ்நாளவீணாகக்கழிகின்றதே தேசிகோத்தமனது
திருவடித்தீர்த்தமும், பரிகலச்சேடப்பிரசாதமும் என்று பெறுவோ
ம? என்னைக்கொண்டு தன்னையளிக்கும் எம்பெருமானார் எப்போது
எழுந்தருளுவார்? எவ்விடத்தி லெழுந்தருளுவார்? என்செய்தால்
வருவார்? குருநாதன் திருவடியன்றி வேறு தாரகமுள்ளதோ மக்க
ளுயிர்க்கு? "பத்திபணித்துப்பரவுமடிநல்கிச்-சுத்தவுரையாற்று
ரிசறச்சோதித்துச் - சத்துமசத்துஞ்சதசத்துங்காட்டலாற்-சித்த
மிறையேசிவகுருவாமே.", சுத்தசிவன்குருவாயவந்து தூய்மைசெ
ய்-தத்தனைநல்கருள்காணவதிமூடர்-பொய்த்தருகண்ணால்நமரென்
பர்புண்ணியர் - அத்தனிவனென்றடிபணிவாரே." குருவேசிவ

மொக்கூறினன்நந்தி - குருவேசிவமென்பது குறித்தோரார் - குருவேசிவனுமாய்க்கோனுமாய்நிற்குங் - குருவேயுரையுணர்வற்றதோர்கோவே." என்று துதித்து, என்னையடிமைகொள்ளுஞ் சற்குருசிகாமணியெந்தத்திசையாக வெழுந்தருளுமோ வென்று பேழ்கணித்துருக்கக்கரைந்து, நாம்பெறத்தக்க பேறெல்லாம் குருபரன் திருவருளொன்றேயன்றே அதுபெற்றால், "சித்திகளெட்டொடுந் திண்சிவமாக்கிய - சுத்தியுமெண்சத்தி தூய்மையும் யோகத்துச் - சத்தியுமந்திரசாதகபோதமும் - பத்தியுநாதனருளிற்பயிலுமே" என்றபடி பெறுக வொன்றுந் தோன்றாது உணவிலும் நித்திரையிலும் இச்சையு முயற்சியும் வரவரக்குறைந் தொருநாளிரவிற் சோர்வுற்றிருந்தாராகப், பெற்ற அன்னையார் தம்மிளமைந்தர் மேனியிளைத்து வருவதையும், உண்டியுறக்கங் குறைந்து வருவதையுங் குறிப்பினுணர்ந்து சிந்தித்திருப்பவர் அன்றுமிக்க சோர்ந்திருப்பது கண்டு வருந்தி அருகணைந்து நின்று, அப்பா! குழந்தாய்! வரவர மேனியிளைத்தனை! உனக்கின்றுவந்த சோர்வென்னை? உன்னைக் கலிதீர்க்கவந்த கருவூலமென் றெண்ணியிருக்கின்றேன் ஐயோ! வயிறுகுழைந்து வாடுகின்றதே! உண்ண வெழுந்திரு ஐயனே! என்று அழைக்கக்கண்ட பெருந்தகையார் குருமோகங்கொண்ட குணக்குன்றமாதலால் உண்டி வினையிற்சிறிதும் மனவூக்கமின்றித் தாயே! எனக்கின்று பசியில்லை யாதலால் நீர் வருந்தாதிரும் நானே யுண்பேனென்று மறுத்தவரைப் போவுழிப்போகவிட்டுச் சிவசிந்தனையோடும் படுத்துறங்கிக்கிடந்தனர்.

பட்டினத்தடிகள் கனவில் சிவானுக்கிரகம்பெறல்.

அங்ஙனமிருக்க, இவரை முன்னமே தடுத்தாளும்படி திருவருள் செய்திருந்த பெருங்கருணைக்கடலாகிய சிவபெருமானார், இவரது பருவத்திற்குமேற்பட்ட விசாரமும், ஒழுக்கமும், அன்பும், அதிதீவிர நிலைமையுநோக்கித் திருவருள் கூர்ந்து, அன்றிரவிலிவரது கனவில் ஆயிரம்பிறைகண்டோர் முதுவேதியராயத் திருமேனி முழுவதும் வெள்ளிமுளைபோன்ற நரையும், அழகின் கடலலைபோலுந்திரையும், திருமுடிநிலவுமுதொழுகப்பூசினாற்போலும் புண்ணியப்பூச்சும், ஒருதலைமறைத்தபிறைபலதலை வெளிப்பட்டாற்போலும் புண்டரமும், கண்டத்தே யொளித்தகாளவிடந்தானணி பெற அகமணியாய் வெளிப்பட்டுச் சூழ்ந்தாற்போலும் விளங்கும் உருத்திராக்கத் தாழ்வடங்களும், திருநீற்றுப்பொக்கணமும், கையிற்கோலும் மார்பினூலும் அழகுக்கழகு செய்வதாக அருண்மேனிசாத்தி வந்தெதிர்நின்றருளி முன்னே புன்னகைசெய்து மூவர் பிழைப்ப முப்புரஞ்சுட்டதென்ன, அன்று இன்னகைசெய்து

மெய்யறிவின்பம் விளைந்து மும்மலப்பிணைக்கறச் சுட்டுக் கனிவருள் செய்து, ஐயா! குழந்தாய்? வெண்காட! மேனி யிளைத்தனையோ! என வருடலும், பிள்ளையார் துணுக்குற்றெழுந்து அக்கணமே நல்லாக்க காந்தங்கண்ட இரும்பென்னக் குழைந்துருகித் திருவடிப்பற்றிப் பன்முறையும் அட்டாங்க பஞ்சாங்க விதியிற்பணிந்து கண்ணொற்றித் தலைமுடித்து மணமோந்து அள்ளிமுத்தங்கொள்வாராய் முகமொற்றி ஆராதகாதலால் அழுது தொழுது ஆடிப்பாடி இன்னின்ன நகையோ டுளவெல்லாமெழ நாத்தழுதழுக்கத் துதித்து நின்று ஆற்றாமை மேலிட்டுச்சொற்குழறச்சொல்லுவாராயினார்.

எம்பெருமான்! எங்குற்றது, இங்குவர எத்தவ முடையேன் என்செய வல்லேன், என்செய்க்கடவேன், இனிப் பிரிந்தாற்றேன், எம்மிறையே! எம்முறவே! எம்முயிரே! என்னுடலே! என் வாழ்வே! என்னரசே! என்னையா! என்னப்பா! என்றுயே! என் னறிவே! என்றவமே! என்பயனே! என்பயனே! என்குருவே! என்கோவே! என்னுடையாய்! என்னுடையாய் கைவிடேல்! கை விடேல் என்று பாதம்பற்றிப் பரிதபித்தலும், வந்த ஐயா, இவர் அன்பு அமுதாரவுண்டாராய்க் களித்து, சிறுவ! என்னைய! நின்முத வர்சக மினிதினிது. நெஞ்சாரச் சுவைத்தன மென வின்மொழி கூறி அவர் கருத்தினுக்கிசைந்த வண்ணராகத் திருக்குறிப்புக் காட்டி நிற்றலும், திருவெண்காட்டடிகள் மீட்டும் வணங்கி நின்று, எம்பெருமானே! இன்றன்றோ நல்லநாள் யான் பிறந்த நாளானது, இன்றன்றோ வென்னுடம்பு நலனுடம்பா யிசைந்தது, இன்றன்றோ யான் செய்தநின்றவமா யேறுற்றது, இன்றன்றோ என்னெஞ்சம் நன்னெஞ்சமாயிற்று, இன்றன்றோ என்னுறவு நல்லுறவாயேற்றமுற்றது, இன்றேகொண் என்னீன்றாரு மீன்றாருமாயினர், இன்றேகொண் என்குடியு மினியகுடியேயாயிற்று, அப்பனே, "போகம்வேண்டி வேண்டிலேன் புரந்தராதியின்பமும், ஏகநின்கழலிணையலாதிலேன் எனெம்பிரான், ஆகம்விண்டு கம்பம்வந்து குஞ்சிஅஞ்சலிக்கணே, ஆகவென்கைகண்கடாமை யாருந்தாகவையனே." "ஐயநின்னதல்லதில்லை மற்றோர்பற்றுவஞ்சனேன், பொய்கலந்ததல்லதில்லை பொய்மையேன் எனெம்பிரான், மைகலந்தகண்ணிபங்க வந்துநின்கழற்கணே, மெய்கலந்த அன்பரன் பெனக்குமாகவேண்டுமே" "வேண்டுநின்கழற்கணன்பு பொய்மைதீர்ந்துமெய்ம்மையே, ஆண்டுகொண்டுநாயினேனை ஆவவென்றருளுநீ - பூண்டுகொண்டடியனேனும் பொய்ம்மைதீர்ந்து மெய்ம்மையே - பூண்டுமாண்டுவந்துவந்து மன்னநின்வணங்கவே." "எய்தலாவதென்றுநின்னை யெம்பிரானில்வஞ்சனேற்-குய

தலாவதுன்கணனறி மற்றொருண்மையின்மையிற் - பைதலாவதெ னறுபாது காத்திரங்குபாவியேற்-கிதலாதுநினகனொனறும் வண ணமில்லையீசனே." "எனனுயிரை யெனனுடலை யெனபொருளை வாஙகிநீயேற்றுகக்கொண்டு, நினனருளைநினனடியை நினனடியார பணிவிடையை யெனககுநோக்து, முன்னியலுமபின்னியலு மூட மாமபிறப்பியலும முழுதுமபோககி, யின்னியவைந்தெழுததருளி யெனையடிமைகொணடருளா யெந்தாயெநதாய." எனசெலவ மு தலியயாவும தேவரீரவே ஆதலா லவற்றை யேறறுககொணடரு ளுக என்று மீட்டும பலதரம பணிநது தமமை மறநது பரவச ராய் நிற்க, அடிமைகொளளவநத ஐயா கணடருளிக் கடாக்ஷிதது, அபபா! குழநதாய! திருவெண்காட! உனபிராாததனை மிகவும சுவையுடையது நமககு களிபபை விளைககினறது. உணமையாற சிறநதுளளது. ஆயினும இபபொருளைககொண்டு யாமெனசெய வது? இநத மணணுலகததையே யனறி விணணுலகததைததான தநதாலும அதில எமககுச சிறிதும விருபபமிலலை. இவறறிற்கு மேலாகிய சததியவுலகம, வைகுநதமுதலிய புண்ணிய வுலகங்க ளும, மகாப்பிரளயகாலததில அழிவதாலை இவற்று ளெதைக கொண்டு யாாதான எனசெயவது, ஆனால இபபொருள, உனககுச் சில காலமவரையில சிறிது வேணடுவதாக விருககினறது. ஏ னெனில குருலிஙக சஙகமஙகளை யாசசிபபதற்குச சிலசமயத் தி லிதுவுமொரு கருவியேயாம. "அற்காவியலபிற்றுச் செலவ மதுபெறறு லற்குபவாஙகேசெயல." "தனனதுசாயை தனக்குத வாதுகண - டெனனதுமாடென றிருபபாககேளமைகள - உனனு யிாபோமுட லொககபபிறநதது - எணணததாரொளி கணடுகொ ளீரோ." செலவநதா னபபடிபபட்டதாயிருக்க, இவவுடம்பினை க் கொண்டுதான் செய்யககடவனவற்றைச் செயவோமெனில "ந ருநலுளெருவ னிறலைலயெனனும பெருமையுடைததிவ் வுல கு." "பணடமபொயககூரை பழகிவிழுதலா - லுணடவப்பெண டிருமககளுமபினசெலா - கொணடவிரதமும ஞானமுமலலது- மண்டியவருடன் வழிநடவாதே." "ஊரொலாங்கூடி யொலிக்கவழு திட்டுப் - பேரினைநீக்கிப பிணமெனறுபேரிட்டுச் - சூரையங்காட டிடைக் கொண்டுபோயச்சுட்டிட்டு - நீரினிலமூழ்கி நினைபபொழி நதார்களே." ஆனபடியால. "நாசசெற்றுவிக்குண்மேல் வாராமு ன்னலவினை மேற சென்று செயயப்படும." ஆகவே உள்ளநாளெல் லாம் மனததைவிடயஙகளிலே செல்ல விடடுத தாமரையிலைநீர் போல வலவது நனமையல்ல. "ஐவரமைச்சருட டொண்ணூற் றறுவர்க ளைவருமைநதரு மாளக்கருதுவர் - ஐவருமைந்து சின த்தொடேநின்றிடிலைவாககினையிறுத் தாற்றகிலோமே." "அரு

களசிங்க மடவியிலவாழவன - வஞ்சம்போய்மேயந்துதம் மீ சகமேபுகும - அஞ்சினுகிரு மெயிருமறுததிடடால் - எஞ்சாதி றைவனையெயதலுமாமே.'' அஙஙனமிருக்க; கிடைத்தற்கரிய இம மானுட வுடமபினைப் பெற்றும, குடிக்கததக்க பாலைக குமரிம்கவி ழ்ததாற்போல மாதர் மயககததிலு விழககினறனா. "புணணியஞ செய்வார்கருப் பூவுண்டு நீருணடு - அண்ணலதுகண பூருள்புரி யா நிறகும - எண்ணிலிபாவிக ளெமமிறைமயீசனை-நணணறியாம லழுவுகின்றாரே.'' ஐயோ! "நினைவதும்வாயமை மொழிவதுமல் லால் - கனைகழலீசனைக் காணலரிதாம் - கனைகழலீசனைக காண்குற வலலார-புனைமலாநீரகொணடு போற்றவல்லாரே.'' எனறவண் ணம உணாநது, "மஞசணமாலை நிலாவியவானவா - நெஞசினுள் ளீச னிலைபெறுகாரணம - அஞசமுதாமுபசார மெட்டெட்டோ டும - அஞசலியோடுங கலநதர்சசித்தார்களே.'' ஆகையால, சிவ பூசைசெயயாத தேகம வீணாய நிலததுககுப் பாரமாகவும, சூலத் திறகுக கோடரியாகவும, தனனுயிரககு நோயாகவும இருக்கும. "வசையிலாவண்பயன குனறு மிசையிலாயாககை பொறுத்தநில ம்''*ஆதலால் நமது சொல்லை கடவாமல், நீ, இநதப்பொருளைக கருவியாசவைததுககொண்டு முனனே சிவபூசை, அடியாாபூசை நடததிவருவையாகில், பினனால நீ யெண்ணியவணணமெலலாம் பெறுவாயெனறு திருவாயமலாநதருளினா.

அது கேட்டமாத்திரத்தில, திருவெண்காடா பாலொடு தே ன்கலநதுணடவரினும் சிறந்து முனனமே சிவாசசனையில பெ ருவேட்கையுற்றிருந்தவா இஙஙனம ஆதியாசிரியர் திருவாாததை யால் தாம பெறததக்க பேறு இதனில வேறொனறுளளதென்பது ிணைப்பிலுங கொள்ளாதவராய்க குபபுற்றுக கூததாடி நகையுமு வகையு மேன்மேலெழ நயந்துநின்று ஆளவநதாா திருவடியிற் பணிந்து பணிந்தெழுந்து, எம்மரசே! என்பேறேபேறு, யான் செய்த தவமேதவம, என்பாககியமே பாக்கியம, என்புணணிய மே புண்ணியம, எனனென்றுபேசுவேன்? என்னென்றுபேசுவே ன? எழுதமுடியாதே! எட்டிலடஙகாதே! எனபோல விப்பேறு யார்பெறறார் இவ்வுலகத்து; என் ஐயனே! இனியடியே னிதற் குச்செய்வதியாது "செயலதறியாச்சிறுநாயேன் செமபொற்பாத மலர்காணுப - பொய்யர்பெறுமபேறத்தனையும் பெறுதற்குரியேன் பொய்யில்லா - மெய்யாவெறியார்மலர்ப்பாதம் மேவக்கண்டுங்கே ட்டிருந்தும - பொய்யனேனுன்உண்டுடுத்திங் கிருப்பதானேன் போரேறே." "போரேறேநின்பொன்னகர்வாய நீபோந்தருளியிரு ளிக்கி - வாரேறிளமென்முலையாளோ டுடன்வந்தருள வருள்பெ

ற்ற - சீரோமடியாரநின்பாதஞ் சேரக்கண்டுங்கண்கெட்ட - வூரோ ருயிருகுழல்வேனே கொடியேனுயிர்தானுலவாதே.'' ஆதலின் அடியேன் எவ்வாறு ஏந்துகொண்டு எவவிடததுப் பூசிப்பது கரு ணைசெயதிடுகவென்று விண்ணப்பித்து நின்றனர்.

அபபோது, ஆடகொள்ளவந்த அடிகளார், திருவுள்ளஙகனி நது, ஐய! நாளைய்தினம, திருவோணததோடு கூடிய சோமவாரம மஹாபபிரதோஷகாலமா யிருத்தலால, அடுதத திருவெணகாடெ னனும திருப்பதியை யடைநது, சுவேதாரணியப்பெருமானையும, அவரிடம பிரியாதுறையும ஞானவிதனை வடிவராகிய உமாதேவி யாரையும விதிப்படி திருமஞ்சனமாட்டி யருச்சிததுச சிவனடி யாாகளையும உபசரிததுப பூசிதது அச்சநகிதியில காததிருபபை யாயின, அஙகே வேதாகம முதலிய கலைகளையயந திரிபற வு ணாந தொழுக்கததிற சிறநத தொரு வேதியாவந்து, நீ அருச் சிததற்குரிய தாபரமூர்த்தியாகிய தொரு சிவலிஙகபபெருமானை யெழுநதருளப பணணிககொடுதது, தீக்ஷாவிதிப்படி யுனககுத திருவெழுததைநதினையு முபதேசிதது, பூசிககு முறைமையையும அனுககிரகிபபாா, நீயவற்றைப் பெற்று நலலனபோடு பூசிததுப் பரிபாகமுறறு, உலகியற்செலவமும அருளியற்செலவமும பெற றுப் பேரின்பமடைநது நீடுழிவாழகவென ஆசீாவதிததுத தமது அருமைததிருககரததா லவா நெற்றியிற திருநீறுபுனைநது தலை மேற கைமலாசாததி அபபா மரிதது மறைநதருளினா.

கேட்டீர்களோ முனிவாகளே! இவ்வுலகததிற் சிவகீாததன சிவபூசை செயபவாகள பெறக்கூடாத பேறொன்றுமிலலை அவர்க ளே நாம தொழுந்தெயவஙகளாம. என்றுகூறி உபமன்னிய முனி வா அப்பால நடநத கதையைச சொலலலாயினா

திருவெண்காடா தமதுகனவினிலைமை தாயாாககுரைததல.

கேளும் முனிவாகளே! அப்பால் திருவெண்காடராகிய சிறு வனா, உடனே கண்விழிதது எழுநது, ஆராமைமேலிட்டு அழு து தொழுது, ஐயனே! ஐயனே! என்பிழைப்புக கனவளவோயா யிற்றே! நனவென்றலலோ நானகளிததிருந்தேன். எமபெருமா ன் திருவுளமிருநதவாறிதுவானால் என்செயயக்கடவேன் என்றி ரஙகியிருந்தனா. அபபோதுமகனா அனறிரவிலாகாரமின்றிப்படு த்துறஙகின ராதலிற் பெருங்கவலையோடும நல்லநித்திரையின்றி அருகே படுத்திருநத தாயாா அரண்டு விழித்து எழுநது, மைந் தனைநோக்கி என்செயகின்றாய ஐய! உனக்கடுததது என்னென் று வினவப் பிள்ளையாரும், தமமனனையை வணஙகித தாங்கண்ட கனவினைக் குறிப்பினி லுணாத்தக்கேட்ட அவ்வம்மை தமமுள்

ளத்தில் அதிக அச்சத்தோடு மன்போடும் பெருங்களிப்பினை யடைந்து இவரது மைந் நிலைமையை யறியும்படி அவற்றை யுள ளடக்கிக்கொண்டு மகனாரையெடுத்து உச்சிமோந்து முதுகைத்தட வி, அப்பா! குழந்தாய்! இவ்வுலகில் பெருஞ்செல்வனும் பேறுபெ ற்றாய்! உனக்குச் சிவனருள் கிடைக்குங்காலம் வந்தது. இது வரையு முனக்குள்ளிருந்த கவலையை யானறியாத வண்ணமறை த்து வைத்திருந்தனையே ஆயினும் இனிக்கவலையொழி, உனக்காண் டவன் கனவிலே கடாக்ஷித்தபடியே நடத்தி நல்லருள் பெறுதி. ஆனால் ஒன்று சொல்லுகிறேன். பொறுமையோடு கேட்டிடுதி.

தாயார் திருவெண்காடருக்குச் சிவபூசைத் திறமுரைத்தது.

அதாவது, சிவபூசை செய்வதென்றால் எளிய காரியமல்ல அரிய வற்றுள்ளெல்லாம் அரிது சிவன், தேவரிற் பெரிய மூவராலும் மற்றை யாவராலும் இன்னதன்மையனென்று அறிவதற்கரியவன் என்றும், எல்லாக் கலைஞானங்கட்குந் தாயாயுள்ள வேதாகமமே இன்னம் அவன் மகிமையை யறியாது மயங்குகின்றன. அன்றி யும், அண்டப்பகுதிக ளெல்லாம் சிற்றணுவென்ன ஆழிச்சூறை வளியிலே "கொட்கப்பெயர்க்குங் குழகன் - முழுவதும் படைப் போற் படைக்கும் பழையோன் - படைத்தவை காப்போற் காக்குங் கடவுள் - காப்பவை கரப்போன் - கரப்பவை கருதாக் கருத்துடைக் கடவுள் - திருத்தகும் அறுவகைச் சமயத்தறுவகையோர்க்கும் - வீடு பேறாய் நின்ற விண்ணோர் பகுதி - கீடம்புரையும் கிழவோன் - சொற் பதங்கடந்த தொல்லோன் - உள்ளத்துணர்ச்சியிற் கொள்ளவும் படான் - கண்முதற் புலனாற் காட்சியுமில்லோன் - விண்முதற் பூதம் வெளிப்படவகுத்தோன்" அன்றியும், இவன், "திசைமுகன் சென்று தேடினர்க்கொளித்தும் - முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும் - ஒற்றுமை கொண்டு நோக்குமுள்ளத் - துற்றவர் வருந்த வுறைப்பவர்க் கொளித்தும், இத்தந்திரத்திற் காண்டுமென்றிருந் தோர்க் - கத்தந்திரத்தி னவ்வயி னொளித்தும் - முனிவற நோக்கி நனிவரக் கௌவி - யாணெனத் தோன்றி யலியெனப் பெயர்ந்து - வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயின் - ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த் - துற்றவை துறந்த வெற்றுயிராக்கை - அருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்தும் - ஒன்றுண் டில்லையென் றறிவொளித்தும் - பண்டே பயிறொறு மின்றே பயிறொறும் - ஒளிக் குஞ்சோரனைக் கண்டனம் - ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலிற் - றாளுதவிடுமின் - சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின் பற் றுமின்னென்றவர் பற்றுமுற் றொளித்தும் - தன்னேரில்லோன் தானே யான தன்மை" உணர்த்தவுணரப்படுமன்றி வேறுவகையான் முடி

யாதெனப் பெரியோர் யாவரும் சொல்லுகின்றார்கள். அஃதங்ங னமாக.

நீயோ இன்னும் முலைப்பான மணமறா வாயினை யுடைய சிறுகுழந்தை, இராவில் நான் தழுவி யணைத்த கையிறைய நழுவுமாயினும், தனித்திருக்கின்றேனென் றாண டெழுந்து அழுகின்ற பருவத்தை யுடையவன்; பத்தி, வைராக்கியம், அறிவு, ஆசாரம், இவைகளி லொன்று குறைபடினும் சிவபூசை முற்றுப்பெறாது. உலகத்தையெல்லாம் பெற்ற மாதாவாகிய பார்வதியாராலேயே அப்பூசை நிறைவேறுவது அரியதாம். அவர் செய்யும் சிவபூசையையே சோதிக்கும்படி முன்னே சிவபெருமான் கம்பாநதியைப் பெருகிவரச்செய்தனராம். இன்னு முப்பெரியோர்க ளதைச் சொல்லிச் சொல்லி யேங்குகின்றார்கள். மஹாதேவிக்கே யிவ்வகையானால் நாமெல்லாம் எவ்வளவு. அதுவுநிற்க. பூசை செய்வதற்குமுன் ஸ்ரீபஞ்சாக்ஷர ஜெபத்தால் சித்தசுத்தி செய்துகொள்ளவேண்டும். மந்திரங்களுள்ளே அரசாயுள்ளது ஸ்ரீ பஞ்சாக்ஷரம். எப்படியென்றால், எல்லாமந்திரங்களும் வேதத்துளே யமைந்துள்ளது. அவ்வேதமெல்லாம், இருக்கு, யஜுசு, சாமம் என்ற மூன்றுவகைப்படும். அதர்வணம் இவற்றுளடங்கும். அம்மூன்றுவேதத்துள்-அறம்பொருளின்பமென்ற புருஷார்த்த மூன்றிலே பொருள் எப்படி சிறந்ததோ அப்படி யஜுர்வேதம் சிறந்தது. அவ்வேதம் - ஏழுகாண்டமாம். அவ்வேழுளளே நடுக் காண்டத்து நடுவேயுள்ளது ஸ்ரீருத்திரம் என்றமந்திரம். அம் மந்திரநடுவேயுள்ளது அந்த சிவபஞ்சாக்ஷரம். ஆதலால், "மந்திரநான்மறையாகிவானவர்-சிந்தையுணின்றவர் தம்மையாள்வன-செந்தழலோம்பிய செம்மைவேதியர்க் - கந்தியுண்மந்திரமஞ்செழுத்துமே" என்று மஹாவாக்கியம் பிறந்திருக்கிறது. இப்படிப்பட்ட ஸ்ரீபஞ்சாக்ஷரத்தியானம் செய்ய மஹாமுனிவர்களே அசாத்தியம் என்று பயப்படுவார்களாம். நீயோ, "காலைமலமொடு, கடும்பகற்பசி, நிசிவேலைநித்திரை" இவைகளாற்றுவக்குண்டசிறு குழவி. என்செய்வாய். இதுபோக, சிவபூசைக்குரிய திருமஞ்சன வகை, திருப்பள்ளித்தாமபத்திரபுட்பம், நிவேதனத்திரவியம் இவைகளைச் சுத்தமுள்ளவைகளாகத்தேடுவதுமிகவருமை. ஏனென்றால், முன்னாளிலே சுத்தமானதீர்த்தம் வேண்டுமென்று மஹாரிஷிகளெல்லாம் பெருந்தவஞ்செய்த கதைகளொருகோடி நாம் கேட்டிருக்கின்றோம். சண்டேசுரப பிள்ளையார் சுவாமி திருமஞ்சனத்திற்காகச் சேகரித்துவைத்த பாற்குடத்தில் பிதா காலதீண்டிற்றென்று, மழுவாலெறிந்தார். இதுவொன்றோ இவ்வாறனேக

முண்டு. அருச்சிப்பதற்குப் பழுதற்ற பத்திரபுட்பம் பெறும்பல சீகாழியில் சிவபூசை செய்யவந்திருந்த தேவேந்திரன் ஸ்ரீ கணேசர் திருவருளால், அகத்தியமுனிவர் கைலாயத்திலிருந்து சிவானுக்கிரகத்தாற் கொண்டுவந்திருந்த காவிரியாற்றை எப்பாடு பட்டுக் கொண்டுவந்தான். மடங்கிதழ், முடங்கல், வாடிவதங்குதல், மயிர்ச்சிக்குண்டல், முடங்குகாற்சிலம்பிக்கூடு, புழுக்கடி முதலாகிய பழுதுகள் மலரிலிருந்தாற்சிவபூசைக்காகாதெனவெண்ணி, சுத்தசன்மார்க்கசிவயோகமுனிவராகிய மழமுனிவர் கைக்கால் நகங்களோடு மும்மக்கண்களையும், மரத்திலேறி மலர்பறித்தல் ஆசுத்தமெனறுதாவி பறிக்கப்புலிக்காலையுந் தவஞ்செய்துபெற்று வியாக்கிரபாதரென்ற திருநாமத்தோடும் விளங்குவதுசேட்டிலையோ? விஷ்ணு, முருகனுடையனும் சிவகோசரியார் கதைகளையும் விசாரிப்பாய். நிவேதனத்திரவியங்களுடைய சிலாக்கியத்தைப்பற்றிய சரித்திரத்துள், இளையான்குடிமாறனார், நென்முளைவித்த முதாக்கியதும், அரிவாட்டாயனார் செந்நெலரிசி மாவடுக்கீரை கமரிலவிழ ஊட்டியறுத்ததும், கோட்புலியார் சமயரநெற்கோட்டை யழித்த வுறவினரைத் தண்டித்ததும், சிறுத்தொண்டதேவர் கறியமுதுக்குத் தக்கது வேறுகிடையாமைபற்றித் தமது மகவை யறுத்தூட்டியதும் நீபலதரமும் கேட்டிருக்கின்றாயே. தூபதீபப்பெருமைக்குக் குங்கிலியக்கலயனாரும், கணம்புல்லரும், கலியனாரும், நமிநந்தியடிகளுமேசான்று.

ஆதலால், அப்பெரியோர்களைப்போலத் திருமஞ்சனம் திருப்பள்ளித்தாமம் நிவேதன பதார்த்தமுதலியவைகளைச்சிரத்தையோடும் புனிதமாகவும் தக்கதாகவும் சேகரிப்பதென்று னிளம்பருவத்திற்கு அசாத்தியம், தக்கமுயற்சிசெய்ய உன்மேனிதாங்காது. ஆனபடியால் உனக்கு இவ்விளம்பருவம்போய்ச் குமாரப்பருவம் வந்தபோது உன்னெண்ணப்படி சிவபூசைசெய்ய முயல்வது தகுதியென்றார்.

அங்ஙனம், தாயவாக்கியத்தினைக் கேட்ட திருவெண்காடர், புன்முறுவலோடு அன்னையை வலம்வந்து பணிந்து நின்று, தாயே! எனது சிறுவிண்ணப்பத்தினைக் கேட்பீராக தேவரீர் கட்டளையிட்டவண்ணம், சிவன்பெரியோன் என்பதிலும் அரியோன் என்பதிலும் எள்ளளவும் சந்தேகமேயில்லை. அவ்விடயத்திலவே தாகமங்களே சத்தியஞ்செய்து முறையிடுகின்றது. அன்றியும், இவ்வுலகம் அவ்வுண்மைபறிவதிற்படும்பாடு நாம் கண்டிருக்கின்றோம்; ஆனாலும், "பத்திவலையிற்படுவோன்" என்றும், "அளவறுப்பதற்கு அரியவன் இமையாவர்க்கு, அடியவர்க்கு எளியான்." என்றும்

பெரியரிற் பெரியோர் அனுக்கிரகித்திருக்கின்றனர். அன்றியும்,
"அன்புசிவமிரண்டென்பரறிவிலார் - அன்பேசிவமாவ தாருமறி
கிலார் - அன்பேசிவமாவ தாருமறிந்தபின் - அன்பேசிவமா யமர்ந்
திருந்தாரே." என்றும், "என்பேவிறகா யிறைச்சியறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரியவறுப்பினும் - அன்போடுருகியகங்
குழைவாரன்றி - என்போன்மணியினை யெய்தவொண்ணாதே."
என்றும், "அன்பினுள்ளான் புறத்தானுடலாயுள்ளான் - முன்பினு
ள்ளான் முனிவாக்குமபிரானவன் - அன்பினுள்ளாகி யமருமரு
மபொருள் - அன்பினுள்ளாரக்கே யணைதுணையாமே" என்றும்
பெரியோர் மந்திரவாசகியம் கூறியது ஆகவே, "தானொருகாலஞ்
சயம்புவென்றேத்தினும் - வானொருகாலம் வழித்துணையாயிற
கும் - தேனொருபாற் றிகழ் கொன்றையணிசிவன் - றானொருவண்
ணமென்னப்பின்னின்றானே." என்ற சிறப்பு, அச்சிவனருளா
லென்னெஞ்சத்தி லுண்டாயிருக்கின்றது. அதுவுமன்றி, சிவ
பூசைசெய்வதற்குச் சாதியாவது, ஆச்சிரமமாவது, திரவியமா
வது காரணமாவதில்லை, தேவர் முனிவரொழிய மானுடருள்
ளே பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்ற
நாற்சாதியாருள் யார்தான் பூசிக்கவில்லை. பிரமசாரி முதலியவர்
களுள் யார் பூசியாதவர் தீண்டாத பஞ்சமத் திருமேனியடை
ந்த திருநாளைப்போவார் அருச்சியாதொழிந்தாரோ? மானதபூசை
விடாதுசெய்தார் மானுடரிருக்கட்டும் பசு, புலி, யானை, நரி,
குரங்கு, கருடன், வலியன், நாரை, ஆமை, பாம்பு, சிலந்தி, நண்டு,
எறும்பு, முதலிய மிருகம், பறவை, நீர்வாழ்வன, ஊர்வனவுமா
கிய சிற்றுயிரும் பூசித்த தருள்பெற்றனவென்று கேள்விப்பட்டுள்
ளோமே. இச்சிற்றுயிர்வர்க்கங்களெல்லாம் அன்பன்றி வேறு என்
னபொருளைக்கொண்டு பூசித்தன பரிபூரணனான சிவனுக்கு யாரு
செய்யுஞ் சுத்தியும் புனிதமும் எவ்வளவினவாம். "பொருட்பற
றிச்செய்கின்ற பூசனைகள் போலவிளங்கச் - செருப்புற்றசீரடி வா
யக்கலசமுன்முதம் - விருப்புறுவேடனார் சேடறியமெய்க்குளிர்ந்
தங் - கருட்பெற்றுநின்றவா கோணைக்கமாட்டாமோ" என்று
இழிந்த கொலையிலும் வேடசாதியிற் பிறந்த கண்ணப்பதேவர்,
செருப்புக்காலால் திருமலியங்களைந்து, வாயெச்சிலோடு கலந்த நீ
ரா லபிடேகமாட்டித் தாழ்ந்த வூனை முன்னே தாமெச்சிற்படுத்திச்
சுவைபார்த்தூட்ட, அப்பூசைக்கு உவந்துண்டு பெருமானவர்க்கா
றுநாளில அனுக்கிரகஞ்செய்து திருவடிநீழல்கொடுத்த பெரு
மையைப் புகழாத மந்திரங்களுண்டோ? சிலந்தி வாயெச்சினூ
லாற் பந்தலிழைத்துக் கோச்செங்கண்ணனாகப் பிறந்து கதியடை
யவில்லையோ? கோயில்விளக்கு நெய்யைத் திருடப்போன எலி

வால் அவ்விளக்கணையாமே தூண்டிய தான் மாவலிச்சக்கரவர்த்தியாய் மூவுலகாண்ட கதை யறியாதாருண்டோ? மூஷிகமாகிய ஜீவன் அன்பு பத்தி யொன்று மறியாது வெறும் விலங்கின தழையைச் சாதியியற்கையாற பறித்தெறிந்தும் மூவுலகும் மெச்சு முசுகுந்தனாகப்பிறந்து முத்திபெற்ற செய்தியை மறந்தவருண்டோ? பாலியன சிறுவனென்ன றெனனைத் தடுக்கின்றீர். ஐயோ! சிவபூசைசெய்து, எல்லாரையுங் கொல்லுகின்ற எமனுடைய வுயிரை வாங்கிய மார்க்கண்டேயமுனிவர் பாலரன்றி விருத்தரோ? உத்தானபாதராஜன மகனான துருவன மாற்றாந்தாய் கொடுமை சகியாது போய்ச் சிவபூசை செய்து அழியாத வுயர்ந்த பதம பெற்றகாலம பாலியமன்றிக கிழவயதோ? நாரதமுனிவராலே தனக்கு இடி பயமுள்ளதென்று கேள்விப்பட்ட கிரகபதி என னும பிராமணகுமாரன ஏழுவயதில் சிவபூசைசெய்து ஆண்டவன் திருவருளால அக்கினிபதம பெறவில்லையோ? வியாக்கிரபாத முனிவர் திருமகனான உபமன்னியர் சுவாமியிடத்தில் பாற்கடல் பெற்றது எந்தக்கிழவயதிலென்று நினைக்கிறீர்? சிசுபபருவத்திலல்லவா? சுகமுனிவர் கருவிலே தானே யோகமார்க்கத்தால் மானத பூசை செய்யவில்லையா? புலோமருடைய பெண் தாய்வயிற்றிலே சிவதியானத்துடனிருந்து வெளிவந்தபோது பூருவஞானமுடையளாய் நாபிக்கொடி யறுப்பதன்முன்னே யாவரும் அதிசயிக்கும படி தாயை யழைத்துச்சிவபூசைசெய்தற்குரிய திருமஞ்சனம பத்திரம் புட்பமுதலிய உபகரணங்களைக் கொண்டுவரும்படி சொல்லி வரவழைத்துப் பூசிக்கவில்லையா? அம்மணி! நீர் என்தேகம் தாங்காதென்று எண்ணித் தடைபடுத்தவேண்டாம்; பிள்ளைகட்கு நன் மார்க்கம் போதித்து நலவழியிற் செலுத்துவது தாய்தந்தையர் கடன, தாங்கள்செய்த முன்றவப்பயனால அந்தமக்கட்குத் தம் முயற்சி யின்றி நல்ல புத்திபிறந்து நற்கருமஞ் செய்யத்தொடங்கினால் தடுப்பதுண்டோ? அம்மா! என்னைத் தடைப்படுத்துவது தக்கதல்லவென்று மீட்டும் பணிந்து நின்றார்.

அதுகண்ட அவ்வம்மையார் தம்முளளே பெருங்களிப்பினையடைந்தவராய்த் திருமகனை நோக்கி, ஐயா! உன்னெண்ணப்படியேயாக; ஆயினும, பூதசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, ஆன்மசுத்தி, மூர்த்திசுத்தி, எனனும் பஞ்சசுத்தியும் செய்தபின்னன்றிச் சிவபூசை செய்யலாகாது, அப்பஞ்சசுத்தி செய்வதற்கு மந்திரநாயகமாயுள்ள ஸ்ரீபஞ்சாக்ஷரம் சித்தியா யிருக்கவேண்டும் ஆதலால், முதலில ஸமயதீக்ஷைபெற்று, எவ்வளவு தீவரனானாலும் அதமபக்ஷம் ஒருவருடகாலமாயினும் பஞ்சதருமத்தோடு தினம் பன்னீராயிரவுருவாகச்செபித்தால் மந்திரசித்தி யுண்டாம. அப்

பால் சுவாமியைப் பூசிக்கத்தக்க தாம்வரும். இப்படி வேதாகமங்கள் விதித்தன. பஞ்சதருமமாவது, விபூதிதாரணம், உருத்திராக்ஷதாரணம், ஸ்ரீருத்திரத்தியாக பாராயணம், சிவதரிசனம், சிவனிவேதனப் பிரசாதங் கொள்ளல் என்பவைகளாம். இவற்றுள் மூடர்களுக்கு ஸ்ரீருத்திர பாராயணம் கூடாது ஆனாலும், அந்த உருத்திரத்திரத்தின் இதயமாயிருக்கிற ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தியானம் கூடும் இந்த பிரமா விஷ்ணு உருத்திரர் மகேசுரர் சதாசிவமூர்த்தியும் தியானித்துக்கொண்டிருக்கிறார்கள், மஹாமாதாவாகிய உமாதேவி, ஸ்கந்தர், கணராஜா, நந்தி, பிருங்கி, பிங்கிருடி, வாணனர், பானுகம்பராதிபிரமதகணேசுவரர்களும் இந்திரன்முதலிய உலகபாலகரும், வசு, உருத்திரர், ஆதித்தர், மருத்துக்களுமாகிய முப்பத்துமுக்கோடி தேவரும், முனிவரும், அசுரரும், யக்ஷரும், சித்தரும், கருடரும், காந்தருவரும், வித்தியாதரரும், கின்னரரும், கிம்புருடரும், குய்யகருமாகிய மற்றெல்லாக கணங்களும் நித்தமும் தியானிக்கின்றார்கள். இது மந்திரசித்தி ஒன்றைத்தானகொடுக்குமென்று நினையற்க. "துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்தினும், நெஞ்சகநைந்து நினைமினுடோறும், வஞ்சகமற்றடி வாழ்த்தவந்த கூற் - றஞ்சவுதைப்பனவஞ்செழுத்துமே." என எமனைவெல்லுமுபாயமுமிதுவென்று விதித்திருக்கின்றது. இம்மையிலும், சொற்றுணைவேதியன்சோதிவானவன்-பொற்றுணைதிருந்தடிபொருந்தக் கைதொழக்-கற்றுணைபூட்டியோர்கடலிற்பாய்ச்சினும்-நற்றுணையாவது நமசிவாயவே." என்றனுபவமந்திரவாசகமுமுண்டு. ...லோடுநம்மைக்கட்டிக்கடலில்விட்டாலுமஞ்செழுத்தைக்கொண்டுபிழைக்கலாம் "நானேயோதவஞ்செய்தேன் சிவாயநமவெனப்பெற்றேன்" என்று அடிகள் அருளப்பாடிருந்தாலவேறுஎன்ன சொல்லலாம்." ஓதியநம்மலமெல்லாமொழித்திட்டவ்-வாதிதனை விட்டிறைபருடசத்தியாற - நீதிலசிவ்ஞான்யோகமேசித்திக்கும- ஓதுஞ்சிவாய்மலமற்றவுண்மையே" எனவும், "நமவென்னு நாமத்தை நாவிலொடுக்கிச - சிவவென்னு நாமத்தைச்சிந்தையுளேற்றிப - பவமதுதீரும் பரிசுமதற்றால் - அவமதுதீரு மறுமபிறப்பின்றே" என்றது திருமந்திரம். இதனாற சித்திபெற்றா சரித்திரங்களெவ்வளவென்று கூறுவேன். அக்கதைகளைக்கூறுதப்புராணமில்லை ஆதலால், நீயும் நல்ல குருவினிடத்தில் அப்பஞ்சாக்ஷரத்தை உபதேசமுறையிற்பெற்றுச் சிலகாலம் அதனையனுட்டித்தப்பின். சிவபூசை செய்கவென்று கூறினார். கேட்டீர்களா முனிவர்களே! இவர்களன்றோ தாயும் பிள்ளையுமென்று சொல்வதற்குத் தகுதியானவர்கள். இப்படிப்பட்ட அறிவும் துணிவும் யாருக்குண்டாம். இவர்கள சரித்திரங்கேட்பதே நமக்குப பெரிய லாபமாம்.

சிவபூசைசெய்வதற்குத்தாயாரிடத்தில் விடைபெறுதல்.

கேளும் முனிவர்களே! அப்பால்! பெற்றவன்னையார் சொல்வாக்கியத்தைக்கேட்ட திருவெண்காடர் அத்தாயார் திருமுகநோக்கி அம்மணீ! தேவரீர் கூறியவெல்லாஞ்சத்தியமே! ஆயினும் வேதாகமம் சிவபூசைக்குக் காலவரையறுத்தது, கேவலம் நிராதிகாரிகளாகிய ஆபற்சைவர்களுக்கன்றிச் சாதிகாரிகளாகிய சுத்தசைவர்களிலும் மரணபயங்கொண்ட தீவிரர்களுக்கல்லவென்பது தேவரீருக்கே தெரிந்த விடயம். நீரும் உமது கணவனாரும் பரம்பரையிற்றோன்றின சுத்தசைவர்கள். அன்றியும் அளவிறந்த சிவபுண்ணியமுடையவர்களாயப்பரிபாக முற்றுத்தவமொருவடிவமானீர்கள், உங்கள் சார்பினிற்பிறந்த நான் இப்போது எவ்வளவு அபக்குவனாயிருந்தாலும் தேகம் நிலையல்லவே "அன்றறிவோமென்னாதறஞ்செய்க மற்றதுபொன்றுங்காற்பொன்றாத்துணை" என்று முதறிஞர் திருவாணையிருக்கின்றதால் காலம் வீணுக்காக்கழிக்கலாகாதென்ற பயத்தாற் பீடிக்கப்பட்டவனாயிருக்கின்றேன். இதுவரையி லிவ்வுலகத்தில் ஆபத்தையடைந்தவர்களெல்லாம் சிவபூசையாலவ்வாபத்தையொழித்துச் சுகமடைந்தார்களென்று எல்லாப்பெரியோர்களாலும் நூல்களாலும் கேள்விப்படுகின்றோம். ஆதலால், இன்னம் என்னை யிவ்விதப்பிரசங்கத்தால் மனநிலை சோதிப்பதற்கு முயலாமல், பெற்றுவளர்த்த கருணையோடு என்னை அனுக்கிரகிக்கவேண்டும். இனியென்னுயிர் தரியாதென்று பலமுறைநமஸ்காரஞ்செய்து மிட்டுஞ்சொல்லுகின்றார்.

அம்மணீ! மற்றொருசெய்தி கேளும், முன்னொருகாலத்தில் நடுவனாகிய யமதருமராஜன், நரகவாசிகளை விசாரித்துவருகையில், அவருட் சிலர் தீவாய்நரகில் வீழ்ந்து கண்வெந்து, முகந்தீந்து, உடம்பெல்லாங் கொளுந்துண்டு, நாவறந்து, தாகசோகப்பட்டு அடிக்கடி மயங்குவதும் தெளிவதுமாயிருந்தார்கள்; சிலர் ரா வாளம்பு மயமானநரகில், கண்பெயரக் காது அருவுண்டு நாவறுபட்டுப்பிறகர்ந்து உடம்பெல்லாங்குத்துண்டு புண்பட்டுச்சீழும்புண்ணீருமொழுகப் புழுக்கள் சோரத் துடிதுடித்துக் குடர் நடுங்கப் பயத்தால் மூர்ச்சிப்பதும் அடிக்கடி யெழுந்திருப்பதுமாக விருந்தார்கள்; சிலர் பேரிருட்டறையில் ஒருவர்கொருவர் தலையோடு தலைதாக்கித்தோள்துடைகால்முதலிய வுறுப்புக்களொன்றோடொன்று தாக்கி முறிந்தும் சிதைந்தும் தகர்ந்தும் நசுங்கியும், வழிதுறை தெரியாது குழிவீழ்ந்தும், மேடுமுட்டியும், சேறுபாய்ந்தும், பரன்முள்ளிற்புரண்டும், சுவரின் மோதியும் சோர்ந்தலைந்தவதிப்பட்டிருந்தனர்; சிலர் மலம்புழுமுதலியவற்றை யருவருப்போ

டுண்டும பசி தணியா துடம்பனுக்க வருந்திப் பதைபதைத்துச் சோர்ந்து கிடந்தனர்; சிலர் பலபல நோய் நலிக்க வுபசரிப்பாரின்றிப்பாம்பு தேள் முதலிய விஷசெந்துக்கள் வருத்தக்கொசு மூட்டை யெறும்பு முதலியவைகளா லிம்சையுற்றுக் கணமேனும் இளைப்பாறுதற்கிடமின்றி யுழன்று வருந்தியும் அந்தோ! அப்பா! அம்மா! ஐயா! வென்று பேரிரைச்சலிட்டுத் தலை யடித்துக்கொண்டிருந்தனர். இங்ஙனம் அந்நரக பேதங்களில் வருந்துகின்ற வருத்தத்தினை நெஞ்சால் நினைப்பதற்கும், வாயால் வகுத்துக்கூறுவதற்கும், கண்ணுற காண்பதற்கும் அந்த தண்டகாரத்தாவாகிய கூற்றுவனுக்கே சகியாமல், உடனே சித்திரகுத்தனொன்னுங் கணகளைத்தூதுவரால் வருவித்து இவர்கள் என்னதீவினையெப்போது எவ்வளவு செய்தனர்; இத்துன்பத்தினை எவ்வளவு காலமாக அனுபவிக்கின்றனர் இவர்களுக்கு எப்போது வியோசனம். ஐயோ! எனக்கே பார்க்கவுஞ் சேட்கவும் சகியாமற் பரிதாபந்தை விளைக்கின்றதே! வினை கொடிது கொடிது. ஆ! ஆ! இதோ இவர்களைக்கண்டமாத்திரத்தில் அத்துன்பமுழுதும் நானே படுவோனாயினேன், ஆதலால், நீங்களிவர்கள் கணக்கினைப்பார்த்து வகுத்துரைமினகளென்று கூறக்கேட்ட, அக்கணக்கரும் வந்தித்து அவர்கள் வினையே டுடுத்தாராயந்துரைப்பாராயினர் கேளும்! தருமராஜனே! அந்தத்தீவாய்நரகத்து வருந்துவோர்கள், நல்லகல்விபபொருள் செல்வப்பொருளிரண்டினை தேடியும், அதுகொண்டு, சிவபூசை தோத்திரம தியானமதிருப்பணி யிவற்றைச்செய்யாமலும் சிவநாமசங்கீர்த்தனம் கேளாமலுமிருந்து தமவாழநாள் முழுவதும் உண்டும உடுத்தும பூண்டும் களித்தும வீணே கழித்த பாவியர்கள் பக்கத்தில் ஈரவா ளெரியம்பால் வருத்தப்படுகின்றவர்களோவெனில் சிவநிந்தை குருநிந்தை அடியார் நிந்தைசெய்கின்ற பாதகர்களோடு நணபுகொண்டும், சைவதூஷணையைக்கேட்டு மனம்பொறுத்தும அத்தூஷணைசெய்யும் அவர்களோடு பழகியும், மருவியும், அவர்கள் தங்குமிடத்திருந்தும், அவர்களை யுறவாகக்கொண்டும், அவர்களைப்பார்த்தும அவர்களோடு விழைந்து பேசியும வயிறுவளர்த்துத்திரிந்த மகாபாவியர்கள். இருட்டறை கிடந்த கொடியோர், வேதம், ஆகமம், புராணம், மிருதி முதலிய கலைகளை நன்கோதியுணர்ந்தும அவற்றினுண்மை யுணராது, மாயைவயப்பட்டு ஆணவத்தராகித் தருக்கித்து, உண்மையொருக்கால் நெஞ்சுட்டோன்றிய வழியும் கல்வி முதலியசெருக்கால விழுங்குற்ற வராகிச் சிவநிந்தைசெய்து சைவதூஷணைக்குச் சிறிதும் வாயகூசாது! "யாதொரு தெய்வங்கொண்டீரத் தெய்வமாகி யெங்கண், மாதொருபாகரும் வருவர் மற்றைத்தெய்வங்கள், வேதனைப்படு மிறக்கும பி

றகருமேல் வினையுஞ் செய்யு, மாதலா லவையிலாதா னறிந்தருள் செயவனன்றே"என்றவுண்மையைக் குருமுகத்தாலறியாது, பேத பாவனையால் அறிவுமயங்கி, என்றெயவம உன்றெயவம் என்று பிரித்தும், பெரிது சிறிது என்று தருக்க வாதங்கள்செயதும, கொடுவினை விளைத்து வாழ்நாள் வீணாகச்சிவனருள்வேண்டுமானம கோடிகளைப் பெருந்தேவ ரென்று மருண்டு, சிவனடியார்களைப பிழைகூறி யுழன்ற பெருமபாவிகளாம்; மலம புழுக்களைப புசித்துப்பசியால் வருந்துந நீயோர, கடவுளில்லை, முதறியில்லை, சொர்க்கநரகமில்லை, அறமபாவமில்லை. ஆன்மாவென்ப தொன்றில்லை, இவ்வுடமபினை யோம்புவதே பொருளென்று "எவ்வுயிரு மீசன் சந்நிதியேயாகும" என்றபடி சிவன கோயிலென்று வேதாகமங்களாற கூறபபட்டுள்ள பலவுயிர்களையும கொன்று அவற்றின ஊனைததினறுழலும கொடியராயினோராம, நோயாலும விஷசெந்துக்களாலும வருந்துகின்றபேதையா, "தாஙலாதுலக மிலலைச சகமலாதடிமையிலலை" என்ற தமிழ்வேதமாகிய தேவாரத்தின ஆணையைக் கடைப்பிடித்து, எலலாவுயிர்களும பரமேசுவர னடிமையாதலால் முறறுககும அடிமை என்று அடிமைததிறஞ்செயய வறியாமறபோனாலும, அதிகாரபேதமநோக்கி "மாலறநேய மலிநதவாவேடமும ஆலயநதானு மரனெனத்தொழுமே" என்றதனையாவது கடைபபிடிததுப் பததிசெயயாமல சிவகாருணியம, பற்றறுதி, கடவுட்பததி, மெயயுணர்வும அமைநதிருந்தமை தன்னூரககண்டும காதாரககேட்டும, அழுககாறு காரணமாக நலலடியார்களுககும், சிவாலயங்களுககும பலதீயருகளை விளைவித்துப பெரியோர் மனமவருந்துபடியான தீமைகளைத தாமே செய்தும பிறரைக்கொண்டு செயவிததும செயவார்ககுத் துணையாகியும் இருநது வாழநாளைககழித்த இழிநதபிறப்பினராம. கேளும் காலநாதனே! இவர்கள் எப்போது இந்நரகில வநதாரெனில் நாமறிநதபடியலல, முன்னெத்தகறபமோ தெரியவிலலை. இக கணக்கு எங்களாலெழுதப்படுவதலல தருமதேவதையா லெழுதப்படுவது. அது என்றும் நித்தமாயுள்ளதாதலால், இவ்வுண்மை அத்தருமதேவதைக்கே தெரியும். இவர்களுககிந்த நரகவேதனை யொழிவுகாலம் இககணககில் வெளிப்பட்டதன்று. ஆனால் கற்பாந்த விமோசனம் என்றிருக்கிறது. அது எந்தகற்பாந்தமோ வென்று சொல்லக்கேட்ட தருமராஜன் திடுக்கிட்டு நடுநடுங்கி யுடல பதற நாக்குழற வஞ்சியோடி யப்பாவிகளைப் பார்த்ததோஷம் பரிகாரமாம்படி சிவித்தியானம் செய்யலாயினர் என்று ஆகமங்களுள் சிவநிந்தைசெயவா ரிழிவுகூறும் கண்டங்களிற் கூறப்பட்டுள்ளன.

சிவபூசைசெய்வதற்குத் தாயாரிடத்தில் விடைபெறுதல.

சிவபூசையாகிய பெருந்தவம எளிதிற்கிடைப்பதலல. தாயே! அதுவும, "தவமுநதவமுடையார்க காகுமவமதனை யஃதிலாரமேற்கொள்வது." என்று பெரியோ ராணையிட்டிருப்பதால சிததிப்பது அருமையே ஆதலால முனசெயதவககுறையா லிததனைகாலம வீணேபோயவிட்டது. "பெருமபற்றபபுலியூரானைப் பேசாதநாளெலலாம் பிறவாநாளே." என்றது தமிழவேதமாதலால போனநாள் யமனுடைய நாளாகப்போயினும இனியுளள நாளாவது நமமுடைய நாளாகுமபடி சிவபூசை செயவோமே. லா சிவபூசை மோக்ஷததையனறோ தருவது, அதனைப பினபு பாாதுககொளளுவோம; இபபோது நனறுயப பொருளைத தேடி புணடுடுததுப பூணடு இமமைசசுகததை யனுபவிததொழிபபோமென்று, காலைதொட்டு மாலையளவுநகடாபபோ னுழைத்தும உழைப்புககுத தகக கூலிபெறறு அரிதே சிறிது பெறறுவநது, அசசிறிதுந தஙகுடுமபப பாதுகாபபுககே பறறுது "துப்புரவிலலாாதுவரத துறவாமையுபபிறகுந காடிககுங கூற்று." எனறபெரியோா வாககியததை நினைதது நினைதது இரவெலலாம உறககமினறி வருநதிககிடநது விடிநதளவில வேமபு தினனும புழுபபோல வினைவசததராய மயஙகி மீட்டும பழையபடி உழைததுவருநதுவா. அநதோ! அது அவா முன சிவபூசை செயயாதகுறை. "இலாபலராகிய காரணநோறபாா சிலாபலாநோலாதவா." எனறபெரியா வாககியம வீணபோமோ? அபபடிக கினறி செனமாநதரததில நீஙகள நலல சிவபூசைசெயதிருநதபடியால, இப்போது உஙகளுககுக குறைவறறசெலவம ஆணடவன அனுககிரகம செயதிருககிறா. ஆகையால உஙகள வயிறறிற் பிறநத அடியேனும இனனும மேலான செலவததைப பெற முயறசி செயய விருமபுகினறேன; அமமே! இதறகு நீா தடைபுரிவது தருமமோ! தகுதியோ! மககளுககு ஆககமதேடுவதனறோ பெறறோா கடன; ஆதலால இனிமறுததுததேவீா ஏதேனு மொனறுகூறுவதாயிருநதாலு மெனயாக்கை நீஙகுமபோலும் எனறு அஞசலி செயது நினறா. அபபோது, ஞானகலாமயையாகிய அவ்வுத்தமததாயாரானவர், மகனா வாாத்தைகேட்டு வியபபும பேரானநதமு மடைநது, இவனுககு இவன்றரததின மேமபட்ட அறிவு நோநதது பூர்வபுணணிய மெனபதறகுச் சநதேகமிலலை. இவன கொண்ட கருத்து இவனளவிற்பயனுவதனறி, "மூவேழசுறறமும் முனியநரகிடை யாழாமேயருள்சேபோறறி." எனற மநதிர மொழிப்படி பெற்ற தாய்தநதையளவுமே யனறியவா முன்னோா மூவேழுகாலுக்கும பெருமபேறுகத் தககதேயாம். எநதகுலத்தில எவனுககு ாசுரபததி, அறிவு, ஒழுக்கம், சிவகாருணியம சிறநதிரு

க்கின்றவோ அநுகூலந்தான் பெரியதென்று பெரியோர் கூறுகின்றனர். அசைவனபிறப்பே யுயர்பிறப்பு. "அவனருள் உலகத்திற் பிறந்தவன் சாகாமனிதனுமவனே ஆதலால், இவன் கனவுகண்டதிற் பழுதின்று உண்மையே இனி நாம் தடைசொல்வது தகுதியல்லவென்று துணிவுற்று, மைந்தர் திருமுகநோக்கி, ஐய! வெண்காட! அஞ்சற்க! கவலற்க! உனக்கனவின் வண்ணம் திருவெண்காட்டினையடைந்து, செய்கடன் முடித்துச் சிவதரிசனஞ்செய்து உன்னாசிரியன் வருமளவும் காத்திருக்கக் கடவையாகவென் றருளிச்செய்தார். அப்போது, அவர்கவிவிடிந்தாற்போலும் பே விடிந்தது சூரியனு முதயமாயினன்.

ஆசிரியனைநாடிப் பட்டினத்தையார் திருவெண்காடு சேர்தல.

உடனே ஞானகலையம்மையார் எழுந்திருந்து காலைச்செய்கடன் கழித்து, சகலகலைகளு முணர்ந்த பெரியரைத் தருவித்து அருச்சித்துபசரித்து, அவர்களுக்குத் தம்மகனார் கனவைக்கூறக், கேட்ட அச்சானறோர் அதிக ஆச்சரியமும களிப்புமடைந்து, அவ்வம்மையாரைநோக்கி, அம்மே! உமது புதல்வர் சாதாரணமான மானுடதேகியல்ல ஏதோ காரணதேகியாயிருக்கவேண்டும் பெருந்தேவர்க்குமரிய சிவனருள இச்சிறுவயதில வருந்தாது பெற்றனர். இவர் மகவும் அல்ல பெரியரிற்பெரியர் ஆதலால் இவர் கருத்தின் வண்ணம் மிசைவிப்பதே கடனென்றாகள். அப்போது செய்கடனு முடித்திருந்த வெண்காடனார்,உடனேதம்மருமைத்தாயாரைத் திருவெண்காட்டுக்குப் போகும்படி முன் செலுத்திப் பின்னே சிவார்ச்சனைக்குரிய திரவியங்களோடு தாமும் அங்கிருந்த சிவநேசப் பெரியோருமாகப் புறப்பட்டுச்சென்று திருவெண்காடெனனும் அத்தெய்வத்திருப்பதியையடைந்து,காவேரிசங்கமுகத்துத்துறையினீராடி விபூதி உருத்திராக்கமணிந்து உள்ளன்புமிகச் சென்று சங்கமேச்சுரரை விதிமுறையே தரிசித்து வணங்கி அடியார்களைப் பூசித்து அவர்கள் வேறுக்கும்படி வேண்டுவனவற்றைக்கொடுத்துபசரித்து, அவர்கள் இன்முகத்தையும அருளப்பாட்டையும்பெற்று மாடவீதிவலமவந்து ஆலயத்தையடைந்து கோபுரவாயிலைப்பணிந்து சென்று முக்குளநீரிற் சங்கற்பவினைசெய்து மூழ்கிப் பலதானங்களையுஞ் செய்து பட்டுடுத்துத் திருவெண்ணீறுத்தூளனஞ்செய்து திரிபுண்டரமாகத் தரித்து, சிரம் கண்டம் மார்பு தோள் முன்கையிலும் விதிப்படி உருத்திராக்கமும் புனைந்து சிவத்தியானத்தோடும் சைவவேதியர்கள் புடைசூழக் கோயிலுட் புகுந்து வலம்வந்து தண்பதி சந்நிதிசென்று விசேடமாகத் திருமஞ்சனஞ் செய்வித்து பத்திர புட்பங்களாலும் அறுகாலும் அருச்சித்து,

இலட்டுக முதலிய அபூபவாக்கஙகளும, அவல, கடலை, பொரி, எள், கருமபு வாழை தெஙகு முதலிய பலவகைகளும வைத்து நிவேதித்துத தூபதீபாராதனைகளை நடத்தி வணஙகித தோத்திரம்பண்ணி நிவிக்கினமுண்டாமபடிப் பிராாததிதது அருளவிடைபெறறு, சிவனடியார்கள் பநதுககள தாயமுதலியவர்களோடு சிவசந்நிதானததிறகுவந்து திருநந்தியைபபணிநது சென்று அவவாறே சுவாமிகளையுமமஹாதேவியாரையும அருச்சிததுப்பணிநது ஆசிரியா வரவுநோக்கி நினறனா

அப்போது அஙகே யிவா கனவு நனவாகக கோடிமனம தரும வெடகப்படுமபடி, முருகபபிள்ளையார் தமது ஷணமுகங களையுஙகரநதோா வடிவெடுததாறபோலும அழகிய திருமேனியுடையராயசசடைமுடி விளஙக, அரையின முஞசிப்புலலைஞாணும மாாபில முபபுரிநூலும மானறேலும பிரகாசஞசெயய, விபூதி உருத்திரசாதன முழுவதும போழகுசெயய, வேதாகம முதலிய நூலகளை முறறுமுணாநத தனமை வெளிபபட, வேதமநதிர பாராயணஞசெயயு நாவினராயச சைவவேதியப பிரமசாரி யொருவா வநது திருவெணகாட்டுப பிள்ளையாா எஙகே யெங்கே யெனறஙகிருநதவாகளை வினவிககொணடே ஆலயததுளளே பிரவேசித்தாா. பிரவேசிததவளவில அங்கிருநத அநதணாயாவரும கண்டு, பேரனபும, பெருவியப்பு முடையராா யெதிாசென்று, ஐயரோ! தேவரீா எஙகு நினறு மெழுநதருளுகின்றீா, திருவெணகாடரைத தேடுகின்றீா யாதுகாரணம என்று வினவ, அமமறையவா குலககொழுநது, அநத பிராமணோததமாகளை நோக்கி, ஐயரோ! நீவிா அறியலாகாத தொனறுமிலலை, ஆயினும, எம வரலாறு முற்றும, சிறுவராகிய திருவெணகாடாபால யாமடைநதவளவில தெரிநது கொளளலாமே யென்று சொலலிககொணடே வருகையில, எதிரோ அப்பிள்ளையாா, தம அனனையராகிய ஞானகலை அமமையாரோடு, சிவபெருமான திருமஞசனம அருச்சனை முதலியவற்றிறகுரிய திரவியஙகளைச சேகரிததுக கொணடிருககக் கண்டு, அவர் முககுறி, தேகவளம, செயலினறிருததம, ஒழுக்க முதலியவற்றாலே யிவாதாம வெணகாடரெனறு எளிதிலுணாநதவராய மனமகிழவோடு மினமுகஙகாட்டி மாதுரியமானசொலலால, ஐய திருவெண்காட! உனனைப பாாககவேண்டு மெனனும விருப்பததாலே யிஙகுவந்தோம். உனனெணண முழுவதும யாமறிநதுள்ளோம். அககருத்து நிறைவேறுஙகாலமடுததது என்று சொலலி எதிாநின்றனா.

பட்டினத்தார் குருதரிசனம் செய்தல.

அவ்வளவில், அத்திருவெண்காடர் அககோலமுற்றுநோக்கி அவர் திருமுககருணைபெறறு, நாம் கனவிற்கண்டபடி, நமமை

யாள வெழுந்தருளிய கருணையுருப்போலும்; எமபொருட்டு வடவாலநிழலினிருநத பரமகுரு விவவண்ணமெழுந்தருளியபடியோ? எனறெண்ணி, ஆராமையும அன்புமேலிடககண்களில் ஆனநதநீா பெருக, நெககுருகி, உடல புளகம போாப்ப நெஞசஙகரைந்து; அடியறற பனைபோல அவா திருவடிகளில் விழுநது பலலாயிர முறை அட்டாங பஞசாங்க விதியால வணஙகிசசொல்வகை யறியாது சொறகுழறத தேமபிததேமபி, எம்முடையாய! எமபெருமானே! தேவரீரைககாணபபெறறேன? எனனுரைககேன்? என செயகேன? எமமவாநலலோா; பிழைததனா; யானுமுயநதேன உயநதேன. இனி யென்னையு மெனனுடைமையையும தேவரீாககுரிய வாககிககொண்டு, என்னை யெனசெயயத திருவுள்ளமோ அதுசெயதருளுக கழிநத விரவிலே யான கணட கனு நனவாயிறறே! எனனரசே! உமககு யான புகலாயினேன் எனறு மீட்டும பணிநதாா.

அபபொது, அவவாசிரிய மணி அவ ரனபுககுருகி மனஙகனிந்து அவரைமுறறு நோககிசசொல்லுவாா. ஐயா! யாமிருபபது வியாககிரபுரம. நேறறிரவு இஙகு வந்தோம. எமது கனவின கணணே சைவவேதிய ரொருவா வநது நாளுதயகாலையில சுவேதாரணிய மஹாக்ஷேததிரததிறகுச செலவாயாயின, அஙகே திருவெணகாடன என்னும பெயரையுடைய ஆறுவயதுளள சிறுமியொருவன தாயும சிவனடியவாகளும புடைசூழவநதிருப்பன, அவனுககுச சைவதீக்ஷைசெயது, ஸ்ரீ பஞசாக்ஷரததைக கிரமபபடி யுபதேசிதது, இநத சமபுடததை அவனிடததில கொடுபபாயாக. இதனுள்ளே, பூாவசனமததில அவன பூசிதத ஆனமாாததமாகிய சிவலிஙகமூாததியிருககினறது. இச்சமபுடம திறநது பாாககத தேவராலும முடியாது அவன கைப்பட்டாலுடனே திறககும். ஆகையால, இதையவனிடததிற்கொடுதது, பூசைவிதியையுமுணர்ததி யோாமண்டலஙகாறு மவனுடனியு மிருத்தி யெனறு விதிததாா. அப்போது, அவரை யான நோககி, நீா யாா எஙகிருப்பதெனறு வினவினேன. அதறகவா, "யாமெஙகு மிருபபோமாயினும இபபோது, சிவைமாதேவியின இதயகமலத்து வெளிப்பட்ட மத்தியாாசசுனமெனனும இடைமருதில வசிப்போம. யாமோரோகன." என்று சொலலி மறைந்தனர். அப்பா' திருவெண்காட! உன பொருட்டால, படைத்தறறொழிலுங காததறறொழிலுஞ்செயயும்இருபெருநதேவராலுஙகாணரிய பெரியபெருமான்எனககும எளியராயவநதருளினர்என்றுசொலலியாவரும பாாத்ததிசயிககுமபடி பட்டுப பரிவட்டஞசாததி மூடி வைததிருநத

சம்புடத்தை ஒரு வியாகர பீடத்தின்மேலெழுந்தருளப்பண்ணி மேலே மூடியிருந்த கஞ்சனியை வாங்கினார் அப்போது அங்கிருந்தவர்கள் யாவரும் அதிக காந்தியுள்ள பொன்னாலாகிய வச சம்புடக்கோயிலைக்கண்டுலகந்தோன்றுது பிரமைகொண்டவர்களாயினார்கள் திருவெண்காடரோ, அக்கோயில வயத்தராயக் காந்தமபற்றிய இரும்புபோலொன்றும் தோற்றமின்றித் தம்மை மறந்து தறிபோல அசையாது நின்று பின்னொருவாறு சிறிது தெளிவு வந்தவுடனே, குருவின் திருவடிகளிலே பலமுறை பணிந்து பொனமாரியோடு இன்பக்கண்ணீர் மாரியுஞ்சொரிந்து துதித்து நின்றார்.

கேளும் முனிவர்களே! சிவஞானத்தை யாரறியவல்லவர்கள். வேதாகமங்களே அறியாவாலை அரியயனிந்திரன்முதலியதேவர்களோ அறியவல்லவர்கள் என்று சொல்ல,முனிவர்கள் வியப்படைந்து மேல்நடந்தகதைவினவ வுபமன்னியர்சொல்லத்தொடங்கினார்.

திருவெண்காடர் சிவதீக்ஷைபெற்றது

முனிவர்களே! பின்பு, அப்பிரமசாரியாய் வந்த தேசிகோத்மன,மாணாக்கராகிய திருவெண்காடரது அதிதீவிரத்தை யறிந்து, அங்கிருந்த சிவநேசர்களாகிய அந்தணர்களது அனுஞையைப் பெற்றவராய அம்மறையவர் கூட்டத்துடன் திருவெணகாடரையும் அழைத்துச் சென்று காவிரிக்கரையடைந்து சைவதீக்ஷாசங்கற்பம் சொல்லி மீட்டும் ஸ்நானம் செய்வித்து, முக்குள நீரிலும் முழுகப்பண்ணி விதிப்படி திருவெண்ணீறு உருத்திராக்கமணிவித்துச் சிவசன்னிதியிலழைத்துச் சென்று, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உபதேசித்துப் பின்பு, சைவசம்புடத்தை யெழுந்தருளச்செய்து அவ்வாசிரியன் அதன் மகிமையைத் தெரிவிக்குமபொருட்டு அங்கிருந்த அந்தணரொவ்வொருவரையு மழைத்து அதைத் திறக்கும்படி ஏவுதலும், அவர்கள் ஒவ்வொருவருஞ் சென்று தங்களாலியன்றமட்டில் திறக்க முயன்றும் திறவாததாகக்கண்டு மனஞ் சோர்ந்தாற்போலக் கையுஞ் சோர்ந்து நின்றார்கள். அப்பால் சுத்தக்கிரியாதீக்ஷா குருவாய் வந்த வேதியர்குலமணி திருவெண்காடரை நோக்கித் திருவெண்காட்டையா! நீ சென்று திறப்பாயாகவென்று திருவுளம் பற்ற, அவரும் அவ்வாசிரியராணை தலைமேற்கொண்டு சென்று, வெண்காடுடையாரையும் அவரிடம் பிரியாப் பிரமவித்தியா நாயகியையும் பணிந்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தியானத்தோடு அப்பெட்டகக் கோயிலை வலம் வந்து பணிந்து தமது திருக்கரத்தாலக் கோயிற் காப்பினைத் தொட்டார் அவ்வளவில், அக்கதவந்திருக்காப்பவிழ்ந்து திறப்புற்றது. அதில் கோடி சூரியர

உதயமாயினும்போலும பேரொளியவாய்க் கண்டவர்கண்ணையும் மனத்தையுங் கவரத்தக்க வழகினவாய்ச் சிவலிங்கமூர்த்தியொன்றும், விநாயகமூர்த்தியொன்றும தெய்வமந்தாரபபூக்களால் பூசிக்கப்பட்டிருந்தன, அக்காட்சியைக் கண்ட யாவரும பெருவிய ப்புமானந்தமுமடைந்து, இம்மூர்த்தம மாணிக்க மூர்த்தமோ? நவமணிகுயின்றவோ! கடவுண மணியாலியன்றவோ? முன அடிமுடி தேடுவார காணவெழுந்த சோதிப்பிழம்போ, இந்நிலவுலகத்தவோ? தேவருலகத்தவோ? கைலையகத்தவோ? என்று ஐயமுற்றுத்தமவாயில வந்தவாயுதித்துத் திருவெண்காடர தவத்தையும அவர பெறறுக்கொண்ட பேற்றினையும் குறித்து மிகப்புகழ்ந்துகொண்டாடினாரகள.

பின்பு, பிரமசாரியாக வந்த ஆசிரியர், மாணாக்கரை நோக்கி ஐயா? இன்றுநற்றினமாதலால, உன்னுடைய ஆன்மார்த்தத்தினைப பூசிக்கக்கடவை இப்பூசை செய்வதற்கு முன இத்திருவெணகாடுடைய நாயகரையும், உலகெலாமீன்ற ஞானவிதையை முதலவியாகிய பெருமாட்டியையும விதிமுறையே பூசை செய்வித்திடுக. நீ முன்னே முயன்ற புண்ணியம மிகப் பெரிதுகண்டாய. அதனாலன்றோ? இன்று ஆவணித்திங்களும, திங்கட்கிழமையும், ஓணமும், பதின்மூன்றாநாளும்கூடிய மஹாப்பிரதோஷகாலமவாய்த்தது. இதில்விதிப்படி பிரதோஷகாலத்தில மஹாந்யாச பூர்வமாய ஸ்ரீ ருத்த்ராபிஷேகஞ் செய்விப்பது சிறந்ததென்று வேதாகமங்களாலவிதிக்கப்பட்டிருக்கின்றது. சிவபூசையைச்செய்வதற்குமுனசிவனடியாரைப் பூசிப்பதே சிலாக்கியமாம. இறைவன அடியவரைப்பூசிக்கின்றவர்களை நன்றுயறிவார். "ஏறுடையாயிறைவாவெம்பிரானென்று-நீற்றுவாரடியார் நி+ழ்மேவாகள - ஆறணிசெஞ்சடையண்ணலிவரொன்று-வேறணிவாரகுவினையிலலைதானே:" என்றது திருமந்திரம். ஆதலாலிவ்வணணம சிவனடியாரையும சிவபெருமானையும பூசிக்கத்தொடங்குமுன சங்கற்பஞ்செய்துநீராடி நித்தியகர்மமுடித்து, "புற்றிலவளரவுமஞ்சேனபொய்யாதமெய்யுமஞ்சேன - கற்றைவார் சடையெம்மணலகண்ணுதல்பாத நணணி மற்றுமோர தெய்வந்தன்னை யுண்டெனநினைந்தெம்பெம்மாற-கற்றிலாதவரைக் கணடாலம்ம நாமஞ்சுமாறே." என்றது மந்திரவிதியாதலால் வேறு தேவருளராகச் சிந்திக்குஞ் சித்தவிகாரமின்றி "பிணியெலாம்வரினுமஞ்சேன பிறப்பினோ டிறப்புமஞ்சேன-றுணிநிலாவணியானன்றன்றொழும்பரோடழுந்தியம்மா - திணிநிலம்பிளந்துங்காணாச்சேவடிபரவிவெண்ணீ-றணிகிலாதவரைக்கண்டாலம்ம நாமஞ்சுமாறே" எனவும "இணங்கிலாவீசனேசத திருந்தசித்த

த்தினேற்கு-மணங்கொள்சீரத்தில்லைவாணன் மணவடியாரகள் வ ண்மைக-குணஙகளுக கூறுவீரிற் கோழைவாயச சிறறக்குண்டப் பிணஙகளேக்காணுகணவாய பேசாதப பேய்களோடே.'' எனவும "ஏட்டுருவிரவிரெனனை யாண்டவனீண்டுசோதி- விட்டிலஙகலங கறறிலலைவேந்தனைச்சோநதிலாத-துட்ட னைத்தூரத்தவாரத்தைத தொழும்புரைப் பிழமபுபேசும-பெட்டனைக்காணு கண்வாய பே சாதப் பேய்களோடே.'' எனவும முதுமொழிமந்திரஙகள் விதித தலால் அககாலததில் அடியவாகளலலாத பவிகளாகிய அனனிய ரைப்பார்ததல், பரிசித்தல, உறவுசெய்தல், மருவுதல், அவரோடு வாாததையாடல் முதலியவற்றை யொழிதது, ஒருமைபபட்ட மனத்தோடும பூசிககக கடவையெனறருளிசசெயதார்

திருவெணகாடா சிவபூசைசெயதல

திருவெண்காடரும, தமதுகிரியா குருவின கட்டளையினபடி நீராடி நிதத கருமமுடிதது நியமமுடையராய அநதப் பிரதோஷ காலததிற்குனே ஸ்ரீ சுவேதாரணியப பெருமாறுககும, அவரிட மபிரியாஞானவிததியாஙகுரையாகிய மஹாதேவியாருககும மஹா நியாச ருத்திராபிஷேகம செயவிககவேணடி, எலலாக்கருவிகளை யுஞ சேகரிப்பிதது பலலாயிரம ஆதிசைவ வேதியாகளை வரவ ழைதது, ஸ்ரீருததிரநமகசமகபாராயணம் செயயசசெய்து ஆயிர ஙகலசம,ஸநபனமவைத தருசசிபபிதது,சுகநதைதலம,நெய,பஞ சகவ்வியம, பஞசாமிாதம, பழசசாறு, இளநீர், பால தயிா,ரேகன் கலவைச்சாநதம, பனிநீா,ஸ்நபனமுதலியவறறாலபிஷேகஞ் செய விதது,பட்டுப்பரிவட்டததாலும, முதது, பவளம,மாணிககமுத லியமணிகளாலமைதத ஆபரணஙகளாலும, முல்லைமலலிகை செ வவநதி,மரு,கொனறை,தும்பை,வில்வமுதலியவறறாலமைதத இ ண்டைமாலை,கணணி,தொடையல,பிணையல,முதலியமாலைகளாலு ம்,நீறுசாநதக கலவையாலும புனைவிதது, நாலவகையுணடியறுவ கைசசுவையுமுடைய பாலினனடிசில நறுநெய கறிவகைபணணிய வகை பழவகை தண்ணீர், நல வாசததோடுகூடிய அடைககாயிலை முதலியவற்றை நிவேதிதது, தூபதீபம, கவரி, குடை, ஆலத்தி, கண்ணாடி, ஆடல, பாடல், வாத்தியமுதலியவுபசாரவகைகளிறகு றைவொனறுமில்லாதபடி நிறைவேற்றிச்சிவாககினியையுமோம்பிப் பூசிதது, சிவனடியார்களையும் அவ்வாறே வருவிததுத திருவடிவி ளக்கிப் பாததீாததம புனிதமாமபடி யுட்கொணடு அவாகளுககு இன்சொல முகமனபலவுங் கூறிவேண்டுவாாவேண்டும வகையால் அவாகளை முன்னே தேவாரமுதிலுஞ சிறநத பல்வகையுண்டியா னமுண்பிததுமுகவாச நீருதவித் தாம்பூலம் புஷ்பசந்தனமாலை

ஆபரணங்களால் அவர் மனங்களிக்கச்செய்து, மேல் வேண்டிய வைகளையும் வெறுப்பக் கொடுத்து வணங்கி அவர்களருள்விடை பெற்றுப் பின் தமது ஆன்மார்த்தமாயெழுந்தருளியிருக்கும் சிவலிங்கப்பெருமானைத் தங்குருவருணெறியாலருச்சிக்கலாயினர்.

கேளும் முனிவர்களே! பின் திருவெண்காடர் குருவருணெறிக்கை சேர்ந்து காலலம்பி ஆசமித்துப் பூசை மடங்குறுகி ஆசிரியனை யோகபீடத்தெழுந்தருளப்பண்ணியருச்சித்து, அருளைபெற்றிருந்து, ஆசமனமும் பிராணாயாமமுஞ் செய்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைத் தியானித்து பஞ்சசுத்தி முடித்து, அருக்கியமமைத்துப் பின் விக்கினேசுரபூசைத்திறியோடு ஆன்மார்த்தமாகியவுடையவரை அபிடேகவேதிகையிலெழுந்தருளப்பண்ணியருக்கிய தூபதீப நைவேத்தியம் பண்ணி யுபசரித்துத் தாம் செய்யும் அருச்சனைக்குத் திருவுள்ளஞ் செய்யும்படி பிரார்த்தித்து முதலில் அந்தரியாக பூசை செய்து, எம்பெருமானே புறம்பிலும் என் பூசையைக் கொண்டருளகவென்று விண்ணப்பித்து, தைலம் பஞ்ச கவ்வியம் பஞ்சாமிர்தம் கலவைச்சாந்தமுதலியவற்றாலும் அன்புமயமாகியசுத்தநீராலுந் திருமஞ்சன மாட்டுவித்து, ஒற்றாடைசாத்தி வெண்பட்டுமுதலிய பரிவட்டங்களாலும், முத்துமுதலிய மணிப்பணிகளாலும் அலங்கரித்து வெண்ணீறு சாந்தஞ்சாத்தி மூலலையாதி வெண்மலர்க்கண்ணி, இண்டை, தொடை, ஒலியல் முதலிய நறுமலாமாலை சூட்டி அட்டபத்திரங்களாலும் பூக்களாலும் அருச்சித்து, ஆன்ம நிவேதனமாகச் சுத்தபோனகவகைகளையும் தாம்பூலத்தையும் நிவேதித்து, உயிர் வாசமாகத் தூபதீபம் கருப்பூரவாலாத்திகவரிகுடை கண்ணாடிமுதலிய பணிமாறி, அன்புபெருக ஆடல் பாடலைநடத்துவார் ஒன்றுபல்வகைக்காரணாய மயங்கியருள வழிபட்டு நின்றார். அப்போது; சிவானுக்கிரகத்தால், திருவெண்காடையா! எல்லாக் கலைஞானமும் உன்பாலாக என்று ஓர் அசரீரிவாக்குண்டாயது. அதுகேட்டங்கிருந்தார் யாவரும் பெருவியப்பினையடைந்து, இப்பிள்ளையார் முருகப்பிள்ளையார் திருவவதாரம்போலும் என்று துதித்தார்கள். உடனே திருவெண்காடர் தம்மையாளுடையவையரைத் துதிக்கலாயினார்.

தோத்திரம்- வண்ணக்வொத்தாழிசைக்கலிப்பா.

அளவ்வயில்பேரருட்கடலேயம்மையப்பாவனைத்துடையாய
களவறுவார்தோரரசேகாலனைமுற்காய்ந்தோனே
துளவநறுந்தாருடையானறேன்றலைத்தோன்றுஞ்சக்கி
வளமருவுமலைமகளைமணந்தபிரான்வாழியவே.

இவையெட்டமபோதாஙகம

புகலுநீ புண்ணியநீ போதநீ நாதனீ
தகவுநீ சார்புநீ சற்குருநீ சயம்புனீ
விடையைநீ வேதியநீ மேதினிநீ வேதமுநீ
டையைநீ யுணர்வுநீ யுரியைநீ பெரியைநீ.

இவைபதினாறம்போதாஙகம.

னவாறு-இது தனிசசொல.

முதுவாகூறியமுழுமொழியலலதைப
புதுமொழிவேறுபுகனறனவிலலை
யாதலினையவெளளலை
பேதைபுகலெனப்பெரிதளிநதருளே.

இரசரிதசம.

என்று பாடி, ஆனநதககூததாடி அழுதுதொழுதார இதனை சகணடோர யாவருஙகளிசிறநதனர. அப்பால, திருவெண்காடர உததரபூசை முடிததுப்பெட்டககோயிலுள உடையவரையும, மூதத பிளளையாரையும எழுநதருளப்பண்ணித தமது நெஞசம போனறதோர சுததககாப்பி லிருநதருளபபணணி, நிவேதனமான பிரசாததததாலும ஏனைய சிறநத பொருள்களாலும தமமாசிரி ரைப் பூசிததுககளிககசசெயது, அவர கட்டளைபெறறுத்தாயாரும சுறறததாருமுட னிருநதுணணச சிவப்பிரசாததததினை யுட்கொணடு நீறணிநது, ஐநதெழுததெண்ணி அலைவறற சிநதைய ராயினர. சூரியாஸதமனமு மாயவிட்டது

திருவெணகாடர் தாயாரோடு மகேசுரபூசைககாக வுசாவுதல.

அப்பால, அவவசியகுலதீபமாகிய வெண்காடர, தமது குர வருககும, சிவநேசசசெலவராகிய அந்தணர முதலிய அடியவ ரகளுககும மிகுந்த தக்ஷிணை கொடுக்கவெணடுமெனறெணணி அனனையா ரிடஞசெனறு வணங்கிநினறு, தாயே! தேவரீர கருணையினால செ யது முடிக்கவேண்டுவன வெலலாவற்றையுஞ்செய்து முடித்தவ னாயினேன. ஆயினும் சிறுகுறை யொனறுள்ளது அதனைக்கேட் டருளுக: என்னெனில், வேதாகமஙகள சிவலிங்க மூர்ததத்தினை யிரண்டு வகையாகப் பிரிததுவைததன. அவற்றுள் ஒன்று தாவர மூர்ததியெனவும, மறறொனறு சஙகமமூர்த்தி யெனவும் பேர்பெ றும். தாவரமூரததி, சிதம்பரமென்னும் கோயில் முதலிய மஹா க்ஷேத்திரங்களில் பார்த்தமெனவும, அன்போடு பூசைசெயபவ ர்களாகிய அடியார்களிடத்தில் ஆனமார்த்த மெனவும் கூறப்பட் டெழுந்தருளியிருக்கும் சிவலிங்கப்பெருமானும். தாவரமென்று ம ஸ்திரமென்றாலும் பொருளொன்றே. சஙகமமூர்த்தி. அக

சிவபெருமானை இரவுபகலொழியாது இதயக்கோயிலில் வீற்றிருக்கச்செய்து நம்மை யடிமைகொள்ளும் பெருமக்களாகிய அடியார்களாம் அவர்கள்தான் வேதம், வேதாங்கம், ஆகமம், புராணமுதலிய கலைகளெவற்றிற்கும் பிறப்பிடமானவர்கள். எல்லாத்தருமங்களும், ஆசாரங்களும், செல்வங்களும், இன்பங்களும் அவர்களிடத்திலிருந்தே யிவ்வுலகம் பிழைக்க வெளிப்பட்டன. சங்கமமென்றாலும் சரமென்றாலு மொரே பொருள். ஆதலால், தாவரலிங்க பூசையினுஞ்சிறந்தது சரலிங்கபூசையாம். "படமாடக்கோயிற் பகவற்கொன்றீயில், நடமாடக்கோயி னம்பர்க்கங்காகா, நடமாடக்கோயினம்பர்க்கொன்றீயிற், படமாடக்கோயிற்பகவற்காமே." என்ற மந்திரமே சாக்ஷி. நாம் தருமபொருள் தினையளவினதாயினும் "தண்டுலசிந்தை தபோதனர் தாமகிழ்ந், துண்டதுமூன்று புவனமுமுண்டது, கொண்டதுமூன்று புவனமுங்கொண்டதென, றெண்டிசை நந்தியெடுத்துரைத்தானே" ஆதலால் இங்குவந்துள்ள சைவமாகேசுரர்களாகிய வேதியர்முதலியயாவரையும் அருச்சிப்பது கடனாகவிருப்பதால் அதற்கான பொருள் சேகரித்தருளவேண்டுமென்று விண்ணப்பித்தார்.

அதற்கவ்வம்மையார், மைந்த! நீகூறியதெல்லாமுண்மையே, ஆயினும் இதுவரையும் நம்மிடத்திருந்த பொருள் முழுவதும் செலவாயவிட்டது. இனிக்கடன் வாங்குதலொழிய வேறுவருவாயுமில்லை என்செய்யக்கடவேம் என்று கூறினார். அப்போது திருவெண்காடர் மனங்கலங்குறாது, ஐயா அன்று கனவிலே "உனக்குப் பொருள் சிறிது சிலகாலம் வேண்டுவதுதான்" என்று சொன்னதுண்மையாயிற்று. என்செய்வது, "ஒண்பொருள் காழ்ப்பவியற்றியார்க்கெண்பொருளேனையிரண்டுமொருங்கு" என்ற பெரியோர்மொழிபொய்யல்ல இப்போது ஸ்ரீருத்திரபாராயணஞ் செய்த வேதியர்க்கும், நமது தீக்ஷாகுருவுக்கும் தக்ஷிணை கொடுக்கவேண்டுமே; என்னகொடுப்பது? யாது செய்வது? எவ்விடத்திற் கடன் கேட்பது? யார் நமக்கு வேண்டிய அவ்வளவு பொருள் சட்டு கொடுப்பார்கள்? கடன் வாங்குவதற்கும் வயது சாலவிளம்பருவம் உடையவனாயிருக்கின்றேன், சீச்சீ" இல்லாமை மிகக்கெட்டது. "இன்மையுளின்னாததியாதெனி னின்மையுளின்மையேயின்னாதது" என்றதுண்மையே யன்றோ! என்று பலவகையாலும் நெஞ்சுகவலப்பட்டுச் சிந்தித்துத் தேறும்வகையுந்தேற்றுவாருமின்றி நைந்துவருந்தி, தமதுள்ளுறைவாகிய கடவுளுக்கு விண்ணப்பித்துச் சிவத்தியானத்தோடு நிலத்திற்படுத்துறங்கினார். அவர் அன்னையார் ஞானகலாம்பையாரும் மகனார் மனக்கவலைநோக்கித்தாமும் கவ

லையுற்றவராய் அவாரும்க ந்ததுனை மசயதா. மறறைய வேதியர் முதலிய யாவரும், ஆலயமண்டபததிலும, சோலை நந்தவனஙகளி லும, மடங்களிலும் இசசைவழியே சிவத்தியானத்தோடுஞ் சயனித்திருநதனாகள

கேளுமமுனிவாகளே! அப்பால எல்லாம வலல கடவுளான வர், அவவெண்காடா மனக்கவலையறுக்கத திருவுளஙகொண்டு, அன்றிரவு அவாகனவில, முன்னேவந்தாற்போலும விருததராகிய சைவவேதியா் திருவடிவோடு கேர்லுானறி வநது, ஏதி ரினறு ஐயா! திருவெண்காட! அஞசறக. நெஞசககவலையொழிதி. நீ நம தனபாகட்கு இனியை யாதலால எமககும இனியை, ஆகவே நீ வேண்டும அளவ்ானபொன, மணி, பூண, ஆடை முதலிய வெலலாம குறைவறக கொடுததோம. அவை யெலலாம உன மனே யகததுளளன. அவறறுள நமதனபாகள வேண்டியவை களை வேணடியவாறு வெறுபபகெொடுதது நீ வேளவிப பயனைப் பெறறியெனறு திருவாய்மலாநதருளிப போககுககாட்டி மறைந் தனா அப்போது, திருவெணகாடரும அககனவிறறுனே தொட ரந்தோடி, எமபெருமான! எஙகெழுநதருளுவது, இவவாறு கை விட்டுப்போவதும் அருளியலபோவென்றரறறி மறைநதமைககு வருநதி, உடனே விழிததெழுநது சிநதிததிருநதா அபபோதரு கே சயனிததிருநத அவரன்னையா அரணடெழுநது மகனை நோககி ஐய! பகலெல்லாம சிவாாசசனைகாரியததில அலநத நீ இபபோது சிறிதுநேரமாயினும அலைவற்றிராது, எனன கவலோ டு இருககினறுயெனறா. மகனும எழுநதவளை வணஙகித தாங கணட கனவினைககூறக்கேட்டுளளமுவநது கடவுளருளைவாழததி அப்போது விடியுநதருணமாயிருநததால சூரியவுதயததையெதிா பாாத்து மைநதரோடு மிமையாது காததிருநதா.

அத்தருணததில, காவிரிப்பூமபட்டினததது இவர்களகுடிவாழ மனையிற்காவலபூணடிருநத மெயகாபபாளருட்சிலரோடிவந்து அவ் வம்மையாரை வணஙகி நினறு அம்மணீ! தாஙகளபூட்டிட்டுககா வல வைத்திருநத தஙகள் மனையுளளே அறை யிருலிலோ பெரு ஞசோதியுண்டாய இன்னதெனறு எஙகளால மதிககவொண்ணாத வணணமாயிருந்தது. எங்கள் கண்களுங கூசின. ஆகவே, இவ்வதி சயத்தைத் தஙகளுககு விணணப்பிகக வநதனம. அவவொ ளியின்னுமாறவிலலை எனறுர்கள். அதைக் கெட்டமாத்திரத்தில அவ்வுததமமாதரா, தமது மைநதா்களை வுண்மையாமபோலுமெ னமதித்து எழுநதனர். சூரியனுமுதயமானன். உடனே காலககட்

ன்முடித்துப் புதல்வராகிய திருவெண்காடரோடுங் காவிரிப்பூம்பட்டினம் வந்து மனைபுகுந்து வாயிற்காப்பு நீக்கி உட்புகலும், இந்திரன் நகரும், அளகையும் போலும் நிதிக்குவையல்லால் கால் வைக்க எள்ளிடமும் பெறாது நிரம்பியிருக்கு மாளிகையறையிடம் முதலியவற்றைக் கண்டச்சமும், அன்பும், ஆனந்தமும், வியப்பும் பெருக, அந்நிதி சிவப்பிரசாத மாகையால் கிரமப்படி அருச்சனை செய்து தூபதீப நிவேதனங்களா லாராதித்து வணங்கி, அதினின்றும் அப்போதைக்குத் தமக்கு வேண்டுமளவு பொன்னும், நவமணிகளும், ஆடையும், பூண்களும், மற்றவைகளுங் கொண்டு பண்டி யேற்றித் திருவெண்காட்டுக்கு முன் செல்ல வனுப்பிப் பின்னே தாமும் மைந்தருமாகத் தம்மாளிகையைத் தாழிட்டு முத்தரித்து மெய்க் காவல் வைத்துப் புறப்பட்டுத் திருவெண்காடு வந்து சேர்ந்து, அத்திரவியத்தையெல்லாம் அவ்வாலயத் தொருபுறத்திற் கருவூலஞ் செய்தமைத்து வைத்து, மகனைநோக்கி, ஐய! இனி நீ உன்னெண்ணம் போலும் குருபூசையும் மகேச்சுரபூசையும் செய்கவென்று சொல்லினார்.

உடனே, திருவெண்காடர், விதிப்படி நீராடித் திருவெண்ணீறக்கமாலை புனைந்து நித்தக்கடன் முடித்து, தமது ஆசிரியரையும் அந்தணர்கள் முதலிய சிவனடியார்களையும் நல்ல ஆசனங்களில் எழுந்தருளப்பண்ணி, பாதபூசை செய்து பாதோதகமுட்கொண்டு, அவர்களனைவருக்கும் காதணி கடுக்கன் குண்டலம், கழுத்தணி கண்டிகை ஆரம் பதக்கம், கையணி வளையாழி மோதிரம், அரைஞாண் காலணி பாதுகை, பொன்னுடை, பட்டாடை, பருத்தியாடை, பூசாபாத்திரம், அடுக்களைபாத்திரம், திரவியம், பசு, விளைநிலம், ஆளடிமை முதலிய பலவும் வேண்டுவார் வேண்டியபடி வெறுப்பக்கொடுத்து வணங்கி உபசரித்து, குரவர் நீங்க மற்ற வேதியர்களைத் தத்தமிடம் போக இனிய வார்த்தை சொல்லி யனுப்பியபின்பு, தம்மாசிரியரிடம் மீட்டும் வந்து பணிந்து நின்று, எம்பெருமானே! தேவரீர் கருணையால் எல்லாம் நிறைவேற்றினவனாயினேன், யானும், என் குலமும், என் முன்னோரும் ஒருங்குய்ந்தோம். இனியாதொரு குறையுமில்லை. என் மனக்கவலை யெல்லாம் ஒழிந்தது. ஆயினும் இனி முன்னுக்கு அடியேன் செய்யத்தக்க பணிவிடையாது? அதனைக் கட்டளையிட்டருள வேண்டுமென்று பிரார்த்தித்து நின்றார். அப்போது அவ்வாசிரியர் அவரைநோக்கி, ஐய! நீ குறை முடிக்க வந்த தேகி. உன் சார்பில் வாழ்பவர்களனைவரும் சிவன் முத்தரே யாவர். ஆகவே உனக்குப் புதிதாக வுணர்த்தக் கிடந்த தொன்றுமில்லை. ஆயினும், நீ நம்மை வினவியதால் உணர்த்துவதொன்றுண்டு. அதா

வது, "ஏதுக்களாலு மெடுத்த மொழியாலுமிக்குச் - சோதிக்கவே ண்டா சுடர்விட்டுளனெங்கள்சோதி - மாதுக்கநீங்க லுறுவீர்மனம பற்றி வாழ்மின் - சாதுக்கள்மிக்கீ ரிறையேவந்து சார்மின்களே" எனவும், "அடியேனடுவுள ளிருவீருமிருப்பதானா லடியேனுன் அடியார் நடுவுளிருக்குமருளைப்புரியாய்," எனவும, "அரியவற்று ளெல்லாமரிதேபெரியாரைப, பேணித்தமராக்கொளல" எனவும மஹாவாக்கியங்கள் விதித்தலால், இரவுபகலொழியாது சாதுசங்க மொனறனைமாத்திரம உறுதியாகப்பிடித்து அவர்களிடத்தி லன்பு செய்துவரக்கடவை. இதனமேலுனக்கு யானறிவிக்கத்தக்க தொன்றுமில்லையென்றார். இங்ஙனம கூறிய குருமொழியானது திருவெண்காடர் திருவுளளத்துப்பசுமரத்தாணி யறைந்தாற்போலும் பதிவுற்று, அதுமுதல் நாளதோறும உணமையான அன்பும பத்தியும் வளர்பிறையின கலைபோல வளர்ந்து ஓங்க, குருபூசையும, சிவபூசையும, அடியார்பூசையும கண்டவர்கேட்டவர்களெல்லாம அதிசயிக்குமபடி நடத்திவந்தார். அவ்வருமைப்பாட்டினைச் சிவனனறி உணர வல்லவராக ஞாலத்தொருவரு மிலலையாயினர் கேளும முனிவர்களே! இக்குருலிங்க சங்கமபத்தி செய்ய வல்ல பெரியோனைக்காண்பதும, அவன சரித்திரங்களைக்கேட்பதும, அவனோடுறவுகொளவதுமே இம்மானுட வடிவமெடுத்ததற்குப பயன எனறு சத்தியமாக வுணரக்கடவீர்கள்.

## திருவெண்காடர் திருமணம.

கேட்பீர்களாக, அப்பால் சிலநாளிருந்து, ஆசிரியராகவந்தபிரமசாரி வேதியர் தமமிச்சையேபோன வழி சென்றபின, திருவெண்காடர் குருவருள நெறிதவறாது, குருலிங்கசங்கமபத்தியை நடத்திச சகலகலாஞானத்திலும ஆன்றோராயப பிராதமமை யிததனமையனெனறுதெரியாவண்ணம நீறுபூத்தநெருப்பேபோல வொழுகுமநாளில், இவர்க்குத் திருமணஞ்செய்யத்தக்க காலைபபருவம வந்தது. வரலும் இவரை ஈனறெடுத்த தாயாரானவர், கண்டு சிந்தித்துத தமமரபுக்குஒத்தமரபு, ஒழுக்கம், செலவம முதலியவற்றால குறைவற்ற குடியிற்பிறந்து நற்குண, நற்செய்கை, அறிவு, ஆசாரம், அடக்கம, அழகு, கற்புடைமை முதலிய அமைந்த கனனி எங்குளளாள் என்று ஆராய்ந்துகொண்டிருந்தார்.

அப்படியிருக்க அக்காவிரிப்பூம் பட்டினத்திற்றானே உத்தம வேளாண்டகைமை சிறந்த வசியகுலத்திற்றோனறி, அறிவால் அநந்தனையும், சுத்தத்தா லக்கினிதேவனையும், சம்பத்தால் அளகைக்கோனையும் ஒத்த சிவசிதம்பரசெட்டியாரென்பாரொருவர் தம்மரபுக்கொத்த மரபிற்பிறந்து அழகால இலக்குமியையும், கூபாலருக

திதியையும் வென்ற மஹாசீலையாகிய சிவகாமியம்மை யென்னு மனைவியாரோடு கூடித் தங்குலவொழுக்க மீறுபடாதவகையா லில்லறதருமம் வழுவாது நடத்திச் சிவநேசமும், அடியார் பத்தியுமே தமது பெரும்பேறாக வழுவாது பாதுகாத்து வாழ்ந்திருந்தார். அவரும் அவர் பத்தினியாரும் அருந்தவம்பல செய்து, உலகத்துள்ள அழகுந் தவமுந் திரண்டொரு வடிவெடுத்தாற் போலவோர் பெண்கொடியைப்பெற்றுச் சிவகலையம்மை யென்று பேரிட்டுச் சுற்றத்தார் அயலார் யாவரும் வியக்கும்படி தனது செல்வத்திற்கேற்ப அருமை பலசெய்து வளர்த்துவருநாளில், அத்தவக்கொழுந்தாகிய சிவகலையெனனும் பெண்ணரசு அழகு, அறிவு, அடக்கம், ஆசாரம், அன்பு, தவம், பொறுமை, தயவு, ஈகைமுதலிய தம்மியற்கைக் குணங்களெல்லாம் கேட்டோர் யாவரும் விழையும்படி ஒருங்குக்கூடியுடன் வளர வளர்ந்து பெற்றோர்களின்பம் பெருகத்தளர்நடைப்பருவம் கடந்து பேதைப்பருவந்தாண்டிப் பெதும்பைப் பருவஞ்சென்றது. அதுகண்டு பெற்றோரிருவரும் நமது திருமகளுக்குத்தக்க கொழுநன் யாவனென்று, தம்முள்ளே யெண்ணி யெண்ணிப் பின் திருவெண்காடராகிய நமது ஐயர் திருச்சரிதமுணர்ந்து இவரே யிப்பெண்ணுக்குரிய மணவாளநம்பி யாவரென்று நிச்சயித்திருந்தனர்கள்.

அக்காலத்தில், திருவெண்காடர் அன்னையார் அச்செய்தியுணர்ந்து தம்மரபிற் றக்க முதியோரைச் சிதம்பரசெட்டியார்பால் மகட்பேசவிடுப்ப, அவர்களுஞ் சென்றவரை வினவினர்கள். உடனே அச்செட்டியார் மகட்கொடுப்ப நேர்ந்து, செய்தி அனுப்பி, மற்றொருநாளில் கணிதநூல் வல்லோரை வருவித்து, நம்பிக்கும் நங்கைக்குந் தக்க மணவினைக்குரிய நாளுமோரையும் நிச்சயித்து, சுற்றத்தினர்க்கும் நண்பினர்க்கும் மணவோலைபோக்கித் திருக்கலியாணமண்டபம் சிறப்பாகச்செய்து வாழை கமுகு தெங்கு நாட்டிப் பூவாலும், ஆடைகளாலும், மணியாலும், கவரிகண்ணாடி விளக்குப் பாலிகை முதலியவற்றாலும் அலங்காரஞ்செய்வித்தனர்கள். இச்செய்தி கேட்ட அவ்வூரினுள்ளார் யாவரும் அம்மணத்தினைத் தங்கடங்கள் மணம்போல வெண்ணித் தத்தம் மனை மாளிகை முதலியவற்றினையும் அலங்கரித்து மாதரும் மைந்தரும் தாங்கடாங்கள் தம்முள்ளே களிசிறந்து மணவலங்காரம் புனைந்து, மங்கலங்கொண்டாடினர்கள். பின்பு குலமுதியோர் திருவெண்காடருக்கு முன்னைநாளை விரதசமாவர்த்தனம் செய்து, காப்புத்தரித்து, முளைபரப்பி மறுநாட்காலை வாசநீராட்டி வெண்பட்டாடை புனைவித்து, கடுக்கன் ஒட்டுக்கழுத்தணி யாரம்பதக்க முதலியனவணிவித்துக் கைய

ணிமோதிரம்பிறவும்பொன் அரைஞாணபட்டிகையுந் தரிப்பித்து, தலைப்பாகை சூடி பூமாலை தொடையல்வேயச்செய்து, அழகுக் கழகுசெய்வதுபோ லணிந்தார்கள். அப்பால அவ்வசியகுல மணி விளக்கானவர் திருவெண்ணீறறுப்ப புண்டரமணிந்து தமதான்மார்த்த பூசைமுடித்து உடையவர்பால் விண்ணப்பித்து விடைபெறறுச சென்று சங்கமேசுசுரரையும், சாயாவனப்பெருமானையுந் திருவெண்காடடிறைவனையும் சென்று பணிந்து மருந்தவாணனைந் தியானித்து நண்பினர் சுறறத்தார மிருகளிபபோடு புடைசூழநது வர, மததளம, சசசரி, யாழ், வீணை, குழல முதலிய துளைசகருவி, பேரிமுதலிய வாததியஙகள முழங்க மாதாகள நடனஞசெயயச சிவிகையேறி ஊாகோலமாகிசசென்று சிதமபரசெட்டியாா மனையருகாக வந்து சேர்நதாா.

அபபோது, சுமஙகலிகள அஷடமஙகலததோ டெதிாவநது செந்நீராலததி சுற்றிக கணமிசசலபோகசப பிராமணோதமாகள அக்ஷதை மலாகள வீசி ஆசிாவதிககச்சிவிகைவிட்டிழிநதுவலததாள முனவைதது கடிமணமணடபததில பிரவேசிததவளவில் கடலொ முழககமபோலப் பலவாததியஙகள முழஙகின. அப்பால நமது வெணகாட்டையாசெனறு கலியாணபீடததில வீற்றிருநதனா சிதமபரசெட்டியாா சுகநதமஙகல நீராட்டிப் பட்டுடுததுப் பலவகை மணிக்கலஙகளால பேரணிசெயது வைததிருநத தமதுகுமாரததியாரை அசசபையிலுளள பெரியோராணையினபடி நலல முகூாததத்தில சுமஙகலிகள மஙகலமபாடிச சூழ அழைததுவநது கலியாணபீடததில நமபெரியோராகிய வெணகாடா வலப்பககத திருககசசெயது, பததினியாா விதிபபடி யருச்சிக்கபபட்ட கலச நீரவாகக வெண்காட்டு நமபிகள் பாதமவிளக்கி வரபூசைசெயத பின் சஙகற்பிதது உபயகுலஙகோததிரம சூததிரஙகூறி நமபிகள் கரததில் நஙகையாா கரமவைதது யான தவததாலீனற இககனனிகைய வெண்காடரோ தேவர்களகாண வுமதகளிததேன் ஆதலால நீர் இல்லறககிழமைபூண் டொமர்ககு இருமையும் அளிப்பீராக" என்று தாரைநீர் சொரிந்து வாழ்த்தினா. சுமங்கலிய முதுமாதர் பலலாணடு கூறினர். அந்தணர் முதலிய பெரியோா ஆசீர்வாதஞ் செயதனர். அப்பால்புரோகிதர் மணவினை விதிப்படி மாஙகலியத் தாரண முடிப்பித்து ஓமாக்கினியையும் சாந்திதேவர்களையும பூசித்துப பொரியிடுனோடு பூரணாகுதிமுடிதது "சத்தபதி" யென்னும் அம்மி மிதித்தலையுஞ் செயது திவலம்வந்து தம்பதிகள் வணங்க யாவரும் மங்கலமபாடி வாழ்த்தி அத்தம்பதிகட்குப் பால் பழமூட்டிக் களிகொண்டாடினார்கள். சிதம்பரசெட்டியாரும் அந்தணர்

முதலியோர்க்குப் பொன்னுடை நவமணிகள் முதலியவற்றைத் தாம்பூலத்தோடும் கொடுத்துப் பூசித்து, பின் அந்தணர் முதலியோர்க்கும் தம்பதி சுற்றநண்பினராதியர்க்கும் அறுசுவையுண்டியாலும் ஏனைய தாம்பூலஞ் சந்தனம் புட்பம் முதலியவற்றாலும் உபசாரஞ்செய்து, அவரவர்க்குத் தக்க பரிசெல்லாம் நிறைவேற்றிக் கலியாண விழாக்கொண்டாடினார். சுற்றத்தார் யாவரும் மகிழ்சிறந்தனர் நண்பினர் அயலவர் முதலியோர் பேரானந்தமடைந்தனர். இவ்வண்ணம் நான்கு தினமும் கிரமப்படி ஔபாசனாதிகளை நடத்தி ஐந்தாநாள் மங்கலஸ்நானமு முடிந்தது.

பின்பு அப்புதுமணவாள நம்பியும் மனையாட்டியான நங்கையோடு சர்வாலங்காரமுடையவராய் ஒக்கல் நண்பினர் சூழ்ந்துவரப் பெரியோர் ஆசீர்வதிக்க மங்கலவாத்திய முழங்கச் சிவிகையேறி மணக்கோலத்தோடு தம்மனைபுகுந்து அங்குவந்திருந்த அந்தணராதி பெரியர் சுற்றம் நண்பினர் யாவரையும் உண்டிவினையாலும் மற்றை அணிபூணுடை முதலிய பலபரிசாலும் களிக்கச்செய்து தத்தமிடஞ் செல்ல விடுத்துத் தாம் தம்மனைவியாரோடும், அன்னையாரையும் ஆட்கொள்ளவந்தெழுந்தருளியிருக்கும் ஆன்மார்த்தவுடையவரையும் காலந்தவறாது பூசித்து, "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கலென்றாங் கைம்புலத்தாறோம்பற லை." என விதித்தவண்ணம் இருவர்க்கருத்தொத்து ஐம்பெரும் வேள்விகளையும் வழுவாது நடத்திக் குடிமுறை பிறழாது பலவேறு தேயத்துநீப்பத்துக்களும் வாணிப விருத்தியையும் செய்து வந்தனர். இவர்கள் இல்வாழ்க்கைத் திறத்தினைக் கண்டு வியவாதாரொருவருமில்லையென்பரேனன், இல்வாழ்க்கையை விரும்பினவர் யாவர்க்கும் இத்தம்பதிகள் எடுத்துக்காட்டிலக்கியமாய அவ்வாழ்க்கை விதியினியல்பை விளக்கினின்றார்கள்." கேட்டீர்களோ முனிவர்களேயென் றுபமன்னிய முனிவர் கூறினார்.

### முனிவர்கள் உபமன்னியரை ஐயம் வினவுதல்

இங்ஙனம் உபமன்னியமஹாமுனிவர் வாக்கியத்தைக்கேட்ட முனிவர்கள் பெருங்களிப்புடையவர்களாய், சுவாமீ, திருவெண்காட்டர் திருவவதாரமும், அவர் கிரியாதீக்ஷை பெற்றுச் சிவபூசை செய்யும் பேறு பெற்றதும், அவர் திருக்கலியாண விபவமுங் கேட்டுப் புனிதரானோம். சிவசரித்திரத்தினும் சிவனடியார் சரித்திரம் மிகவும் மங்களமாயுள்ளது. இனி, மூவர், தேவர், மானிடர் முதலிய சரவுயிர்களுக்கும், புன்மரமுதலிய அசரவுயிர்களுக்கும், பதியாவார் பரமசிவம் எல்லாப் பொருளிலேயும் கலந்திருந்தும் அவற்றுளொன்றோடும் தாக்குதலற்று அவைகளை முழுவதும்

நடத்துவிக்குந்தலைவராமான்மா முதலிய முப்பத்தாறு தத்துவங்கட்கு மப்புறப்பட்டவர் என்றும், மூலப்பிரகிருதி விஷ்ணுவென்றும், புருடதத்துவம் உருத்திரமூர்த்தியென்றும், இப்பிரகிருதியும் புருடனும் ஆண்பெண்வடிவிற்கூடிய கூட்டம் உலகப்படைப்பினுக்குக் காரணமாயிற்றென்றும், இக்காரணங்கடந்துநின்ற அவ்விறைவர் தமக்குத் தாமே வயப்பட்டவராய்த் தமக்குமேலொரு தலைவருமில்லாதவராயும், அன்பர்க்கருள்தரத் தமதருளிச்சையாற்றிருமேனிதரிப்பதல்லது புவன போகங்களை அனுபவிக்கின்றனமைபோல மலபாகதேகமுடையரல்லராயும், கல்வியாதிய காரணமின்றி இயல்பாகவே எல்லாமொருங்குணர்ந்த பேரறிவினராயும், மலபாசங்களோடு என்றுங் கலவாதவராயுந் தம்மை நினைப்பவர்க்கெல்லாம் இன்பம் விளைக்கின்ற பேரின்ப மூர்த்தியாயும், அணுவிலணுவும் அண்டத்துளண்டத்தும் அடைத்த அளப்பரிதாமாற்றலுடையராயு முள்ளவரென்றும் வேதாகமமுதலிய கலைகளெல்லா முறையிடுகின்றன. அங்ஙனியும் பிரகிருதியாதாரமாகும் புருடதத்துவ சொரூபியாகிய உருத்திரமூர்த்தியும் ஒரு கற்பத்தில் விஷ்ணுமூர்த்தி நாபிகமலத்திற் பிறந்த பிரமதேவன் தனக்கு உலகத்தைப் படைக்குந்தொழில் கைகூடாமல் வருந்தித் தபஞ்செய்தகாலத்தில் சிவானுக்கிரகத்தால் அப்பிரமன் நெற்றியில் அவதரித்தாரென்றும், அப்பிரமவிஷ்ணு முதலிய தேவர்கள் யாவரும், சாப முதலிய காரணங்களால் மானுடயோனிகளிலும், திரியக்குயோனிகளிலும் பிறந்ததாகவும் கூறியுள்ளது. அல்லாமல், அவ்வேதாகம முதலிய கலைகளெல்லாம் சிவபெருமானையென்றும் பிறந்திறவாதவன் என்று சொல்வதுமாத்திரமோ? அவரது ஆயிர நாமங்களிலேயன்றி எவ்விடத்தும் அவரைக் குறிக்கவேண்டுமாயினும் அவ்வவ்விடங்களிலும் பிறப்பிறப்பிலானென்பதே அவர்க்கு யோகரூடிப்பெயராக வழங்கி வருகின்றது. இச்செய்தியாரு மறிந்தபடி. இங்ஙனமிருக்க இவ்விறைவர் திருவெண்காடனருக்கு எவ்வாறு புதல்வராயினர் என்பது பெரியதோராயம். அஃதங்ஙனமாக, அவரிருக்கும் காவிரிப்பூம்பட்டினத்திற்கடுத்த சாயாவனமுந் திருவெண்காடுமாகிய திருப்பதிகளிருக்க அச்சம்பந்தமான திருநாமங் கொள்ளாது மருதவாணனென்னுந் திருநாமத்தால் அவ்விறைவர் வந்து அவர் மகவாகை நீத்து, அருளுஞ்செய்ததற்கு நிமித்தம் யாது? இவற்றை விளங்க வெங்கட்கருள்செய்யவேண்டுமென்று விண்ணப்பித்தார்கள். அப்போது, அவர்களை நோக்கி உபமன்னியர் சொல்லலாயினர்.

ஓ! முனிவர்களே! உங்கள் வினாமிகச்சிறந்தது. இது மோக்ஷத்தை விரும்பி முயற்சிசெய்வார் முன்னே அறிந்துகொள்ள

ள்வேண்டுவதாக விருக்கின்றது. ஆகையால் ஞாபகத்தோடுங் கேட்பீர்களாக. முன்னொருகாலத்தில் மெய்ப்பொருளின்னதென்று அறியவிருப்பமடைந்த முனிவர் பலர் ஐம்பொறியின் வழியே புலன்களை நுகரச் செல்லவொட்டாது மனதை யொருவழிப்படுத்தி, அந்த திருவிடைமருதூரின் கண்ணே அருந்தவ நெடுங்காலஞ் செய்திருந்தனர். அப்போது பிரமதேவன் அவர்கள் தவத்தினுக் கிரங்கி, சரச்சுவதி தேவியோடு அவர்களுக்கு வெளிப்பட்டுத் தரிசனை கொடுத்தார். உடனே முனிவர்கள் கண்டுவணங்கித் தொழுது, எம்பெருமானே அறியாமையான விருளிற் கிடந்து, வாத தருக்கமென்னுஞ் சுவரின் மோதித் தலைபிளக்க வருந்துகின்ற அடியோங்களுக்குள்ள ஐயத்தினைத் தேவரீர் அன்றி விளக்குவார் பிறரொருவருமில்லாமையால் எங்கள் குறையைத் தீர்த்தருளவேண்டுமென்று பிரார்த்திக்கப் பிரமதேவனும் அவர்கள் விண்ணப்பத்தினைத் தம்முள்ளங்கொண்டார். அக்குறிப்பினையறிந்த முனிவர்கள் உடனே கேட்கலாயினர், ஐயா! தத்துவங்களையெல்லாம் அசைப்பித்து எவ்வகைத் தொழிலையும் நடத்துவோன் யார்? மேலானது என்ற பொருட்கெல்லாம் மேலானவன் யார்? ஒரு பொருளை விரும்புதலும் ஒரு பொருளை வெறுத்தலுமில்லாத பரமேசுரன் யார்? பிறவிக்குக் காரணமாகிய பற்றுக்களெல்லா மியல்பாகவே கடிந்து நின்ற பரிசுத்தன் யார்? வேண்டுவார் வேண்டும் பொருளெல்லாங் கொடுக்கவல்லனாகிய புகழாற் பூசிக்கப்படுபவன் யார்? முடிவில் எங்கே ஒடுங்குவது? இந்த மஹா பூதங்களெல்லாம் யார்க்கு வசப்பட்டடங்கி நிற்கின்றன. எவற்றையும் ஆட்டுவிப்பான் யார்? அவனை நாங்களெவ்வாறு அறியலாம். எவ்வகை முயற்சியாற் காணலாம். இச்சந்தேகத்தை இவ்வுலக பிதாவாகிய தேவரீர் தீர்த்தருளவேண்டுமென்று மீட்டும் பணிந்தார்கள்.

அப்போது பிரமதேவன் மிகமகிழ்ந்து சிவத்தியானஞ் செய்து கண்களில் ஆனந்த நீர்பெருக, மயிர்ப்புளகமரும்ப, அஞ்சலியத்தராக வெழுந்து நின்று அம்முனிவர்களை நோக்கிச் சொல்லத்தொடங்கினர் ஓ! முனிவர்களே! நித்தியமாயுள்ள வேதாகமங்களெல்லாம், நீங்களிப்போது வினவியவொருவனை யறியவேண்டித், தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்ற லுடைமை, வரம்பிலின்ப முடைமையென்னும் எண்குணங்களைப் பற்றித் தேடித்தேடிச் சென்றும் உண்மை யறியாது அலுத்து நின்றுவிட்டன. இன்னுந் தேடு நிலைமையிற்றா னிருக்கின்றன. இவ்வுண்மையை அநுபவமாகக்

கண்டு காமமடைந்தோனே வித்துவானை அவன் ஓனறமகும தன் னெஞ்சில் அஞ்சான். அதுநிற்க.

அவ்விறைவனை "ஒருநாமமோருருவ மொன்றுமில்லான்" எனவும், "அவனருளே கண்ணாகக்காணபதல்லா, லிப்படியனிவ வுருவ னிவ்வண்ணத்தா னிவனிறைவனென றெழுதிககாட்டொ ணாதே" எனவும மறைமொழி யுள்ளனவாயினும, "வசீ" எனபது வசத்திலுள்ளது எனறும ஆத்தமுடையது எனவேதனகருள் ளடக்கியது எனறபடி. இலக்கணையாலவிரும்பததககது. எனவும, ஒளியினை யுடையது, எனவும பொருளபடும. அது ஷிமசி என னுஞ் சொல் எழுதது நிலைமாறி சிமஷம என நின்றாற்போல எழுத்துநிலை மாறிச் சிவவென நின்று அநத இறைவன் திருநாம மேயாகி யோகரூடியால'வழங்குகினறது. ஆதலால, முனிவாகளே! நீஙகள் விரும்பியவிலககணமுடைய தலைவன சிவனேயாம. அசைவ னவும நிற்பனவுமாகியவெலலாவறறுணினறுமநடததலாற கடவு ளெனவும், குணஙகளையும் மனமுதலியகரணஙகளையும புலனக ளையும், பூதங்களையும, பொறிகளையும, மற்றைத் தததுவஙகளையும, அரிபிரம ரிந்திரா முதலிய யாவரையும முதலிலே தானே தோற றுவித்தலால அமமையப்பனெனறும, "முழுவதுமபடைப்போற் படைக்குமபழையோன படைததவை,காபபோற்காககுங கடவுள காப்பவை, கரபபோன் கரப்பவை கருதாககடவுள" எனறும, தனககுயர்வும ஒப்பு மிலலாமையின "ஒருவனெனனு மொருவன காண்க" என்றும எலலாப்பொருளையும உடைமையால ஈசனென றும, உற்பததி நாசமென்பது எனறுமதனக்கினமையால அரன என்றும, அவ்வேதாகமஙகள துதிககினறன. அன்றியும, மோக்ஷ ததை விருமபுவோரெலலாம ஞானாகாசமே வடிவமாகவுடைய அச்சிவபெருமானையேதியானிப்பாரகள. தியானபலததினாலவாகள ஞானியராவா. என்னை முதலிற் புதலவனுகப் பயந்தோா அக்கட வுளேயாம. பாலிலே சுவையும, மணியிலே ஒளியும எல்லாப பொ ருளிலும் ஆகாயமும எப்படி கலநதுளளவோ அப்படி எலலாவ ண்டங்களிலும அச்சிவன் பரிபூரணமாகக் கலந்திருததலால "சிவ மயம" என்றரூடியு முண்டாயிருககினறது. "ஒருவர்" என்னுஞ் செந்தமிழ்ப் பெருவழககுச சொல அவ்விறைவரையே பொருளா கவுடைய தென்பது கற்றுணா புலவரால அறியத் தக்கது. அச் சொல மற்றெக்கடவுளாககுஞ் செலலாது. "தோலுந்துகிலுங் கு ழையுஞ்சுருடோடும,பால்வெள்ளைநீறும்பசுஞ்சாந்துமபைங்கிளியுஞ், சூலமுந்தொக்கவளையுமுடைத்தொன்மைக், கோலமேநோககிக்குளிர்ந்தூதாய்கோத்தும்பீ." என்றலின், சூரியனிற்சோதியும்,ச

ந்திரனிற்குளிர்ச்சியும, ஆகாயத்திற்கலப்பும, காற்றில்வன்மையும, தீயில் வெப்பமும், நீரிற்குளிர்ச்சியும், மண்ணிற திணமையும் வைத்துலகு தொழிற்பட்டு வரவமைத்தோரவரோ யெனபதற்குவேறு அளவைநாம் கூறவேண்டுவதில்லை; மேல் அசசிவமென்ற சொற பொருளொன்றே யுணாததும. கடவுளில்லை யென்று வாதிக்கும நாததிகரும் அச்சொறபொருளைத தேற விசாரிககு மிடததில அங கடங்குவர். திரிபு, கேடு, இல்லாததென்பது "இயற்கை" ஆம் ஆகவே, அவவியற்கை யெனபதே அச் "சிவம" என்று உணாக கடவீாகள். எங்ஙனமென்னில, இயற்கையு ளடஙகாத மதவாதிக ளுலகிலொருவரு மிலலை ஆதலால் அவ்வடஙகுதலே "வசி" பபொருளானுல "சிவம" எனபதே "இயறகை" எனறவாறும. இனிபபிரமம எனபதும சிவமெனபதும ஒரு பொருட்கிளவி நிலம, நீா, தீ, காறறு, வெளி, சூரியன, சந்திரன, உயிா எனற எட்டும அககடவுள திருமேனியெனறு வேதாகமஙகள கூறுமா னுல இவறறு ளடஙகாததெது? இவவெட்டி னுபகாரததை வேண டாததெது? ஆகவே யாா எனன வுபாசனை செயதபோதிலும சிவ னையுபாசிததபடியாம. ஆதலாற்றான "விரிவிலா வறிவினாகள வே ருெரு சமயஞ் செயது, எரிவினுற சொனனாரேனும எமபிராறகேற றதாகும" என்று தமிழ்வேதங கூறியது. இககடவுள எலலாவற றிறகும வித்தாயிருததலால, இவனை முறகூறிய பெயராலே யனறி வேறு எககடவுள பெயரால எப்பொருளினபெயராற கூறினுங கு றறமிலலை. எலலாப்பெயரும அவா பெயரேயாம. எலலா வடிவும அவர் வடிவேயாம். எலலாககுறியும அவா குறியேயாம. யாா,யா ரைததொழுதாலுமஎதைஉபசரித்தாலும,அசசிவனைததொழுதது முபசரிததது மாகவே முடிவில முடியும. இககருததாலனறோமுன அருச்சுனன பாரதப போா பதினமூனறு நாளிரவிற கணணனைப் பூசிதத தன்விறைவனைப்பூசிததவாறுயிறறு. அன்றியும் இவ்வுலகத் தில் பசுவின்கனறு கடடும கட்டுததறியும, நென முதலியவறறை யளக்குங்கருவியாகிய மரககாலும, புறறும, பலகையும், மணணு ம், கலலும இவைபோலவன பிறவும சிவகுறியேயாயிற்று. உண மையை ஆராயந்து பாாககு முணாசசியிலலாதவா எனறும ஒன றும உணராதவரே யாவர். இவவிறைவனே வைவதும அவாக்கு வாழததேயாம். முன வனவாசகாலததில், அந்த அருசசுனன பாசுபதப்படைவேண்டித் தவத்திற்குச்சென்றிருந்தபோது அவ னிடுககண்களையுமபடி அவ்விறைவன் வேடவடிவததோடு வநது பொயபபோர் புரிநதகாலததில, அப்பாண்டவா நடுவன் கடவு ளென்றறிபாது வில்லாலடித்த அடியும், மதுரையிலதிருவாதவூரடி கள் பொருட்டுவா விடுத்த வைகைப் பெருககை யடைக்குமபடி

பிட்டுவிற்கும் வந்தியார் ஆளாக வந்து அரிமர்த்தன பாண்டிய ராஜனும் பட்டபிரம்படியும், சாக்கியர் கல்லடியும் அருச்சனையாகவே முடிந்தவன்றோ? உண்மை யறிந்த பெரியோர்கள் தாய், தந்தை, உடன்பிறந்தார், மனைவி, மக்கள், சுற்றம், நட்பு, அயலார், பகைவர் என்ற கூட்டந் தம்மைச்சேர்ந்தகாலத்தில், அக்கூட்டத்துள்ளாரை யெம்மவர் என்ற பந்தநினைவாற் பாராமல் இவர்கள் எம்மைப்பரிபாகப்படுத்திப் பிழைப்பிக்கவந்த சிவவடிவாகிய குரு லிங்க சங்கமகோலத்துள்ளவர்களென்றே கொள்வார்கள். இக்கருத்தை அறுபத்து மூன்று நாயன்மார்கள் முதலிய பெரியோர் சரித்திரத்தா லறிவீர்களாக. அவ்வேதாகமமுதலிய கலைகளும், நானும், விஷ்ணுமுதலிய எல்லாத்தேவரும் அவ்விறைவனது அனந்தசத்திகளுள் ஒவ்வொன்றே யாவேம். இதற்கு வேதாகமமே சாக்ஷி. அன்றி அனுபவத்தாலேயு மெளிதிலுணரலாம். இக்கருத்து, அடங்குவதும், அடக்குவதும், அடங்கிக்கொள்வதும் அடக்கிக்கொள்வதும் ஏன்? எது நிமித்தம் என்று நடுநிலைமையோடு ஒவ்வொரு வஸ்துவையும் பற்றி விசாரித்தறிவார்க்கு வெளிப்படும். கேளும் முனிவர்களே! இவ்விடயத்தி லின்னம் சொல்லப்புகுந்தா லென்னாயுள் போதாது அதுநிற்க.

முனிவர்கட்கு பிரமன் இடைமருதுமான்மியங்கூறியது.

இனி இறைவனைப் பூசிப்பவர்க்கு எவ்விடத்திலும், எக்காலத்திலும் எவ்வுருவத்திலும், எப்பெயராலும், தாம் அறிந்த எவ்வகையாலும் பூசிக்கலாம். இன்னவிடத்தி லிக்காலத்தி லிவ்வடிவத்தி லிப்பெயரா லிவ்வாறு பூசிக்கவேண்டுமென்னும் நியமம் வேண்டுவதில்லை. ஏனெனில், உலகத்தின்கணுள்ள எல்லாவிடமும், எல்லாக்காலமும், எல்லா வடிவமும், எல்லாப் பெயரும், எல்லாத்தொழிலுமுடையா னவ்விறைவனே யன்றோ? எழுத்தின மணமறியாத வேடர் குடிப்பிறந்த கண்ணப்பதேவர், எச்சிலின் மயங்கச்செய்த திருமஞ்சனமும், சூடித் தந்ததிருப்பள்ளித்தாமமும், சுவைகண்டளித்த வூனமுதும் அவ்விறைவர் மகிழ்ந்து கொண்டருளியவன்றோ? ஆகவே உண்மை அன்பே பூசையாவதன்றி வேறில்லை "அன்பினுள்ளான் புறத்தானுடலாயுளான்-முன்பினுள்ளான் முனிவர்க்கும் பிரானவன்-அன்பினுள்ளாகி யமரும் அரும்பொருள்-அன்பினுள்ளார்க்கே யணைதுணையாமே." என்ற மந்திரவிதிசானது.

ஆயினும், சன்மார்க்கத்திற் செய்த முழுப்புண்ணியர்க்கன்றி அத்திறம் வாய்ப்பதரிது. ஆகவே, பத்தடிமை செய்யமுயல்வார்க்கு என்றே அகசிவமுணர்ந்த பெரியோர் வகுத்தமைத்த இடம்,

காலம், உருவம், மந்திரம் செய்வனை முதலியன சிலவுள்ளன. அவற்றுள் உருவத்தினை முன்னுணர்த்தியேனையவற்றைப் பின்னுணர்த்துகின்றோம் ஓ! அந்தணாளீரோ! கேண்மின்கள்.

இவ்வகண்டாகாரசிவத்தினிடத்தில் விளக்கொளியேபோற்பிரிவற்றிருந்த சிற்சத்தியுனின்றும் பராசத்தியார் வெளிப்பட்டனர். அப்பராசத்தி அனுக்கிரகசொரூபியாம். ஆதலால் பத்தியானினைப்பவர்கணினைத்தவண்ணம் காட்சிதரும். அப்பராசத்தியார், குணங்குறியற்றெவற்றிற்குங் காரணமுடையவர். இயற்கையறிவினர். நித்தமானவர். இச்சாஞானக்கிரியை வடிவாக வெளிப்படுவர். க்ஷரம்=அவ்வியக்தம்=வெளிப்படாதது. அக்ஷரம்=அமிர்தம்=நாசமற்றது, இவ்விரண்டு வடிவமும் அவர்தான் யாவற்றையுமளித்ததாயாதலால் உமையெனவும் கூறப்படுவர். சந்திரனுங் கிரணமும் பிரிவற்றிருந்தாற் போலும் அச்சிவசத்திகள் பிரிவற்றுள்ளன. இவற்றை வேறுபிரித்தெண்ணுவோன் பாவியாம். பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் பஞ்சகர்த்தாக்களையும் கட்டிலாகக்கொண்டுவீற்றிருப்பார் ஆன்மாக்களுளக்கமலத்தில் வீற்றிருப்பார், கோடிசூரியருதயமானாற்போலும் பேரொளியுடையார், ஆன்மாக்களுக்குப் பந்தமுத்தியிரண்டிற்றுமுண்டாகும் இச்சையையே பாசமாகவும், துன்பவினைகளையொழிப்பிக்குங் குரோதத்தையே அங்குசமாகவுமுடையவர். அருளினாலே நமது பயத்தையொழிக்குங் குறியுடைய கரத்தையும், வேண்டும் வரத்தைத் தருங் குறியுடைய கரத்தையும் உடையவர். தத்துவங்களையுணருமுணர்ச்சி, சீவனாகிய தன்னையுணருமுணர்ச்சி, சிவத்தையுணருமுணர்ச்சிக்குங் காரணமான சூரியன், சந்திரன், அக்கினி என்னுமுச்சுடரையுங் கண்களாகவுடையவர். விஷயங்களைப்பற்றாத சுத்த சத்துவவராகமாகிய செவ்வண்ணமுடையதோயாப்பூந்துகிலுடையவர். அடியார் இச்சித்தவண்ணம் மருளும் பெருந்தயாளு. காணக்கருதவினிய அழகின் பேருருவானவர். "பெருந்தனநாயகி" என்னும் திருநாமமுடையார். எப்பொருட்குந் தலைவி. எல்லா வண்டங்களினுட்புறத்து மப்புறத்தும் வீற்றிருப்பார். காயத்திரி தெய்வமாயச் சூரியனிதயத்தில் அமர்ந்திருப்பவர். எவ்வகையணிகளுக்கும் ஓரணியாயுள்ளவர். எண்ணிறந்த மந்திரங்களும் தமவடிவமாகக்கொண்டவர். அம்மந்திரங்களே தாமிருக்கும் பீடமாகவமைத்தவர். "சருவாங்கசுமங்கலை. சருவவித்தியாகாரணி. சருவஞானங்குரை சிவஞானப்பிரதாயினி. சந்திரமண்டலவாசினி. நித்தியகலியாணி. நித்தியசுந்தரி. அமிர்தகிரணமுகமண்டலி, தயாரசபூரிதவிலாசலோசனி. ஜராமரணநாசநமௌக்

திசை. ஸ்துதிப்பிரிய சுரோத்திரி மதுரவாக்குவினோதினி. நித்தியமாங்கலிய சங்கக்கிரீவை. ஆபீத குசவல்லி. பிரமாதி ஜகத்திருத்தாரவுத்தை. பஞ்சதசாக்ஷரீமந்திராச்சநாநுக்கிரகபதுமபாதா. சோடசாக்ஷரீ மந்திரமகாமூர்த்தி. சருவஜகந்மஹாமாதா. சருவைசுவரியகாரணி. மஹாராஜை. மஹாதேவி சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹார, திரோபவானுக்கிரகதாயினி. சர்வதந்திரேசுரி. சர்வயந்திரேசுவரி. சர்வமந்திரேசுவரி" என்று வேதங்களாற்றுதிக்கப்பட்டவர். "திரிபுரை சுந்தரி யந்தரி சிந்துரப் - பரிபுரை நாரணியாம்பலவண்ணத்தி - யிருளபுரையீசைமனோன்மணியென்ன-விருபலவாய நிற்குமாமாதுதானே" "தாளணிநூபுரஞ் செம்பட்டுத்தானுடை, வாரணி கொங்கைமலர்க்கனலவாளிவில, ஏரணியங்குசபாசமெழின முடி, காரணிமாமணிக்குண்டலக்காதிக்கே" "அவளையறியாவமரருமில்லை, யவளன்றிச்செய்யுமருந்தவமில்லை, அவளன்றியைவராலாவதொன்றில்லை, அவளன்றியூர்புகுமாறறியேனே" என்றது மந்திரவாக்கியமும்.

இனி. இப்பராசத்தி நிலைமையை "போகஞ்செய சத்திபுரி குழலாளொடும் - பாகஞ்செய்தாங்கே பராசத்தியாய் நிற்கும் - ஆகஞ்செய்தாங்கே யடியவர் நாடொறும் - பாகஞ்செய்ஞானம் படர்கின்றகொம்பே." என மந்திரங்கூறியதால அப்பெருந்தனாயகி (பிருஹத்குசாம்பா) உள்ளமாகிய தகராகாசத்தில சுயம்புவாகிய பரமசிவம், "மஹாலிங்கமூர்த்தி" என்ற திருநாமத்தோடும் யாமனைவரு முய்யும்படி சிவலிங்கமாக வெளிப்பட்டனர் ஆங்ஙனம் வெளிப்பட்ட க்ஷேத்திரந்தான் திருவிடைமருதூர். சிதம்பரத்துள உலகுவடிவான விராட்புருடனுடைய இதயத்து வெளிப்பட்ட சிதாகாயமூர்த்தியாம். அவ்வாறன்றி அவ்வுலகையெல்லாமீன்ற அம்மையாகிய வுமாதேவியார் இதயமாகிய தகராகாயம் திருவிடைமருதூரென்று லதனினுமிது சிறந்ததாமன்றோ. அன்றியும் சிவபெருமான சிதம்பர தலத்துள்ளே சித்ராகாயவடிவமாய் எழுந்தருளியிருப்பர். இந்தக்ஷேத்திரத்தில மஹாலிங்கவடிவமாக வெழுந்தருளியிருப்பர். அந்த காரணத்தினாலே மற்றைய திருப்பதிகளிலு கொண்டிருப்பதுபோல வேறுதிருநாமங்கொள்ளாது, இத்திருப்பதியில "மஹாலிங்கம்" என்ற திருநாமஞ்சிறப்பாகக்கொண்டருளியது. இத்திருநாமம மற்றெந்தத் திருப்பதியிலுமில்லை. இம்மஹாலிங்கப்பெருமான் என்று மொருபடித்தா யெழுந்தருளியிருந்து, பிரமனாதிய வெனனாலும மற்றைய தேவர் முனிவர்களாலும பூசிக்கப்படுவர். "இருண்மலமொழிக்குமூகக்கணிறையவன குணமொன்றில்லான, பொருணிறைக்குணங்கட கெல்லாம் பொருந்

துமாதர்மானை, அருள்சதாசிவனீறிலலான் ஆய்ந்திடுங் குறிவ் காரம, மருவிலவன்குணத்தைப்பாக்கிழவனாவகுத்தான்மனறே." "வலத்தினிலென்னை அந்த வாமத்தில் அரியைமத்தித், தலத்தினி லுருத்திரபோதனையளித்தியானெனப், பலத்துழுதந்தை யாமீர் யால்பாதொழிலோரேழுனறும, நலபபடப்பெறறோழும் மை நயந்தெமைப்பூசைசெய்மின்." எனறு, "பூசைசெய்திறத்தை யனறு புண்ணியன உரைத்தானெழவாக, கிசனமுனசொன்னவ ணணம இயமபுவனுஙகளுககு, நேசமாமுனிவீர்கேணமின நிமலி யை முன பூசித்து, ஆசையாலமகாலிஙகத்தைப பினபருசசிதத லவேணடும." "ஏனெனில மகாலிஙகம முன சத்தியாதாரமாசத்-தான வெளிவந்ததாலே சுயம்புவாம அநதலிஙகம" சிருட்டி, திதி, சஙகாரம, திரோபவம, அனுககிரகமெனனும பஞசகிருததியஙக ளையுஞ் செயவதறகுப் பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன, சதாசிவன் எனனும ஐநதுதலைவாகளுடைய தோறறத்திறகும எ ழுவாயாக விருநதது. அனறியும, ஈசானம, தறபுருடம, அகோர ம, வாமதேவம, சத்தியோசாதம எனனும பஞசப பிரமஙகளும அமமகாலிஙகத்திறறுன தோனறின. இவற்றுள, ஈசானம், ஆதி யும மகத்துமாயப பிரகிருதிககு அதிகாரியாய ஆனமாவைபபறறி நிறகினறது அது மஹாலிஙகமெனனபபட்டு இமமூவுலகத்துள் ள இலிஙகமூர்த்திகளெலலாந தோறறுமிடமாம தறபுருடம, அ வ்வியத்தத்திற கதிகாரியாய முககுணமபறறி நிறகும. இதிலதருமம முதலிய எடடு அஙகஙகளோடும கூடி புத்தித்ததுவம பிறக்கும. அகோரம, அவவிலிஙகமூர்த்தியிடமாக வூறறுமுறறிருககும வாம தேவம, அகஙகாரதத்துவத்திற் கதிகாரியாயிருககும. சத்தியோ சாதம, ஒளிபபிழமபாய மனமெனனுந தத்துவத்திற கதிகாரியா யிருக்கும். இநத பஞசபிரமலிஙக மூர்த்திகளும இமமஹாலிஙகத திறகு ஒருகுரோசத்துளளே அமைந்துளளன. இப்பஞசமூர்த் திகளையும பூசித்தவாகளுககு எலலாநனமையுமுணடாம நன மைக்கே வித்து இவையாதலால, இவவுலகெலலாம தேவதேவரா கிய சிவபெருமானார பஞசமூர்த்தவடிவமாம சூததிரிகனபாவை யைக கயிறறாலாடடுவதுபோலும இறைவனும அறமபாவமென னுங கயிற்றுற கட்டி யாடடுகினறனா. எவவிடத்துளள சிவகுறி யும இமமஹாலிஙகத்துட்டோன்றியவே. இம்மூர்த்தியை வழிபடு வோரககுத துக்கமெனபதொனறும எபபோது முணடாகாது. இததிருப்பதியிலுளள அரும்பும சிறுகல்லும சிவமயமே யென்று பெரியோர் கூறுவர். அண்டத்துளாகிய விபபூமி தனனு ளிம்மகா லிங்கத்தைககொண டிருக்கினறது இவ்விடைமருதீச ரெப்பொரு ளுந்தாமேயாவர். இவ்வுண்மையையுளளவாறுணர்ந்தவன் பிறப்பு

இறப்பு என்னும் துன்பத்துளொன்றுமடைப்படான். பொன்மயமாகிய விப்பிரமாண்டமும், அதனுட்பாலிருக்கும் ஆண்பெண்ணென பிராணிகளும் தோற்றமிடம் மிம்மகாலிங்கமேயாம். பெருந்தன வலலிபாகனாகி, வெள்விடையேறி விரிபொற்சடையோன், அங்கணமலரோன் அருண்மேனியானே, ஆளுடைநாயகி யமிலவுள வெளியில், நீள ஒளிக்கொழுந்தாய நின்றனன் ஆதலின், வேருண நீர மரத்தின்கிளைகட்கெல்லா மாயவாறுபோல இந்த மஹாலிங்கத்தை யருச்சித்தால் நடப்பனவும் நிற்பனவுமாகிய எல்லாவுயிர்த்தொகைகளும் திருத்தியுற்றுக்கிளாச்சியையடையும். இச்சிவக்குறியின் பெருமையை மாயவன் அறியான், வானவர் அறியார், ஆயிரமணிமுடிச்சேடனும் அறியான், சனகாதியோகியர் தாமுமறியார் மயங்கும் பிறப்பின் மானுடரறிவரோ, அருவமாய உருவமாய அருவுருவமுமாய, முதல் நடுமுடிவிலா முழுமுதலாகி, அறிவேமயமாய ஆருயிர்க்குயிராய தானுவாய அமர்ந்த தம்பரன்மகிமையை, அவன் ஒரு படைப்பில் அடங்கியதேவர், யாவர்தாமறிவார் யாது காணகுவர்கள். சதுர்யுகமாயிரந்தானெனக்கொருபகல், என்பரிமாயுள் இலங்கு அரிக்கு ஒருபகல், அவ்வரி ஆயுள் அரனுக்கு ஒருபகல், அவ்வரன் ஆயுள் ஈசனுக்காம்பகல், அவ்வீசன் ஆயுள் அருள சதாசிவன் பகல், ஆளுடையிறைவனுக்கு அளவொன்றில்லை. ஆனால் அளவுடை அமரர்கள் அறிவரோ? அவ்விறைவன் எழுந்தருளிய இந்தத்தலத்தில் வசிக்கும் பசுபக்ஷி எறும்பீறுன எவ்வகை யுயிர்களும் பிறப்பிறப்பில்லாத சிவலோகவாசிகளான வுருத்திரகணத்தினரே யாவர்கள் இந்தத்திருப்பதியில் வந்திறந்தவர்கள இந்திரன விஷ்ணு முதலிய தேவர்களாலும் அடைதற்கு அருமையாகிய சிவலோகத்தை எளிதில் அடைவார்கள் மண்ணுக்குமேல சுவர்க்கம், அதற்குமேல சத்தியவுலகம, அதற்குமேல் விஷ்ணுபதம, அதற்குமேலசிவலோகமாகியவுருத்திரவுலகம. இங்கு வசிப்பவர்களும அவ்விடம்பெற்றவழிதான அறிவினறிவாழ்வார்கள். அவ்வாறுஉமாதேவியாருக்குசிவபெருமான அனுக்கிரகித்திருக்கிறார். ஆதலால் முனிவர்களே! பூருவபுண்ணிய பரிபாகமடைந்த சுத்தான்மாக்களாகிய சத்திய பத்தியுடையவர்கள இவ்விடத்தில் சிவபெருமான், மஹாதேவியார், கணபதி, முருகப்பிள்ளையார், சண்டேசப்பெருமான என்னும் பஞ்சமூர்த்திகளையும இயன்றளவில உள்ளன்பு பொருந்த, பிறர்மதிக்கவென்றெண்ணுமல தாம உய்ய வேண்டுமென்ற நல்லெண்ணத்தோடு பூசித்துக்கடைத்தேறுவார்கள் என்று சொல்லிப பிரமதேவர்மத்தியார்ச்சுனப்பெருமானை வணங்கி அருளவிடை பெற்றுத் தமதுலகமே போயினர்.

கேளுங்கள் முனிவர்களே? சிவபெருமான், மெய்யன்பர் பாவனைக்கு வசப்பட்டவர் "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடு வாழ்வார்" என்ற வேதவிதி சத்தியம். அன்பு வழி அறியாத மன்மதன் இட்ட தாமரைப்பூ, முல்லைப்பூ, மாம்பூ, அசோகம்பூ, நீலப்பூ என்னும் ஐந்து வகைப்பூவும் பாணமாகி முடிவில் அந்த மன்மதனுயிருக்கு உலையாய் நின்றன. இன்றும் அவன் அனங்கனாகி யொழிந்தான். அன்பின் வழிநின்ற சாக்கியர் இட்ட கல்லே மலராகி அவரை என்றும் அழிவற்ற வின்பத்தை யுடைய சிவலோகத்தேறப்பண்ணிற்று. ஆதலால் அடியார் மனக்கோயிலில் வீற்றிருக்கும் சிவபெருமானைத் திருவெண்காடர் இரவும் பகலும் மறவாத நேசம் வைத்துப் பூசித்து வாணிபத்தில் மிகச்சிறந்து கற்புக்கரசியாகிய தமது மனைவியாரோடு பெருஞ்செல்வராய் வாழ்ந்துவருநாளில், அவர்க்கு வயது முப்பத்தைந்தாக அதுவரையும் மக்கட்பேறில்லாமையால், மனத்துட் சிறிது வருத்தங்கொண்டு, "படைப்புப்பலபடைத்துப்பலரோடுண்ணு, முடைப்பெருஞ்செல்வராயினு மிடைப்படக், குறுகுறுநடந்து சிறுகைநீட்டி, யிட்டுந் தொட்டுங் கௌவியுந்துழந்து, நெய்யுடையடிசின் மெய்ப்பட விதிர்த்து, மயக்குறுமக்களை யில்லோர், பயக்குறவிலாதாம் வாழுநாளே" என்று சிந்தித்து, பின் ஒருவாறு தேறித் தமது குறையைத் தம்மை யாளாகவுடைய திருவிடைமருதூருடையார்க்கு விண்ணப்பித்துப் பலவகைத் தானமுதலிய செய்கடனை நிறைவேற்றி வந்தனர்.

சிவசருமர் சரித்திரம்.

யுககாலத்தில், பிரமாமுதல் சிறுபுல்லீறாகிய வுயிர்கள் தோறும் நிறைந்து நின்று அவ்வவர்க்கும் புவனபோகங்களை யூட்டுவிக்கும் அம்மையப்பராகத் திருவிடைமருதூரில் மாந்த அருளாளர் திருவெண்காடர் விண்ணப்பத்தைத் திருவுள்மேற்று அவர்க்குத் தாம் முன் அனுக்கிரகித்திருந்தபடி அருள்செய்யவென்று கருணை வைத்தார். அப்போது, அந்த மஹாக்ஷேத்திரத்தில் தம்மை மறவாதுள்ளன்போடும் வழிபட்டு வரும் "முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்" ஆகிய ஆதிசைவரும், நால்வேதங் கரைகண்டவரும், ஆகமப்பெருங்கடல் கடந்த தோணி போல்வாரும், சகல சாத்திரங்கட்கும் கருவூலம்போன்றவரும், நல்லொழுக்கமே வடிவானவரும், சிவபத்தி அடியார் பத்தியன்றி மற்றொன்று மறியாதவருமாகிய சிவசருமனென்னும் அந்தணர் குலமணியானவர், கற்புக்கரசியும், அழகுக்கு அணிகலமுமான சுசீலையென்னும் மனைவியாரோடும் இல்லறம் வழுவாது நடத்திக் காலங்கடோறும் பெருந்தன நாயகியாரையும், அவளையிடம் பிரியா மகாலிங்கநாதரையும் விதிப்படி.

அருச்சித்துவரும் நியமம்பூண்டவர் தமது பெருஞ்செல்வத்தையெல்லாம் அச்செல்வம்பெற்றபயனென்று சிவார்ச்சனைக்கும் அடியார் மகேச்சுர பூசைக்கு மாக்கிவந்தனர். இங்ஙன மொழுகுநாளில், அவர் அன்பினிலைமையை யாவர்க்கும் வெளிப்படுத்துவராய எல்லாமுடைய பெருமான் அவர் செல்வத்தினைப் பூரணைகழிந்த சந்திரன் கலைபோலச்செய்யத் திருவுளம் வைத்தலும், அது புலாலுண்பார்தவம்போலாயிற்று. அங்ஙனமாயும் சிவசருமர் தம்முள்ளன்பும் ஊக்கமும் குறைவின்றி மேன்மேலும் பெருகிவரவோர்நாள் உதயகாலத்து மனைவியாரை நோக்கி, நல்லவளே! இன்று சிவார்ச்சனைக்குரிய வுபகரணங்கள் சேகரித்திடுதி என்ன, அவ்வம்மையார் வணங்கி, என்னிறைவரே! குழந்தைகட்காக எடுத்துவைத்த சிலபண்டங்களிருக்கின்றன. அவற்றைக்கொண்டு இன்றைக்குச் சிவபூசைமுடிக்கலாமென்றார். அதுகேட்ட சிவசருமரும் மனக்களிப்போடு அவ்வுபகரணங்கொண்டு கோயிலையடைந்து வழக்கப்படி திருமஞ்சன நிவேதன முதலியவற்றை முடித்து, அடியார் பூசைசெய்யும்படி மனைக்குத் திரும்புகாலையில், மத்தியார்ச்சுனப் பெருமான் பசியால் பீடிக்கப்பட்ட ஒருவிருத்தவேதியராகிவந்து சிவசருமரை நோக்கிப் பசிக்கன்னமிடுதியோ என்ன, அவர் அவ்வேதியரை மனைக்கழைக்க, ஐயா மனைபோமளவும் பசிபொறுக்கலாற்றேனென்ன, சிவசருமர் அவ்விடத்திற்றானே அவ்விருத்த வேதியரை உண்டிமுதலியவற்றால் உபசரித்தார். அவ்வளவில் அந்தவிருத்தர் நூறுவர்க்காம்படி சேகரித்திருந்த வெல்லாவற்றையுந் தாமொருவரே யுண்டிளைப்பாறி மறைந்தார். சிவசருமர் உடனே கடவுளென்றறிந்து பேரானந்தமடைந்து, மருதவாணரைப் பலகாற்பணிந்து துதித்தாடிப் பாடிக்கொண்டிருக்கையில், பரிசனர் வந்து சிவனடியார் பலர் மனையிற்பசியோடு வருந்திக்காத்திருக்கின்றனரெனத் திடுக்கிட்டு மனைக்குப் போதலும் மனைவியார் கண்டு, தலைவரே நிவேதனமான சிவப்பிரசாதமெங்கே, அடியார் பலர் பசியோடு வருந்திக்காத்திருக்கின்றனரே யெனக்கேட்டுச் சிவசருமர், பெண்ணே நிவேதன வமுது மருதவாணர்க்கே யோக்கியமானதாயிற்று என, அக்குறிப்பை யுணர்ந்த அக்குலமகள் ஏதோ இதுவோர் சிவலீலையாக விருக்கின்றது, எல்லாம் பொறுத்தறிவோம் இப்போது சிவனடியார்கள் பசியாற்றும் வகை தேடுவதே முறையென்றெண்ணி, உடனே கணவரைப்பார்த்து, என்னையுடையவரே! நாமும் குழந்தைகளும் பட்டினியிருக்கினு மிருக்கலாம் வந்த சிவனடியவர்கள் பசித்திருப்பது முறையல்ல; இவ்விடத்து மறுபடியும் சமைப்பதற்கும் வேறு உபகரணங்களில்லை. காலமோ பகலுக்கு அதிகரித்து விட்டது. ஆதலால் இந்த மங்கலியத்தையாவது மாறி வந்தவிலைப் பொருள் கொண்டு

அமுதுபடி கறியமுதுமுதலியவற்றைச் சேகரித்துவந்தால், அடிய
வர்பூசை செய்யலாமென்று தங்கழுத்திலிருந்ததைக் கழற்றிக்கொ
டுக்க, சிவசருமா வாங்கிச்சென்று, அவ்வாறேவேண்டுவனவற்றை
த்தாரக்கொண்டவ்வம்மை மறுபடியாகஞ் செய்து, அடியவரை யமு
துட்டி யுபசரித்துச் செலுத்தித் தாமுமக்களுமுண்டவ்விரவு சிவ
தரிசனஞ்செய்து வழக்கப்படி சயனித்திருந்தார்கள் உதயகாலத்
தில் துயிலுணர்ந்த சுசீலையாரும்சிவசருமரும், எழுந்துசிவத்தியான
ஞ்செய்துமுடித்து இன்றைக்கென்னசெய்வோமென்று சிந்தித்திருக்
கையில், கற்பின் கிழத்தியாகிய அச்சுசீலையம்மையார்கொழுந
னிடம்வந்து, ஐயரே!! நமது ஆண்டவர் "வேண்டுவார் வேண்டிய
தாயுமீவாராம்" அன்றோ? அவரிடத்தது ஏன்? தேவரீருக்
குள்ள குறைகளைக் கூறலாகாதென்னச் சிவசருமரும், நல்லது ஆல
யத்துப் போவதற்கு வெறுங்கையாலெப்படி கூடுமென, அவ்வம
மையார் கேட்டு, எம்பெருமான் இறைய பூசைக்கு வேண்டுவ
ன குறைவில்லை கொண்டுசெல்லலாம் என்றுசொல்ல, உடனே
யெழுந்து காலைக்கடனைக்கழித்து, நித்தியஞ் செய்யுமான்மார்த்த
பூசை, நீக்கடன் நிறைவேற்றி ஆலயம்போய் நியமப்படி திருத்தவா
ணரையும், பெருந்தனநாயகியையும், திருமஞ்சனம், அருச்சனை,
நிவேதனமுதலியவற்றால் குறைவறப் பூசித்துத் துதித்துவணங்கி
வழிபட்டு, நிவேதனமான, அன்னம் வியஞ்சனம் அபூபவருக்க
முதலியவைகளை அடியார்களுக்கு ஆம்படி தமது திருமனையிற்
சேர்ப்பிக்கப் பரிசாரகர்க்குத் திட்டஞ்செய்தனுப்பிவிட்டுத்தாம்
ஸ்ரீபஞ்சாக்கரத்தியானத்தி லிருந்தார்.

இருக்கையில், அப்பரிசாரகர்கள் அவற்றைத்திருமடப்பள்ளி
யில் வைத்து விட்டுத் தங்களுச்சிக்கடன் முடிக்கும்படி அவ்வால
யத் திருக்குளக்கருணியாமிர்த தீர்த்தத்திற்குப்போயினர் அப்
போது, திருத்தவாணர் முன்போல ஓர் விருத்தவேதியர் வடிவாய்ப்
பசித்துவரக்கண்ட சிவசருமரும் பெருங்களிப்புடனெதிர்சென்று
பசரித்தழைத்து வந்து திருவடிவிளக்கிப் பாதோதகமுட்கொண்
டு பூசித்து, ஒருபீடத்திருக்கப்பண்ணிப் பரிகலந் திருத்திவைத்து
நிவேதனப் பிரசாத வமுதுபடைக்க, அன்றும் அவ்வமுதுமுதலி
யவற்றுள் சிறிதும் மீதியாகாதபடி முற்றும் புசித்தருளிக் கைகால்
சுத்திசெய்து, ஓரிடத்திருந்து இளைப்பாறுபவராய் வீற்றிருந்த
ருளினார். அங்ஙன மிருக்க, இறைவராகிய அந்தணர் பெருந்த
கை, மனைவியார் வேண்டுகோளால் செல்வத்தை விரும்பிக் கேட்
கும்படி எதிர்நிற்கும் சிவசருமர் கருத்தை யுணர்ந்து, வேள்வியி
ல் அவியமுதுண்ணுமவர் அன்பமுதுண்டமையால் அச்சிவசரும
ருக்குப் பெருஞ்செல்வமளிக்கத் திருவுளத்தடைந்து, ஐய சிவசரு

மரே! அந்தணர்களாகிய சிவன் அடியார் அனேகர் உமது மாளி
கைக்கண்ணே பசித்திருக்கின்றனர். அவர்கள் மனம் புலர்ந்து
செல்வார்களானால் உமது பிதிரர்யாவரும் நரகமடைவர்; ஆதலால்
விரைவாக மனைக்குச் சென்று அவர்களை உபசரித்தனுப்புமென்று
சொல்லி அங்ஙனே மறைந்தருளினார்.

மறையவே சிவசருமர், தாயைப்பிரிந்த இளங்கன்றுபோற்று
டித்துப் பூமியில் விழுந்து மூர்ச்சித்துப் பின் தெளிந்தெழுந்து,
அரசே! ஐயா! கருணாலயா! என்னையுமோர்பொருளாகக்கொண்டெ
ழுந்தருளிவந்து, நிவேதித்திட்ட சிறுபொருளைப் பேரன்பமுதாக
அமுது செய்தருளிய தேவரீர் இவ்வண்ணம் என்னை வருந்தும்ப
டிவிட்டுப் பிரிந்துபோவதும் அறமோ! அருளோ? என்செய்கேன்
என்செய்கேனென்று ஆராமையால் அரற்றிப் பலவாறு துதித்து,
ஆண்டவரைப் பூசிக்கப் பெற்ற பேற்றினும் களித்தாடிப் பரவச
ராயப் பின்தெளிந்து, மனைக்குச் செல்லும்படியிறைவரிட்ட கட்ட
ளையை மறுக்கவஞ்சி, பெருமான் சந்நிதியிற் பலமுறை பணிந்து
எழுந்து விடைபெற்றுத் துணிந்து மனைக்குச் செல்லலுற்றனர்.
அத்தருணத்தில் முன் நிவேதனப் பிரசாதத்தைத் திருமடப்பள்
ளியில் வைத்து, மாத்தியானிகஞ் செய்யச்சென்ற பரிசாரகர்கள்
வந்து பார்க்கத் தாம்வைத்த பதார்த்தங்களொன்றுமின்றி வெறும்
பாத்திரங்களேயிருக்கக்கண்டு பயந்து சிவனடியவர்கள் பசியோடு
காத்திருப்பார்களே என்செய்வோம் என்றஞ்சி, வெளிவிட்டுச்
சொல்லமாட்டாதவர்களாய், யாரெடுத்தனர், யார்புசித்தனர், ஏ
தாயிற்று என்று எண்ணியெண்ணி ஒன்றுந் தோன்றாமல் கலக்
கமுற்று வேறுவகை காணாதவர்களாய்ச் சிவசருமருக்கு விண்ணப்
பித்தனர். அது கேட்ட சிவசருமர் நடந்த உண்மையைச் சிறிதும்
வெளிப்படுத்த மனமில்லாதவராய் ஒன்றுமறியாதவர்போல, சிவ
லீலைக்கு நாம் என்செய்வோமென்று சொல்லி அவர்களையழைத்
துக்கொண்டு வருகையில், மனைக்கண்ணே சிவனடியவர்களும், அ
றங்கிழத்தியாரும், மக்களும் பசியோடுகாத்திருப்பார்களே என்
செய்வது, பெருமான் திருவுளம்போலாக என்று சிந்தித்து மெல்
லமெல்லச் செல்லலுற்றனர். இவர் செய்தியிதுவாக.

முன்னே இச்சிவசருமனை அடியவரோடு அமுதுகொள்ளும்
படி மனைக்குப்போகவென்று கட்டளையிட்டு மறைந்த மருதப்பெரு
மானார், தாம் சிவசருமராகவும், *பிரமதகணத்தலைவர்கள் பரிசார
கர்களாகவும் திருவுருவந் தரித்து நிவேதனப் பிரசாதங்களை வழ
ங்கப்படி பாத்திரங்களிலெடுப்பித்துக்கொண்டு, இவர் வருதற்கு
முன்னே இவர் மனைக்கேகி, சுசீலையம்மையார்கையிலளித்துச் சிவ
னடியவர்களை அமுது செய்யப் பூரிகலந்திருத்தியிடம் பண்ணுவித்

தோவருகினறேனென்று போககுககாட்டி மறைநதுவிட்டனா. சுசீலையாரும உணமையாகத த-து கணவா தாம எழுநதருளினவ ரொனறெணணி, வழககப்படி இடமபெறத்திருததிவைதது ததமது கணவஞர் வரவை யெதிரபார்ததுத தலைககடைககு முன்ளுககு ம்ாக ஆடை நெயலோன குழலபோலுலாவிகினறனா.

அததருணததில, அடியவரை அமுது செயவிக்கும் வகை என னவென்ற சிநதையோடு பரிசாரகர் புடைசூழநதுவர மெலல மனையருகே செலலும சிவசருமரை அவா தருமபததினியாா நோ ககி, இதோ வருகினறேன மகேசுர பூசைககுப பரிகலநதிருததெ னறு சிவநிவேதனப பிரசாதநகொடுததுச் சென்றெவவளவு நேர மாயிற்று, அடியவரனைவரும பசித்திருககினறாரோயென்றதமமில லுறாகிழததியாா சொறகேட்டுப் பெருவியப்படைநதுளளேசென று பாாககையில கோயிலில விருதத வேதியருககுத தாம அமுது செயவித்த பதாாததஙகளினும எணமடஙகதிகமான சுவை, மணம அளவு முதலியவற்றுற சிறநத அறுசுவை யுண்டி வகைகளிருககக. கண்டு, இது நமமையடிமையாகவுடை இடைமருதவாணா நமக கருளிசசெய்ததாருமென அவவரலாறறை மனைவியாககுத தெரி யவுரைததருளி, அப்பிராசாததததினை மருதவாணராகவே கருதிப் பூசித்து மும்முறை வலம வநது பணிநது பெருநகளிபபோடு சிவனடியவாகளை புணபிததுபசரிததனுப்பிச சேடபபிரசாதத்தி னைததாம மனைவிமககள சுறறம பரிஜனா முதலியவாகளுடன உ ண்டு பெருமகிழவுகொணடு,இறைவா தமககருளிய வருளைப பாங டினையெணணியெணணியேமாப்புறறிருநதாா. வடமீனிலுஞ் சி றநதகறபுடைய அவா மனைவி சுசீலையாா பெண்பாலாகலின இஙங னம அருளசெயத பெருமான சிறிது பொருள் அனுககிரகிககலா காதோவெனறெணணி மெளனததிருநதனா. இஙஙனமிருககக

வழக்கப்படி அனறிரவு கழிநது விடியற்காலமாகுந தருணத தில சிவசருமாகனவிலும அவா மனைவி சுசீலையாா கனவிலும வி ருதத வேதியராயெழுநதருளி, நம்பான மிகுநத பேரன்புடையீா கோயிலருகான காருணியாமிாத தீாததககரையின கீழணடையுள் ள வில்வமாததடியில நாம ஒரு குழநதை வடிவமாகயிருப்போம. நமமை நீங்கள எடுத்துககொண்டுபோயுக காவிரிப்பூம்பட்டினத் தில மகவிலலாமல வருநதி அருநதவமபல செயயும திருவெண்கா டா என்னும வசியகுலமணியொருவருணடு. அவா நமமிடத்தில் மெயயன்புடையாா அவருககு நமமைககொடுத்து நம்மளவு பொ ன்பெற்றுநும வறுமை தீாநது இருமைஇனபமும அடைமினகளெ ன்று திருவாய் மலர்நதருளினா. அதுகேட்டுச் சிவசருமர் தீயிலி

ட்ட புழுபபோற்றுடிதுடித்து, பிரம விஷ்ணுக்களும வேதமும பெறுதற்கரிய பெரும் பொருளாகிய எம்பெருமானைக் கொடுத்தோ பொன்னைப் பெற்று யாம உயிர்தரித்து வாழவது; இதனிலும் தீப்பாய்ந்தேனும், கங்கை பாயந்தேனும, வரைபாய்நதேனும,விடமுணடேனும் உயிர்துறததல இனபமாமபோலும. எங்ஙனம் துணிநது எமபெருமானைக கொடுப்போம சீசீ!! இசசமுசாரம் சவிகெட்டது. என்னைச்சுட்டாலும தீராது. கொடிது கொடிது. வறுமை தீவினையாலானது எனபதுணமையே இவ்வுலகத்திலென்றும்மாறாப் பழிபாவத்துககு ஏதுவான இககாரியஞ் செயயத் தோலோதோல நான உடனபடேன். என்னிறைவனே! இவ்வறுமை பால் யான இன்றே அழியினும அழிக என்றார். அது கேட்டுப பெருமான, ஓ உத்தம வேதிய உமது நிலைமையும மனைவியின திறமும யாமுணாவோம உங்களை இவவிழுக்குக காரியந தொடங்கச செயய வேணடுமெனபதலல நமது கருததது; முனனொருகாலததில நமது தோழனான குபேரன் மானுடபபிறப்பையடையுமபடி நேரிட்டது. அபபோது நாமவனுககுப் புதலவனாக வருவோமெனறு அனுககிரகிததிருநதோம ஆதலால அவ்வாறு நிறைவேறுங்காலமிதுவாக நோநதபடியால இங்ஙனம உமமை ஏவினோம அனறி வேறலல அககுபேரனதான காவிரிபபூமபட்டினததுத திருவெண்காடனெனும் வேளாண வசியன அவனுககு மெயஞ்ஞான நிலைமை அனுககிரகிதது நாம எபபோதுமபோல மறைநதுவிடுவோம அககாலததில உமககுக குடுமபததோடு முததியளிபபோம. நீர ஒனறற்கும அஞ்சாது யாம சொலலியவணணம செயயுமெனறருளிசசெயது மறைநதுவிடடார

உடனே சிவசருமா விழிததெழுநது அறபுதமும ஆனநதமுமுடையவராயப் படுககைவிடடு நீங்கித் திருநீறணிந்து சிவத்தியானஞ் செயது பெருஞ்சிநதையோடு திருமபினார். அதற்குமுன்னே தானே கணவனார கணட கனவையே கணடாணடெழுநது அவர் விழிபபையெதிரபாரததிருநத சுசீலை மனமயாா வணங்கித தஙகனவைக கொழுநரோடுகூற, அவர் தாங்கணடதையுங் கூறி இருவரும அசசமுந துனபமுமுடையவாகளாய முனபின தோனறாது கவலைப்படடுக்கொணடிருககையில சுசீலையமமையார "வறியாரிருமையறியார" என்ற மந்திரவாக்கியம உண்மையே சீசீ!! வறுமைகெட்டது. இவ்வறுமைக் கொடுமையாலன்றோ நமமையுடைய பெருமானிடததில் விண்ணப்பஞ் செயயவும், அதனைத் தீர்ககும் வழியாக ஆணடவன் இவ்வண்ணம கட்டளையிடவும நேரிட்டது. "அட்டுண்பாரிட்டுண்பார்" என்ற தமிழ்வேதமொழி பொயயலலவே நாம அவ்வறுமைக்கஞ்சுவானேன், இவ்வணணம குலதெய்

வத்தை விற்று அடாப்பழி சுமப்பானேன் *"சதையை விற்று சங்கடந்தீர்வது" என்றவலத்து அழுந்திய அவரது நிலைமை நோக்கிக் கொழுநராகிய சிவசருமர், பெண்ணே நீகூறிய துண்மையே, நமது வினைப்பயன் குறித்தே மருதவாணரிவ்வண்ணம் அருள்செய்தீர். ஆனால் நாம் சிவாஞ்ஞையைத் தடுக்கலாமா? பிரமவிஷ்ணுக்களே தடுக்கமாட்டார்களென்றால் நாம் செய்யத்தக்க தென்னிருக்கின்றது. இறைவனாணையை மறுப்பதற்கு வேதமுமஞ்சி நிற்கின்றது. விதியில்லை ஆகையால் நீ இங்குத்தானே நலமெண்ணத் தோடுமிரு, நான்போய்வருகிறேனென்றார். அதுகேட்டவ்வம்மை மனம் பதைபதைத்து, எம்பெருமானே! தேவரீர் கட்டளைப்படியிருக்கக்கடவேனேயொழிய மறுத்துரைக்கக்கடவனல்லன். எவ்வாறாயினுமாக அடியேனைத் தேவரீர் உடன் வரும்படி கட்டளையிட்டருளவேண்டும். மூவராலும் அறியொண்ணாத மூர்த்தி எம்போல் வாராபிறப்பிறப்பை யொழிக்கும் பெருங்கருணையால் தாம் ஓர் மானுடக் குழவியாவரோல வளர்க்கும் தவப்பேறு எனக்கில்லையாயினும் தேவரீர் அடிமையானவெனக்குப் பார்க்குந்தவப்பேறுமில்லையாவதுமரபோ? என்று இருகண்ணீருஞ்சோரவிண்ணப்பித்துநின்றார். அதுகண்டசைவவேதியமணி, மனமிரங்கிப்பெண்ணே உன கருத்திதுவாயின் விரைந்து வருகவென்ன, தம்பதிகளிருவரும்மனைகடந்து சென்று ஆலயம்புகுந்து வழக்கப்படி பெருந்தனநாயகியாரையும் மருதவாணரையும் பணிந்து வலம் வந்து தொழுது, இறைவர் கட்டளையையெண்ணி, காருணியாமிர்த தீர்த்தத்தினகீழ்பாலவந்தனர். அங்கே சத்தியந்தழைத்தத்தயைமலர்ந்துசைவமணம்வீசி அன்புதுளித்து உபகாரம்பலித்து இன்பப்பழுத்த சிவனடியார் திருக்கூட்டம்போலத்தழைத்துப் பூத்து மணந்து தேனறுளித்துக் காய்த்துப் பழுத்திருக்கும் சூதம், பனசம், நாளிகேரம், பூகம், நாகதம், சமீரம், குருந்தம், குரவங்கம், குருக்கத்தி, பாடலம், புன்னாகம், வகுளம், மந்தாரம், சம்பகம், பாரிசாதமுதலிய விருக்ஷங்கள் நெருங்கி, முல்லை, மாதவி, முதலிய கொடிகளசைய இளந்தென்றல்வீசப் புளினத்தடங்களோடு மன்னமுலாவ மயில், குயில், கிளி, சகோரம், சக்கிரவாகம், வண்டான முதலிய பறவைகள் பாடியுமாடியுங்களித்துத்திரிய, விந்திரனது நந்தவனமும் நாணும்படி வீற்றிருக்குங்கோயிலுய்யான வனத்துள் இளங்குழந்தை அழுகுரல் கேட்க, அச்சத்தோடும் அன்போடும் விரைந்துகுரல்வழிச்சென்று, குருவருள் மந்திரவழிச் சிவத்தைக் காணும் பரிபாகிகளைப்போல, வேதமும் பிரமனும் விஷ்ணுவும்

*தசை, சசையெனமருவிற்று.

துதிக்க, இந்திரன்முதலியதேவர் பூமழை பொழிந்து கவரிகுடை முதலிய பணிமாற, கைலைக் கல்லாலமரமொத்ததோர் வில்வமரத் தடியில், மந்திர பீடமன்ன மணமலரணைமேல் பெரியரிற் பெரியோன் சிறுமகவாய் வீற்றிருக்கக்கண்டனர்.

சிவபெருமான் மகவாகஎழுந்தருளியது.

கண்டவளவில் அப்பொழுதவாகிய பார்வையாற்றானே பெருந்தவங்கொழுந்தாராகிய தம்பதிகளிருவரும் தம்மைக்கண்டிலர். பேரழகன் வடிவாகிய காந்தமிவர் நெஞ்சமென்னு மிரும்பைக் கவர்ந்து தன் வசஞ் செய்தது. என்றால் மற்றைய அவயவங்களின் அழகினையெவ்வாறு தனித்தனி கண்டுரைக்கவல்லார்கள். அவ்வவயவங்களுக்கு உவமை கூறத்தக்க பொருள் யாவை? ஒப்பநோக்கக் காலமேது? இடமேது? ஐயோ! முன்னமே மறைமொழியானது, "நித்தமணாளர் நிரம்பவழகியர் சித்தத்திருப்பரா லன்னே யென்னும்" என்று வாளாங்கு விட்டதே. இனி அத்திருவங்கஅழகினைத்தனித்தனி ஆராய்ந்து வருணிக்கத்துணியும் வன்கண்ணர் யாரோ? நாம் அறியோம். சந்நிதிப்படுமுன்னே குளிரையொழிக்குஞ் செந்நெருப்பைப்போலும், சமுகத்தைக் குறுக நினைக்குமுன்னமே மனத்திட்பத்தை யொழிக்கும் திறங்கண்டன்றோ "நீராயுருக்கியென்னாருயிராய் நின்றானே" என்றது அருட்டிருவாசகம். ஆகவே இத்தம்பதிகள் கருணைவடிவைக் காணும்வரையில் அவர்கள் நெஞ்சக்கரணம் தலைகாட்டி நின்றதே ஆச்சரியம்! அவர்கள் முன்செய்த நல்வினைப் பயத்தால் அதுவரையிலவர்கள் மனமிரும்புருவாய்த் தரித்தவாறு போலும். அங்ஙனமசிறுபோது தம்மை மறந்திருந்து சிவசருமர் தெளிந்து, அத்தெய்வக்குழவியை விரைந்தாவலோடுமெடுத்து மார்போடணைத்து உச்சிமோந்து மெய்ப்பயன் பலவகையாலும் பெற்றாராய் ஐயனே! அரசே! அழகிய பாலனே! அறிவானந்தமே! அற்புதப்பேறே! அருட்கருவூலமே! அரும்பெரும் பொருளே! ஆசைப் பேரெல்லையே! அமுதப்பிரவாகமே! அன்பின் பிழம்பே! ஆருயிர் நிலயமே! ஆக்கவிளைவே! அண்ணலே! அப்பா! வென்று நாத்தடித்திக் குழறி அழைத்தாற்றிக் கண்களிலன்பு நீர்பெருக வெடுத்துச் சென்று, நினைவற்றுத் தம்பம்போனின்ற மனைவிகையிற் கொடுத்தார். அவ்வளவில் அவ்வம்மையார் நினைவெழவெழுந்தணைத்துக் கண்ணெற்றி நெடிதுயிர்த்து மோந்துள்ளிமுத்தங்கொண்டு, அன்பின்மிகுதியால் தனங்களிற் பால்சுரப்ப வூட்டுதலும், ஐயா உண்பார்போ லபிநயித்தார். அபிநயித்தலும் கலிகெட வந்த கற்பகமே! ஐயா! கண்ணுக்கினியானே! காதற்பெருக்கானே! எண்ணுக்கரியானே! எங்கட் கெளியானே! பண்ணுக்குப்பண்ணானே! பார்வைக்கோர் பார்வையனே! மண்ணுக்குவாழ்வானே! மாதவமே

ஆதரவே! என்று சீராட்டித் தங்கணவனை நோக்கி, எம்பெருமானே! நாம்பாற்குழவி யாகாமல் நம்பாற்குழவியாகிய இத்தெய்வ மணியைப் பிரிந்து முயிர்தரிக்குமோ, இவ்வுலகத்து வேறுவாழ்வும் வேண்டுமோ, இம்மகவைக் கண்டாலெந்நெஞ்சு முருகுமே யாதலென்னெஞ்சுமாத்திரம் கன்னெஞ்சா? ஓகோபிரிவு கொடிது! ஆதலாலிக்குழந்தையைப் பிறர் ஒருவர்க்குங் கொடுக்கவென் மனமியையாது, பொருள் வேண்டில் நீர் வேறுவகையிற் பெற்றுயலுவீராக, யாம் நம்மனைக்கிப்போது செல்வேம் என்று எடுத்துப்போகலாயினார். அவ்வாறுபோகையில் சிவானுக்கிரகத்தால் போகுந்திசையிது வென்றறியாமற் சென்று திருவிடைமருதுக்குக் கிழக்கின் கண்ணிருக்காவதத்தனாகிய காவிரிப்பூம்பட்டினம் வந்து ஓர் முகூர்த்தப்போதில் சோர்ந்து பசித்தாகத்தா லிளைப்பினையடைந்து அங்கோர் மனைப்புறமடுத்ததோர் ஆராமத்தினையடைந்தார். அவ்விடத்து இனிய குழைதழைகளைப் பரப்பி அதில் தங்கையிலிருந்த தெய்வக்குழந்தையைக் கிடத்தி அக்குழவியையே பார்த்தவண்ணமா யிளைப்பாறியிருந்தார் அவர்க்கணவராகிய சிவசருமரும் அவர் மக்களும் நிழல்போற்சென்றவ்விடமடைந்தயாவுமியாத்திருந்தனர் கேளும் முனிவர்களே! இவ்வேதியர் மனைவி யில்லஞ்சேரவெண்ணிச் சென்றும், அடைந்தது கடவுள் கட்டளையின்படி காவிரிப்பூம் பட்டினம். சிவாஞ்ஞையை யாவரால் கடக்கமுடியும் "ஒன்றை நினைக்கின் அது வொழிந்திட்டொன்றாகும்" என்பது முதுவோர்மொழியன்றோ என்றுப்பால உபமன்னியர் சொல்லத்தொடங்கினார்.

## திருவெண்காடர் மகப்பேற்றுச் சரித்திரம்.

முனிவர்களே! இஃதிப்படியிருக்க, திருவெண்காடர் நாடோறும் "பெறும்வற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த மக்கட்பேறல்லபிற" என்ற முதுவர் மொழியைப் பலகாலுஞ் சிந்தித்துருகித் தம்மையுடைவர் பூசையையும் அடியவர் பூசையையும் வழுவாது நடத்தி வாணிபத்தால் வளம் பெருக்கிவருகையில், அவர் மனைவியார் அச்செல்வங்கண்டு மகவில்லா வறுமை குறித்துத் தங் கணவர்பால் குறைகூறி வருந்துவார். ஆகவே அன்றிரவில் அவ்விருவர் கனவிலும், திருவிடைமருதுடைய பெருமான் சைவ விருத்த வேதியராக எழுந்தருளி, மகவு வேண்டிப் பெருந்தவம் புரியும் மாதவத்தீர்காள்! இனிவருந்துதலொழிமின், உங்களுக்குச் சிறந்தவிப் பிறப்பில் கருவிருந்து வந்திப் பெறும் புத்திரப் பேறில்லையாயினும், நோவாது பெறத்தக்கதோர் பிள்ளைப் பேறுண்டு. எங்ஙனமெனில், நாளையதினத்தில் உங்கள் மனைப்புறத்திருக்கும் ஆராமத்துச் செல்வீர்களாயின் அவ்விடத்திலசிவ

சருமரென்றும் சுசீலையம்மையென்றும் பெயர்களையுடைய ஆதிசைவதம்பதிகளிருப்பார்கள். அவர்களில் அச்சுசீலையம்மையார் கரத்தில் மிக இளையதோர் ஆண்குழவியிருக்கும், அவர்களை உபசாரத்தோடு அழைத்து வந்து பூசித்து ஆடையாபரணங்களால் அலங்கரிப்பித்து அவர்கள் மனங்களிக்கச் செய்தால் அவ்வம்மை அக்குழவியைத் தருவள். பின்பு நீங்கள், அக்குழவியை ஒருதுலையிலிட்டு, அவ்வளவு பொன்னை நிறுத்து அவர்களுக்குக் கொடுத்துவிட்டுக் குழந்தையைப் பெற்றுக் கொள்வீர்களாக. அதைப்பொருள் கொடுத்துப் பெற்றபிள்ளையென்றெண்ணவேண்டா. உங்கள்தவத்துப் பாவனை முதிர்ச்சியால் அருளகொடுத்த பிள்ளையாக நினைமின்கள், அது கருவிருந்து பெற்றதேயாம். அக்குழவியே உங்களுக்கு இம்மை மறுமை வீடுதரும் சுபுத்திரனாவான. நாமகரணமுதலிய கருமங்கள உங்கள குலமுறைப்படி நடத்திக் கொளளுங்கள். என்று கூறி மறைந்தனர்.

### திருவெண்காடர் மனைவியார் சிவசருமர் மனைவியார்பால மகவைப்பெற்றது.

உடனே அவ்விருவரும துயிலுணர்ந்தெழுந்து கைகால சுத்திசெய்து ஆசமனித்துத திருவெண்ணீறு தரித்து சிவத்தியானஞ்செய்து ஒருவர்க்கொருவர் கண்ட கனவு கூறியொப்பிட்டுப்பேரானந்த மடைந்தவர்களாயத திருவருளை நினைத்து ஆராமையோடும வெண்காடர் தந்தாயிடஞ் சென்று கனவுகூற அவர்கேட்டானந்தத்தோடு பின்பு அனைவரும விடியும நாழிகை யெண்ணிக் கொண்டிருந்தார்கள். அப்போது சூரியனும உதயமாக, ஆகாயந்தெளிந்தது. சுகந்தமாகவிளந்தென்றல்வீசிற்று. பறவைகள் இனியவொலித்தன. வேதமுழக்க முழங்கிற்று. மங்கலவாத்திய மியம்பின. யாவர்க்கும் மனத்தில காரணமின்றி ஊக்கம, மகிழ்ச்சி, சிவத்தியான முதலிய வுண்டாயின. வலத்தோள வலக்கண் துடித்தன பூமழை பொழிந்தன. இந்தநற்குறிகளைக்கண்ட வெண்காடனார்களிப்புற்று நித்தியமமுடித்துச்சிவார்ச்சனைசெய்துவந்த அடியார்களையும் வேதியர்களையும பூசித்து மனைவியாரோடுதம்மனைப்புறக்கடைப பாங்கராகிய ஆராமத்துட் சென்றார். செல்லலும அங்கு சோலையுற்றிருந்த தம்பதிகளிருவரையுங் குழவியோடிருக்கக்கண்டவுடனே மருதூருடைய பெருமானும் பெருமாட்டியுமாக வெண்ணி அருகு சென்று வணங்கி யினிய மொழிகளைக் கூறியுபசரித்தார்கள். அவ்விருவரு மிகமனங்களித்துச் சோலையெல்லாம், அவர்களின்சொல்லாற்றணிந்து, இன்பநிலையராயினர்.

அப்போது, திருவருளாணையால், அச்சுசீலையா ரென்னும் பார்ப்பினியார் கருத்துத் திரிபுற்றுள்ளங்களிந்து களிப்போடு திரு

### திருவெண்காடர் மனைவியார் சிவசருமர் மனைவியார்பால் மகவைப்பெற்றது.

வெண்காட்டடிகள் புண்ணியாராகிய சிவகலையம்மையாரைநோக்கி, அம்மே! நீர்மிக நல்லூழாகவிருக்கின்றீர், இக்குழவியோ தெய்வக் குழவி, அழகும், அருளுந் திரண்டொருவடிவானது; இதையெங் கணவர் யார்க்கோ பொருளாசையாற் கொடுக்க விருக்கின்றனர்; ஆதலால் நீர் இதை உம்முடையமகவுபோல வளர்ப்பீராயின், உமக்கு எல்லா நன்மையும் செல்வமும் பெருகும். நான் வேண்டும்போது வந்து பார்த்து என் கலியாறுவேன். என்சொல்லைமறுதீர். இது இனி என்மகவல்ல நும்மகவேயென்று அவர் கையிற்கொடுத்தார். உடனே சிவகலைத்தாயும் தாங்கண்ட கனவு நனவாக முடியக்கண்டு பேராசையும் அச்சமும் கொண்டு, கண்களில் ஆனந்த நீர்பொழிய விருகையு மேற்று வாங்கியவளவில் தனங்களினின்றும் அன்பு பாலாகப் பெருகக் குழவிவடிவாகிய பெரியபெருமானுக்கு ஊட்டலும், முன்தாயனார் ஊட்டிய மாவடுவுங் கீரையும், இளையான்குடிமாறனாரூட்டிய முளைநெல்லமுதும், கண்ணப்பதேவரூட்டிய எச்சில் ஊனமுதும் உண்ட அன்புக்கெளியார் அருவருப்பரோ? உண்டருளி, அழுகைதீர்ந்து பசியாறினமை காட்டினார். சுசீலையாரும் சிவசருமருங்கண்டு களித்தார்கள். உடனே சிவசருமர், வேறுஞாபகந்தோன்றத் திடுக்கிட்டு, நாம் கண்டதென்ன? இப்போது நமது இல்லத்திற்செய்த காரியமென்ன? வேளாண்மை சிறந்த திருவெண்காடரன்றோ இக்குழவியுரியது? என்று சிறுபோது சிந்தித்து, அங்ஙனே தெளிவுற்றுச் சிவலீலை எவ்வாறுமோ முழுவதுஞ் செல்லச்செல்லப்பார்ப்போம் என்றுள்ளடக்கிக்கொண்டிருந்தார். இவ்வதிசயமெல்லாம், அருகிலிருந்து பார்த்த திருவெண்காட்டடிகளார் திருவருளையெண்ணி யுடல் பூரித்துப் புளகம்போர்ப்பச்சிறிதுபோது, கம்பித்துத் தம்பித்து நின்று பேரானந்தத்தா லொன்றுந் தோன்றாது பின்தெளிவுற்றுச் சிவசருமரைநோக்கி, ஆனந்தநீர்பெருகப் பேரன்போடும் எம்மையரே என்னசிந்திக்கின்றீர், என்னையாண்ட மருதவாணர் திருவருளாலன்றோ வும்மை நானிங்குப்பெற்றேன். தேவரீர் எங்குடிக்கலிதீர்த்த கருணையாளரன்றோ? இது வுமது திருமாளிகையேயாம், எழுந்தருளுமென றுபசரித்தார். சிவகலையம்மையாரும் சுசீலையாரைநோக்கி, அம்மே அஞ்சவேண்டுவதின்று நீர்கட்டளையிட்டவண்ணம் மிகக்குழவியைக் காப்பேன். சிவானுக்கிரகத்தால் கிடைத்த விம்மகவு என்மகவேயாம். நீர் யாதோரையமுங் கொள்ளவேண்டாம் யானும், இம்மகவும், இம்மாளிகையும், எங்கள் செல்வமும் உம்மதே. இதில்சந்தேகம் இல்லை. தேவரீர் எம்மை எவ்வகையானும் ஆண்டுகொள்ளலாம் என்றார். அப்போது சிவசருமர் இவ்வார்த்தைகளைக்கேட்டு, நமதிறைவர் கனவிற்

குறித்தருளிய திருவெண்காடரிவரோபோலும் என்று திருவருள் தோற்றுவிக்க வெண்ணிநின்றார்.

அப்பால், சிவகலையம்மையார் தங்கையிலிருந்த அற்புதமகவைத் தங்கணவர்கையிற்கொடுப்ப, அவர் வாங்கி "மக்கணெய்தீண்ட லூடற்கின்பம்" என்ற மெய்ப்பயனை நுகர்ந்து, சொல்லின் முடிவாக விளங்கி யின்பம் பரவிக் கொந்தளமாகிய சிகழிகை முடித்த திருமுடியையும், தேய்பிறையின் குறைவற்றுத அருட்டிருமுகத்தையும், நீறணிக்காப்பணிந்த திருநுதலையும், இருளறுக்குமொளிக்குமொளியாக விளங்குந் திருவிழியையும், உலகுயிர்ப்ப வுயிர்க்குங் குமிழ்நாசியையும், மறைமணம் வீசும் பவளவாயையும், இசைவிளங்க விளங்குந்தோட்டணிகாதையும், உயிர்களைப் புரந்த குறிதிகழ் மணிகண்டத்தையும், போகமார்த்த பொன்னனையாளத்துப் புகழெனப் பரந்தமார்பையும், திசைப்போற்றல் திரண்ட தோளையும், வள்ளன்மைமலர்ந்த மலர்த்திருக்கையையும், வையந்திக்கப்பெற்றமஞ்சுளவயிற்றையும் சிந்திப்பரியவுந்திச்சுழியையும் கண்கவர்கடியையும், கவின்பெறுதொடையையும், முன்னுறநீண்ட முழங்கழலையும், கோமளமாகித், தாமரைமலர்ந்த செம்மைபழுத்துத, திருவெலாங்கனிந்து, சொல்லளவாதுநலமென்னுஞ் சைநீராயுருக்கிய, பேராசைபெருக்கி, ஆதாரமாகி, அமுதாயணையப், போதாதெய்வப் புதுநலம்விளைத்துக, கண்ணங்கவர்ந்து, மரணந்தவிர்த்து, மீதானத்துமின்னெனத்திகழ்ந்து, காணற்கரிதாயக் காணற்கினிதாயக், காதமணக்குமமெல்லியகுழவிநல்லடிமலரையும், இன்னதெனவொண்ணப்பின்னழகினையும், தனித்தனி நோக்காது நோக்கிச் சிவயோகிகள்மௌனவின்பத்தமுழ்குமாறுபோல இன்பவெள்ளத்துணமூழ்கினார். இங்கே இத்திருவெண்காடனார்தம்மைமறந்தனர், தந்நிலையறிந்திலர், மெய்ம்மைதெரிந்திலர், பொய்ம்மையொன்றறியார், அச்சேயழகினை யிவருண்டாரோ? அச்சேயினழகிவரையுண்டபடியோ? அறியேம். சற்றுப்பொறுத்து இவருலகுமுகமாயினார். அது திருவருள்திருப்பியவாறேபோலும். அங்ஙனே கண்ணெற்றி மார்பணைந்து உச்சிமோந்து எச்சின்மயங்காமையுள்ளிமுத்தங்கொண்டங்குமிங்குமாகவாசையிழுத்தலைப்பவுள்ளமூசலாடவோவா வுவகைவெள்ளந்திளைத்துப்பலகாற் புதிதுப்புதிதாக நோக்கிநோக்கிக்கரைந்துகரைந்து புலவண்ணமன்றிச் சொல்வண்ணமறியாது, மூகரேபோல, வேகநாயகனாகிய தம்மைந்தனைமீட்டுந் தம்மனைவியார்கரத்தளித்துச், சிவசருமரையும் அவர்மனைவி சுசீலையாரையும் உபசரித்தழைத்துச்சென்று அவர்களை ஆதனத்திருத்தித் திருவடிவிளக்கியருச்சித்து ஆடையாபரணங்களாலவரைப்புனைந்துமீட்டும் பலபடியாலும் பூசித்து நேசித்துத், தந்திருமகனைத்தொட்டிலிலப்போ

தே கிடைத்தப் பொன்னாலு மணியாலும புனைந்து, ஊரும், ஒக்க லும, நட்டாரும், உற்றாரும, அயலாரும், அடியாரும, அறிஞரு மாக விச்செயதிகேட்டுக் களிப்பிற்காணவந்தார்க்கெல்லாம ஒகை சிறப்பப் பொன்மணியாடைபூண உண்டி யாவுமளித்துபசரித்து, இரவலர் யாவர்க்கும் தமபணடாரந்திறந்து மிடிகெட நிதிமழை சொரிந்து மகவிழாக்கொண்டாடினா மங்கலியமாதா யாரும வா ழ்த்தினர். வேதியா பூவும பொரியும அக்ஷதையுந்தூவி மறைவழி பல்லாண்டுபாடினா. மங்கலவாத்தியமுழுங்கின. கணிகையா நடித் தனா. சூதா மாகதா வந்தியா புகழ்ந்தனா. அன்றவவூா முழுவ தும மகிழ்ச்சிதாங்கிப பெருவிழாக்கொண்டாடிற்று

திருவெண்காடா புத்திரோச்சவங் கொண்டாடல

அத்தருணத்தில, திருவருளாணையால மறையா கேளாதவ ண்ணம, ஓ! சிவசருமரோ ! திருவெணகாடரோ! உங்களுக்கு கனவி லிட்ட கட்டளைப்படி சீக்கிரத்தில முடிக்கக் கடவீரகளென்று, ஓா அசரீரி வாக்குண்டாகவே, சிவசருமா அதைக்கேட் டசசத்தோ டும, இருக்குமொழிகளாற றுதித்தாா. திருவெணகாடர் சேட்டு அன்பும ஆராமையும மேலிட, எமபெருமானே! மகவுபெறறமகி ழ்ச்சியின் மயங்காமை கருணையாற செயவகை தெரிவித்து உய வகைசெயயும பேரருளாளனே போற்றி, யாவைக்கு மூலமே போற்றி, முதலு முடிவுமிலலாதாயபோறறி, மண, நீா, தீ, காற்று, வெளி, மதி, ஞாயிறு, இயமானனுமான வெணவ கை வடிவாம அரசே போறறி, ஆதாரமொன்றின்றியே யாவை க்குமாதாரமாகும அமுதமேபோறறி, பிறப்பிறப்பிலாத பிஞ்ஞக னேபோற்றி, குறிகுண மிலாத குணக்குன்றமே போற்றி, யோகி யர்யோகத்து ஒளியேபோறறி, அவாகளுணாச்சியேபோறறி, மெய அறிவு இன்பவடிவாபோறறி, பிரமமே, போறறி, பரமனேபோற்றி, பெரியவபோற்றி, அரியவபோறறி, பொனவணணபோற்றி, பூத நாதனேபோற்றி, அஙகணபோறறி, அனைத்துலகுமானாயபோற்றி, உயிாக்குயிரான வத்தமாபோறறி, பூரணாபோற்றி, புண்ணியா போறறி, ஆரணாபோற்றி, அறபுதாபோறறி, தேவாகளபுகழுமதேவ னேபோறறி, மூவாகளபோற்றும முதலவனேபோற்றி, தத்துவ போற்றி, தயாநிதிபோற்றி, வித்தகபோறறி, வேதியபோற்றி, கண் ணுதலேபோறறி, கனகண்ணேபோற்றி, எணணுதற்கு எட்டா ாசனேபோறறி, அமமையேபோறறி, அப்பனேபோற்றி, அம்பி கை பங்குடையயனே போறறி, வஞ்சகரறியாமாமணிபோற்றி, நெஞ்சகத்து ஆசை நிறைத்தாய்போற்றி, காதலாபோற்றி, காவ லாபோறறி, தேசனேபோற்றி, செல்வனேபோற்றி, நேசனே போற்றி, நித்தனேபோற்றி, எண்ணியவண்ணம் இசைவித்தாய

போற்றி, புண்ணியம்பழுத்த புராணனேபோற்றி, போற்றிபோற்றி புராதனபோற்றி, போற்றிபோற்றி புராந்தகபோற்றி, போற்றி போற்றி புயங்கபோற்றி, போற்றிபோற்றி புனிதனேபோற்றியென நாத்தழுதழுக்கத் துதித்து மெய்ப்புளகமரும்ப வியர்த்து நெக்குரு கி கண்ணீர் வாரப்பலகாற்பணிந்து தொழுது ஆடிப்பாடி அவல மறுத்தாராயினார்.

அப்பால் திருவெண்காடர், புதியதோர்மணித்துலை தருவித்து மந்திரமுறையாற் புனிதஞ் செய்து பூசித்துச் சாந்தி வினைமுடித்து, மெல்லியஅணையையோர் தட்டிற்பரப்பி, அதன்மேற் றம்பெற லரும் பேறாகிய தெய்வக்குழந்தையைக் கிடத்தி, மற்றொருதட்டிற் பொன்னும் மணியும் பெய்வாராயினார். அப்போது சிவானுக் கிரகத்தால் பொன்னிடுந் தட்டு மேலெழுந்தே நிற்கக்குழவியிருந்ததட்டு நிலத்திற்றாழ்ந்து கிடந்தது. இது நியாயமே, சிவபெருமான் அடியவர்களன்பு மேலேற்மேலேறத் தாமதற்குள் ளடங்கியே நிற்றல் என்றுமுள்ள வியல்புவழக்குத் தானே. முன் அமர நீதிப் பெருந்தகையாரிட்ட பொன்னின்றட்டினுக்குக் கோவணக் கள்வராகிய ஐயரிட்ட கோவணத்தட்டு தாழ்ந்தேகிடந்ததன்றே. அவ்வற்புதத்தைக் கண்ட யாவரும், மனமருண்டு இஃதோர்தெய்வக்குழவியோ? சிவனருளோ? சிவபெருமானே யிவ்வடிவொடு வந்தவாரோ? திருவெண்காடர் புண்ணியமோ? வென்றுதத்தமக்குத் தோன்றியவாறு கூறினர்.

சிவசருமர், அவ்வாச்சரியத்தைக்கண்டுள்ளத் தச்சமிகவடைந்து துலைவலம்வந் தஞ்சலிசெய்து எதிர்நின்று, இடைமருதுடைய எந்தைபிரானே! அடியேன் பொருள்விழைவாற் றேவரீர்க்கடிமைப்பட்டவாறன்றே, திருவடித்தொண்டுக்கன்றோ ஆசையுற்றடிமைபூண்டது. அங்ஙனமாகத் தேவரீர் திருவுளமிருந்தவா றென்னையறியேன? என்னைச் செல்வக்களிமயக்கில் வீழ்த்தவோ? அல்லது, இவன்செய்தது புறத்தொண்டுதானே, அதற்குக் கூலிப்பயனிவ்வளவிற்றாகவென்று பொன்னைக்கொடுத்துப்புறந்தள்ளவோ? எத்திறத்து மிப்பொன்னால் நான் அபராதியேயாவேன். என்குடும்பப் பாதுகாப்பினுக்காகப் பொன்னளிக்கத்தேவரீர்க்குத்திருவுளமாயின் அளவைகடந்த பொன்னைக்கொடுப்பினயானென்செய்யக்கடவேன். இப்பொன்னைப்பாதுகாத்தற்கே என்வாழ்நாள் முழுதுமர்யவிடின் உய்வகையினியேது? அதுவுமன்றிக்கண்டார்யாவரும், இவ்வேதியன்மாயம்வல்லன்கொல்லோ! பொருள்விழைவால், இப்புண்ணியவடிவரான திருவெண்காடரை வஞ்சிப்பான் சிறிது செய்தபடியோ வென்ன நினைக்கவுமன்றோ ஏதுவாயிற்று. ஆகவே எம்பெருமான் கருணை யேழையேனை யுய்விக்கவென்றிருப்ப

துண்மையாயினித்துலைத் தட்டிவ்வளவிற் சமனிலையடைகவென்று மந்திராக்ஷதை யிறைத்துவணங்கினார். அங்ஙனே துலைத்தட்டு திருவருளாணையாற் சமனிலைபெற்றது. பூமழைபொழிந்தது. தேவதுந்துமி முழங்கிற்று. அங்குநின்ற சராசரவுயிரனைத்தும் அன்பு பெருகிக் குதுகுதுப்புற்றன. அடியவர்யாரும் ஹரஹரமுழக்கஞ் செய்தனர். திருவெண்காடர், சிவசருமரைப் பலகாற்பணிந்து பரவிநின்றனர். சிவசருமரும் அருளுருவனித் தம்மை மறந்தவராயினின்றனர். அப்போது, சிவனாணையால், "ஓசிவசருமரே! உம்மைச் செல்வமயக்கிலாழ்த்தவென்றல்ல இங்ஙனஞ்செய்தது. இத்திருவெண்காடர் பொருள்முற்றும் அறத்தோடுமீட்டப்பட்டது. அதனைப் பெறற்குரிய கலம் நீர். ஆதலால் இங்ஙனஞ் செய்வித்தனம். அஞ்சலீர், அஞ்சலீர். இன்றுதொட்டுப் பதினாறாண்டெல்லைகழிந்த தினத்து நீரும்உமது குடும்பமும் நமதுபதத்தடியினுறிவாழ்ந்திருக்கப் பெறுவீர்கள். கவலொழிமின். இப்பொன்னைக்கொண்டு இனி இடைமருதடைமின்" என்றோர் அசரீரிவாக்குஉண்டாயது. அதுகேட்டங்கிருந்தார் யாவரும்கடலொலிநாண ஹரஹர முழக்கஞ்செய்தார்கள். சிவசருமர் மனத்தவலமறுத்துப்பலகாலிறைவனைப் பணிந்துதுதித்தனர். திருவெண்காடர் மீட்டும்சிவசருமரைவணங்கினர். சிவசருமர் அதுகண்டஞ்சி அவர்வணங்குமுன் தாமவர்க்கஞ்சலிசெய்து தழுவிக்கொண்டனர். அன்று அக்காவிரிப்பூம்பட்டின முழுவதும் கைலையுலகமே போன்றது. முனிவர்களே! இதனாற்கடவுடம் அன்பளவன்றிப் பொருளளவல்ல வென்பது வெளிப்படுகின்றமை அறிமின்.

இங்ஙனம் விலைவரம்பறியாத மணியைமகவாகப்பெற்றவெண்காட்டடிகள் துலைநின்றுமகவையெடுத்தணைத்து, மிச்சில்போகத்தக்கபொருள்களூர்க்கண் மிச்சில்போக்கி, இருக்கைசேர்த்து, பொருள்களையெல்லாம் திருவிடைமருதூரிலிருக்கும்சிவசருமர் திருமாளிகைக்குப்பரிசனரால் பொதிசெய்தனுப்புவித்துப் பின், அற்றைப் பொழுதே நன்னாளாகத் தம்மைந்தர்க்குத் திருநாமஞ் சாத்தக்கருதி அங்கிருந்த முதியோரையும் சிவனடியரையும் சிவசருமரையும் வினவலும் சிவகிருபையால் அனைவருள்ளத்தும் ஒருபடித்தாய "மருதவாணன்" எனத்திருநாமஞ் சாத்தவெண்ணவு, திருவெண்காடர் கருதத்துப்போற்றுமென்ற, அதனைச் சிவசருமர், அருளேவலான் முந்தி, மருதவாணனென்று நாமகரணஞ் செய்கவென, அனைவரும் வியப்படைந்து, யான் கருதியதிது, யான் கருதியதிதுவென்று கூறிக்களித்தனர். உடனே வேண்டுமுபகரணங்களைத் தருவித்துச் சிவசருமரே புரோகித உரிமைகொண்டு வேதாகம விதிப்படி தேவபூசை ஓமத்திக்கடன் சாந்திவினைமுடித்து, பிள்ளைப்பெரு

மாறுககு "மருதவாணன" என்று திருநாமஞ் சாததினா. மறைமுழக்கமும மஙகலதூரிய முழககமும மலிநதன. நற்சகுனம பலவும தோனறின திருவெணகாட்டையா மிக மனங களிதது வேதியாமுதலாயினாககுபபொன், அணி, ஆடை, நெல, மணி, ஆனிரை, விளைநிலம முதலாயின வெறுபபக கொடுதது, இரவலாககுப பெருநிதி வழஙகிச, சிவனடியவா, அநதணா, ஒககல, நடபினா முதலியோரையும ஏழைகண்முதலிய பலவுயிரையும உணடி முதலியவறறால நனறுபுபசரிததுப பிறவிபபெருமபயன கொணடாா. அஙகுவநதிருநதாா யாவரும திருவெணகாடரையும அவா மைநதரையும பனமுகததாலும வாயாரவாழததிததததமமிடஞ் சென்றனா.

சிவசருமா திருவிடைமருதூரடைநது இருததல

அபபால சிவசருமா விருநதுணடு ஆறு கழிநது மறுநாள போய மறறை நாட் காலையிலே திருவருட் கட்டளையின படி திருவிடை மருதூருககுச செலலவேணடிய தஙகருததைத திருவெணகாடாககுக குறிபபிகக, அவரும அவ்வேதிய மணியை நனறுகப் பூசிததுப பொறறேர் செயது அவரையும அவாபனனியையும மககளையுமேறறிப, பிரிவாறறு நுபினசெனறு நெடுநதூரம வழிவிட்டு, அவா கட்டளையால தமமனைககுமீணடனா தேரோறிச செல்லுந தம்பதிகள அருளாணையைக கடபபதற கஞசித தெய்வக் குழவியைத திருவெண்காடாககுக கொடுதது வநதாாகளாயினும, அனபிழுததவாகளை யலைகக, மருதவாண! மருதபப! மகாலிஙக! மததியாாசுன! மாணிகக வளளலே! மைநதனே! மணியே! வாழவளிகக வநத பெருவாழவே! மருநதே! அபபா! ஐயா! என அழைததழைதது வருநதி முனசெலலககாலெழாது திருமபித திருமபிச் சிறிது தூரம பாாததுச சென்று, அபபால முழுவதும பிரிவாற்றுமைததுயரால விழுஙகப் பட்டாராயத தம வசஞ் சிறிது மினறித்தேரிற சாயந்தனா. அதுகணடு அவாகள மககள வருநதவே தோபபாகன தேரை நிறுததி அவாகளுககுச் சைததியோபசாரம செயது களைதெளிவிததலும, விழிததெழுவோா ஐய! மருதவாண, எனறெழுநதாாகள அபபோது அனபாினபுக கெளிய பெருமான் கருணையால அம்மருதவாணப பேறாககிருககுழவி வடிவ மொன்றெடுதது இவர்கள கவலையறஅததேரினோபுறததிலவாகள மைந்தாகளோடிருககககணடு, துணுககுற்றுக குழநதையை வாரியெடுதது அணைத்துச்சி மோநது ஐயனே! எவ்வாறு வந்தனை எவ்வாறுவநதனை? அப்பா! உனனைப பிரிந்தாறறுவோமோ எனறு அனபினுலுருகிக கதறித் தேரை விரைவாக நடத்திககொணடுவருகையில, அததமபதிகடகு அருளாணை

யின்படி, தேர் வேகத்தாற் சுழுத்தியொன்றுந்தோன்றத், தேர் திருவிடைமருதூர் அடைந்து திருமாளிகை வாயிதலைச்சேர்ந்தது. சேர்ந்ததும் அவர்களம்பக்கமொழிந்து, அணைத்திருந்தகுழந்தையாகிய மருதவாணரைப் பார்க்கையில் அம்மாயக்குழவி காணாததாக, திடுக்கிட்டு உடல் பதைக்க, ஐயோ! அணைத்திருந்த குழந்தையேதாயிற்றே! தேர் வேகத்தாலயாம் உறங்கி விழுந்தபோது தவறிக் கீழே விழுந்ததோ? அல்லது குழவிவந்ததுபோற் கனவுதான்கண்டனமோ? யாரேனும் கொண்டு போயினரோ? என்று துடிதுடித்து ஒன்றுந் தோன்றாது மயங்கி நின்று, கண்ட புன்மரமும் உருகும்படி வருந்தி நிற்கையில், சிவசருமர் ஒருவாறு தெளிந்து தம்மனைவியார் முகநோக்கிப் பெண்ணே நாம்வீணே வருந்தப்பட்டுக் கொண்டிருப்பதிற் பயனில்லை, நீ உன்மக்களை வைத்துக்கொண்டு உடையவர் அருள்செய்த செல்வ மிகுதியாயிருப்பதால் அதிதிபூசை தவறாது நிறைவேற்றி வருதி நான் காவிரிப்பூம் பட்டினஞ் சென்று, நமது அற்புதக் குழந்தையிருக்கப்பார்த்து வருகிறேன் பார்க்க நேரிடாவிட்டால் தேகத்தை யொழித்து விடுகிறேன் என்று கூறினர் அதுகேட்ட அச்சுசீலையார், முன்னினும் மிகவருந்தி, எம்பெருமானே! தேவரீரைப் பிரிந்தால், இம்மக்களும் செல்வமும் என்ன செய்யும், நீர் பிரியுமுன் என்னுயிர்தான் பிரியும், ஆதலால் தேவரீருக்கு அடியேனைப்பற்றிய கவலை யொழிந்துபோம் என்றார். அதற்குச் சிவசருமர் சொல்வகையொன்றுந் தோற்றாதவராய் மயங்கினின்றார்.

அங்கே காவிரிப்பூம் பட்டினத்தில் அத்தெய்வக்குழவி, கண்ணிமைபோலக் காத்திருக்கும் சிவகலையம்மையாருக்கும் திருவெண்காடருக்கும் பலவிங்கிதங்களைக் காட்டிக் களிப்பித்திருந்தது. இங்ஙனமிருக்க, அக்குழந்தையளவாகத் திருவெண்காடர் நிறுத்துச் சிவசருமருக்குக் கொடுத்த திரவியம் மூன்று தினமாகப் பண்டியில் திருவிடைமருதூர்க்கு வந்துகொண்டிருந்தவன்றே, அன்று ஏனையமுற்றும் மெய்காவலரோடுவந்து சிவசருமர் மனைக்கண் சேர்ந்தன. ஆகவே, அம்மெய்காவலர் கூட்டத்துள் இறைவர் கட்டளையால் அச்சேவகர்கள் வேடமாக வந்திருந்த கணாதிபர் ஒருவர் ஓர் கவளிகையையுந் திருவெண்காடர் எழுதியவருக்க ஓர் ஓலைமுடங்கலையும் சிவசருமருக்குக் கொடுத்து திசைவழியே போவாரோடும் போயினர். பின் சிவசருமர் அவ்வோலை முடங்கலை நிமிர்த்து வாசித்து அதனுள் மருதவாணப் பேரிளங்குழவி சுகத்திலங்கே பலவிளையாடல் செய்திருக்கும் செய்தியும் இவரது பிரிவாற்றாமையகல அக்குழவி திருவடிவமாகவமைக்கப்பட்டபொற்படமொன்றனுப்பியமையுந் திருவெண்காடர் குறித்தெழுதிய வண்ணமிருக்க

க்கண்டு, மிகுமகிழ் சிறந்தெழுந்து கூத்தாடி உடனே அக்கவளி கைக கட்டவிழ்த்து நோக்குதலும், அதில தெய்வசகுழவியைமெ யமமையிற் கணடவாறுகண்டு, அவலமறறவராயத தமமனைவியா ருக்குங்காட்டிப பெண்ணே! இனி நாம குழவியினபொருட்டு வரு நதுவதுமுறைமையலல.சிவபெருமான் ஆணையை வேதம, அரி பிர மர், இந்திராதி தேவரும கடக்கவலலாரலலா. நாம கடக்கவலல மோ? ஆளுடையார திருவுளளம அத்தெய்வக குழவி திருவெண காடர பாலிருக்கவேபோலும. நீயே நினைததுப்பார கோயில நந்த வனததிலக்குழநதையைக கணடெடுதத நீ உனனிருப்பிடங கொ ண்டுபோகவென்று, என சொற்கடநதோடினையனறோ? சிவலீலை எவ்விதமாக முடிநதது? திசை கெட்டுசசென்றுநெடுங்காததிரு க்கும காவிரிப்பூம பட்டினததது, முனபின அறியாத அத்திருவெண காடர மனைப்புறததோட்டததை யடைந்தாய. அம்மட்டிலோ? இனனொன்று விசாரிததது அறியாமல வலிய அததிருவெணகாடர மனைவியார சிவகலையமமையார கையில நீயே கொடுததது,உனபிள ளையாக வளாக்ககடவை யென்றும சொலலினை. அதுநிறக, இந தபபடததைப பாாததனையோ? இவவாறு இவவுலகததில சாதார ணமாய யாவராலும எழுதககூடும. இதுமானுடரால எழுதப்பட்ட தனறு. நமது ஆசையும ஆராமையுமகணடு அககுழநதை வடிவம அமையககடவுளே யிபபடததையும நீடடுவிததனுபபிய வாறு போலும. ஆதலால, நாம நமது ஆசைதணிய விததிருவுருபபடத தை யுபசரிததது நமது மறறையநாளைக குருவருளாணைப்படிகழிகக ககடவேம என்று மனைவியாரைத தேறறினா

உணமையேயனறோ? * "மைபபடியுங கண்ணாளுந தானுங கச்சிமயானத தான வாாசடையான மாசொன்றிலலான - ஒபபு டையனலல னொருவனலலனோ ரூரனலலனோருவமனிலலி,-யபப டியனவவுருவ னவவணணததானவனருளே கண்ணாகக காணின ல்லா, லிபபடியனிவவுருவ னிவவண்ணததனிவ னிறைவனென்ன றெழுதிககாட்டொணாதே." எனறதனாறேமமைமொழி அபபால அதுகேட்ட கறபரசியாகிய அவவமமையாரும இஃதுணமையா மெனறு எணணித துயரமாறினா. அதுமுதல்சிவசருமா அததிருப் படததையலஙகரிததகோகூடததமைததுக காலஙகடோறுமமக வுககுமகடவுட்கும செயயுமஅன்பும,அசசமுமபொருநதவுபசரித

---

* மைபபடியுங கணணாளுந தானுங கசசிமயானததான வாாசடையா னெனனினலலா - னொபபுடையனலல னொருவனலலனோரூரனலல னோருவம னிலலி - யபபடியுமநநிறமுமவவணணமுமவனருளே கணணாககக்காணினல்லா லிபபடியனிநநிறததனிவ்வணணததனிவனிறைவனென்றெழுதிக காட்டொணா தே எனபதூஉம பாடம

து, தங்கள் நியமப்படி சிவபூசை, பிதிராகடன், அடியவரர்ச்சனை, வேதாகமமோதல், சுற்றந்தழுவல், பலவுயிரோம்பல், ஏனைய வேள்விமுதலிய நித்தநைமித்திகங்களைக் குறைவற நடத்தி வந்தனர். முனிவர்களே! இவர் முத்தியடைந்த செய்தி பின்னுங் கூறுவோம். இனித்திருவெண்காடர் செய்தி கூறுவோமென்று ஸ்ரீ உபமன்னிய பகவான் அப்பால் சொல்லத்தொடங்கினார்.

## அருட்குழவிப்பெருமான் திருவிளையாடல்.

அந்தணர்களே! அப்பால் திருவெண்காடரும் அவர் மனைவியாரும் தமது அருமைமைந்தனை நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்து வருகையில், குழவி, முகங்கவிழ்ந்து செங்கீரையாடிப், பின்னிருந்து சப்பாணிகொட்டிப், பெற்று பெற்றோர்க்குப் பேரானந்தம் விளைத்தது. பெற்றோர்கள் தக்ககாலத்து அன்னப்பிராசனமுதலிய கருமங்களை நடத்திக், குழவிப்பெருமானுக்கு உச்சிச்சூழியமுஞ் சுட்டியுஞ்சாத்திக், காதிற் குதம்பை புனைந்து, மார்பிலைம்படைமதாணி முத்துவடம் விளங்க அரையிற் பொற்சிறுமணி கட்டிக், கையிற் கடகமும் பவளமும் பொன்மணியுமாகக்கோத்தணிந்து, சிறுவிரன்மோதிரமழகுபெற வமைத்துக் காலிற் பாடகமுஞ் சிறு சதங்கையுந் தரித்துக், கைத்தாய் செவிலித்தாய் சேடியர் புடைசூழ்ந்து கண்ணிமைபோலக் காத்துப் பாராட்டிச் சீராட்டியவ்வூரும் சுற்றத்தோரும் பெருமகிழ் தூங்க அரசனுலகோம்புவதுபோற்போற்றுவாராயினார். ஆயினும், மூவருமேனைத் தேவரும் பதினெண்கணத்தவரும் நாடோறுங் கைலையோலக்கங் காணச் செல்லுமாறு காவிரிப்பூம்பட்டினத்து வந்து ஐயர் குழவித் திருவிளையாடலைத் தரிசித்துய்வுறலுற்றாராயினர். ஞானிகளுள்ளக் கண்ணுற் காணும் பெருமானைச் சராசரவுயிரனைத்தும் ஊனக்கண்ணுற் கண்டு மண்மேற் பிறந்த பயனைப்பெறலாயின. அந்நகர்ச் சூழல் முழுவதும் வறுமை, பிணி, அகாலமரணம் முதலிய துன்பங்களொழிந்தே போயின. மலடிகள் எல்லாம் மக்களைப்பெற்றனர். பெரும்பாவியர் புண்ணியசீலராயினர். கொல்லா விரதம் குதுகலித்து ஓங்கித் தயாமூலதருமந் தலையெடுத்து வழங்கிற்று. தருமசீலரனைவர்க்குஞ் சத்திநிபாதந்தானே பதிந்தன. சிவநேசமும் அடியார் பணித்திறமும் அனைவர்க்கும் சாதனமின்றி விளங்கின. அடங்காதாரெல்லாம் அமரரேயாயினர். வேறுகுருமொழி பெறாது சிவஞானம் அனைவருள்ளத்தும் விளங்கச் சீவன்முத்த நிலைபெற்றனர். யார் எத்தொழிலைச் செய்யினும் சிவபூசையாயின. யார் எதைக்கூறினும் சிவமந்திர ஜபமேயாயிற்று. யார் எதை நினைக்கினும் சிவத்தியானமாயிற்று. ஆண் பெண்ணுயிர்களனைத்தும் சிவமுஞ் சத்தியுமாயின. ஆகவே எல்லாஞ்

சிவமயமென்பது விளங்கிற்று. அந்நகரமனைகடோறும், இத்தெய்வச்சவைப்பற்றி அன்புசெய்து புகழ்வாரும், அருமைசெய்து புதுமையாகவெண்ணிப் போய்ப்பார்ப்பாரும், கைத்தொழில் மறந்து சீராட்டு வாருமாயினர். ஆயின் இஃது ஓர்வியப்பன்று. ஏனெனில், தீ அடுத்த திரணங்களைத் தன்மயமாக்குவதும் ஆச்சரியமோ.

இங்ஙனம் எம்மருதவாணப் பெருந்தகை வளர்ந்துவருகாலத்து மெல்லத்தளர்நடைப்பருவமடைந்து தாயர் பின்றொடர் விளையாடிச் சிறுதேருருட்டி வீதியிற் சிறு பேதைப்பெண்களிழைத்தாடுஞ் சிற்றிலழித்தும், அவர் வண்டலாட்டு விருந்தாயும், தமது திருவிளையாடற் பருவத்தேற்ற ஏனையவாணிபச் சிறுவரோடு வேறுபல விளையாடியும், திருமேனி புழுதியாடி அன்னையர் யாரும், "ஐயவருக அண்ணல்வருக அமுதவருகவருகவே, அப்பவருக ஆறுமுகவருக அத்தவருகவருகவே, செய்யவருக தேசவருக செல்வவருக அல்லறீர், தீர்த்தவருக மூர்த்திவருக சீலவருகவருகவே, தூயவருக சோதிவருக துணைவவருக மகவிலாத, துக்கமகல வந்தவின்ப சுக சொரூப வருகவே, வையமுழுது முய்யவந்த வள்ளல்வருக வருகவே, மாசிலாத மருதவாணவருகவருகவருகவே." "பழிசெயாமலுலகமெங்கள் பாரசெல்வமலிறவே, பரிவுசெய்து குருவிருந்த பாலலீல வருகவே, கழிவிலாசை தணியவந்த காதலாள வருகவே, கவலைதீர வாரமவைத்த களைகண்ணுள வருகவே, ஒழிவிலாதெமுள்ளமுருகவுவகைசெய்தநித்தியமே, உம்பரிம்பர்வம்புபோலுதித்தஐயவருகவெம், வழிகெடாமைவாழவைத்த மாதவம்வருகவே, மருதவாணவருகவெங்கள்மருதவாணவருகவே." "செத்தபின்புமுத்திதரவே செல்வமக்கள்வேண்டுவார், பித்தர்போலுமுலகர்கண்டபோகளயாமிலா வருவதை, மத்தர்சொல்லைக்கொண்டிலேமதிக்கிலேமேலாவதை, யத்தவெங்கள் மருதவாண வருள்கமுத்த மருள்கவே." "கண்ணமுத்தமருள்கவெங்கருத்தமுத்தமருள்கசெவ், வண்ணமுத்தமருள்கவானவரம்பமுத்தமருள்கவெம், பண்ணமுத்தமருள்கவெம்பாலமுத்தமருள்கவெம், மெண்ணமுற்றுமருதவாணவெந்தைமுத்த மருள்கவே." "சங்கமுத்தமேகமுத்தந்தாமரைப்பூமுத்தநல், மங்கைமார்கள்தந்துமுத்தம வரைகொள் முத்தமிப்பியின், துங்கமுத்தமயானைமீன் துலங்குமுத்தமவேண்டிலேம், எங்களையமருதவாணவீகவாயின்முத்தமே" "செம்மையானகண்டுசாக்கரைசெழித்தபாலுமெம், அம்மைதருவமோடிவருக வருள்கமுத்தமொன்றுமேல, விம்முபுழுதிபோகக்கலாமவிரைந்துவருகமுத்தமொன், றிம்மெனத்தராயோவைய வெங்கள்மருத வாணனே." என்று அழைப்பவோடிமேல்விழுந்து முத்தமளித்தாடியும், மழலைத்தழையப்பேசியும் பெற்றோரை மகிழ்செய்தனர். "மக்கண்மெய்தீண்ட

லுடற்கின்பம் மற்றவர் சொற்கேட்டலின்பஞ் செவிக்கு. அமிழ்தினு மாற்றவினிதே தம்மக்கள் சிறுகையளாவியகூழ்" என்றுதிருக்குறள் கூறியஇன்பத்தை உண்மையாக நுகர்ந்தவர்கள் நமது திருவெண்காட்டடிகளும் அவர் திருமனைவியாருமன்றி வேறு யாரை யாம் கூறுவோம். என்னெனில், பரமகாரணரான சிவபெருமானுரே மைந்தரானால் மெய்யானமகவின்ப அனுபவம் யார்க்குண்டு அது

இங்ஙனமிருந்தவளர் நடைப்பருவ மொழிந்தவளவில், மருதவாணப் பெருமான் ஏனைய வயசச் சிறுவரோடு கூடிக்கறங்குக் கழற்காய் முதலிய கருவிகொண்டு விளையாடியும், யானை, குரங்கு, மான், மரை, தகர், குறும்பூழ், சேவல் முதலிய வளர்த்தும், போர்செய்யும் விலங்கு பறவைகளைப் போர்மூட்டி யாடல்கண்டு களித்தும், சோலை, நந்தவனம், தோப்பு, தண்டலை, கூவல், வாவி, கயம், யாறு, கடல்களிற் சென்று பூ, காய், பழம்பறித்துச் சூடியுந், தின்றும், ஆடியுந், குதித்தும், நீந்தியும், நகரமனைகடோறுஞ் சென்று ஏககாலத்திலனைவருபசாரத்தையும் கொண்டு விருந்துண்டு அவர்க்கு வியப்பை விளைத்தும், அவர்கள் மறைய வைத்த சிற்றுண்டிகளைத் தெரிந்தெடுத்து வந்து மகாரோடுண்டாடியும், அவர்களப்பண்டத்தைத் தேடுகையில் முன்னில்லாமை காட்டி மீட்டும் வேறோரிடத்திலப்பண்டமிருக்கக்காட்டியும், தந்தாயை விட்டுப் பிரியாமை மனைக்கண்ணேயிருந்து காட்டி யூரிற் சிறுகுறும்பு செய்துலாவியும், பற்பல கூட்டமாகப் பிரிந்து விளையாடுஞ்சிறுவரோடு தனித்தனியிருந்து காட்டியும், அச்சிறுவர் விரும்பியவாறு உண்டியாடை பூணுதி கொடுத்தும் திருவிளையாடல் செய்தனர்.

மீனுயிருந்த மணிக்கிரீவன் சாபந்தீர்த்தது.

இங்ஙனம் பலபலவிளையாடல்செய்தொருநாள் அம்மகார்களோடு கடற்கரைசென்று விளையாடுவார், மணிக்கிரீவன் என்னும் கந்தருவன் சாபநீக்கத்திருவுளங்கொண்டு, மரக்கலமொன்று அச்சிறுவரனைவரோடுமேறி நெடுந்தூரஞ்சென்று திரிந்து ஆடிவருகையில், யோசனை நீளமுள்ளதோர் பெருமீன் இவர்கள் தோணி நோக்கி விழுங்குங்குறிகாட்டிப் பெருஞ்சினத்தோடு விரைந்தோடி வருதல்கண்டு, அவ்வசியமக்கள் யாரும் பொறிகலங்கி யஞ்சிப் பெருங்கூச்சலிட்டு, மருதவாண! மருதவாண! இனி என்செய்க்கடவோம் யாமெல்லாரும் ஒருங்குமாளவந்ததே! இப்பெருமீன் வாயினின்றும் எங்ஙனமுய்யவல்லோம்! அறியாது வந்தாவியிழக்கலாயிற்றே! அந்தோ! நம்மன்னைதந்தையர் இவ்வறியாது வருந்துவரே! என்று புலம்பி வருந்துகையில் அம்மீன் நாவாய்க்கருகே வந்து கம்பின்றலை நின்

ற அவருளொருவனைப்பற்றி விழுங்கியது. விழுங்கவே மற்றையர்கள் நடுங்கி மூர்ச்சித்தவராயினர் அப்போது மருதவாண வள்ளல்கண்டு இரக்கமுற்றுச் சிறுவர் பயந் தீர்ப்பாராயத் தமது திருவடி நீட்டி அம்மீனற்றலையின்மேலுதைத்தனர். உடனே அம்மீன் உயிர் துறந்து மாண்டது. மாளவும் அதன் யாக்கையினின்றும் ஓர் தெய்வ வடிவப் புருடன் புறப்பட்டு விமானமேறி அந்தரத்தே நின்று, இம்மருதவாண வள்ளலை நோக்கி எதிரின்றருசிதமொழுது, ஐயா! நானமணிக்கிரீவனென்னும் கந்தருவன் வேடிக்கையாகத் திரிகையில், ஒருவனத்தில் சிந்து முனிவனாகக் கண்டு என் அழகின் செருக்கால் அவனை யிகழ்ந்தேனாக, அவர் முனிவுற்று, உடனே என்னை மீனாகும்படி சபித்தார்.

அதுகேட்டஞ்சி யான் அவரை வணங்கி வேண்டலும் அவருடைய பெரியபெருமான் அன்பருய்ய வேண்டி மருதவாணப்போமகனாய் எழுந்தருளும். அப்போது, அவர் செல்வத்திருவடி பட்டளவில் உன் மீனயாக்கையொழித்துய்வாயென்றருளிப்போயினர். அதுமுதல் யான் பல துயரப்பட்டு வருந்தி நின்றேன் அவ்வருத்தமெல்லா மின்று கட்டொழிந்தது. பெருங் கருணையாளனே யென்று துதித்தலும், அவனுக்கருள் புரிந்து சுவர்க்கம் புகவிடுத்து, பயத்தால் மூர்ச்சித்து விழுந்திருந்தாய கமைந்தர்கள் உய்ந்தெழக் கருணையானோக்கலும், அவர்யாருங் களை தெளிந்தெழுந்து, மருதவாண நம்பி அருகே நிற்பதும் மீனிறந்து மிதப்பது நோக்கி, மிகவியப்புற்று அவரைத் தழுவிக் களிப்புடனே உபசார வார்த்தைகளைச் சொல்லித்தமது கூட்டத்துள்ளொருவனை அம்மீன் முன்னமே விழுங்கியதன்றோ அவன்மீட்டு நம்முடைய கூட்டத்துளில்லாமைக் கிரங்கி அம்மருதப்பிரானிடம் விண்ணப்பித்தார்கள். அதுகேட்டபெருமான் புன்னகை செய்து அதோ அவன் வருகின்றனன் பாருமென்ற, அச்சிறுவன் அம்மீன் வயிற்றி னின்றும் விலையுயர்ந்த நவமணிகள் கணக்கில்லன வாரிப்பெரியதோர்சுமைசெய்துகொண்டு வாயின்வழியே சாதாரணமாய்த் துன்பமின்றி வரக்கண்ட அவ்விப்பிரமாரா அனைவரும் களிப்போ டெதிர்சென்றவனைத்தழுவி யழைத்துவந்து அவன் கொணர்ந்த மணிகளைக் கண்டு மகிழ்ந்து தாமும் அவ்வாறு மணிகளைச் சேர்க்கவிரும்பியதை மருதப்பெருந்தகையார்க்குக் கூற அவரும் கருணையாலவர்களை நோக்கிஉங்கட்குநவமணிகளில்விருப்பமிருக்கின், இம்மீன் வயிற்று நுழைந்து கொண்டுவம்மின் என, அச்சிறுவர்க ளவ்வாறே அம்மீன் வாய்வழி நுழைந்து அங்குத் தம்மாசையெல்லைப்படுமட்டும் மணிகளை வாரிக்கட்டிச் சுமக்கலாற்றாது சுமந்துவந்து கரவாயிற்சேர்த்தது, அவ்வவரும் தாந்தாங்

கொடுவந்த மணிகளிற சிறந்தன தெரிந்து மருதப்பிரானுககுககாணிகளைகயெனறு கிழிமுடிநது வெவ்வேறு பொதிநது வைததனா. உடனே நெடுநேரமாயிறறு நம்மனனைதநதையா நமது வரவு நோககிநிறபாராதலின் யாமவிரைவிற்செலலககடவமெனறு அனைவரும தோணி செலுததி வலாயினா அவரஙஙனமாக.

இஙஙேன நகரவணிகமாக்க ளனைவருந்ததமைநதர்கள மனைககாலததிலவராமைகண்டுமனமவருநதித திருவெணகாடராகிய பட்டினததுபபிளளையாா திருமாளிகைவநது விளுவ, அவாமனைவியாரும தமமைநதா வரவுகாணுது வருநதினராயததமது கணவாககறிவிபப, யாவரும நகரமுழுவதுமதேடினரா யெஙகுங்காணுதுகடனமேல விளையாடச் செனறிருககலாமென றெணணிக கடறகரைபகடைநது விசாரிததவளவில, அஙகுச சிறுவரொலலா மொருஙகே கூடி மிதவைமேலேறிசசெனற செயதி யுணாநது வருநதி வரும வழியெதிா நோககி வாடிநிறகுந தருணததில, தோணியும வநது நினறது; மககளனைவரும மணிககுவைகளோடு கரையேறித ததம குரவரை வணஙகி னினறனா. அவாகளனைவரும பெருஙகளியோடு தமமககளை யழைததுககொணடு மனைககுச செனறு அவர்கள தநதமணிகளைககணடு களிபபுறறுப பட்டினததுபபிளளையாருககு அவ்வரலாறுணாததிப் பெருவிழாககொணடாடி யிருநதனா. பட்டினததாரும தமமைநதா தநத மணிகளைசகணடு வியபபுற்று வேதியாககடகும எழையாககுமாக அமமணிகளை வழஙகி மககளோடு மனைபுகுநது இனபுடனிருநதனா

மருதபிரான விததியாபபியாசம.

இஙஙனம சினனுள கழியலுமமருதபபருககுக கலவிபயிலபருவம வநதடுததாகக கண்ட திருவெண்காடாதவரு செயதாசிரியததனமையடைநதா ரொருவரைத தருவிதது, அவரைப பூஜை முதலியவற்றுலுபசரிதது இனமொழியால மகிழவிதது ஓா நனளுளில அவரிடதது மருதவாணரைக கலவிபயிலவமைததனா. மருதவாணரும சினனுளிறறுனே அறுபததுநானகு கலைகளும்பயினறுவலலராயினா. பேருலகைக கணமொனறிலுணாததவலல பரமாசிரியராகிய ாசனுா சின்னுளிற் பயினறனரெனபது கொண்ட கோலததிற் கேறபக்கூறியபடியன்றி வியக்கததககபடியனறு.

அஃதஙஙனமாக, அந்நியதேயத்தினின்றோர் வணிகன் பெறலரிய பருமணிமுதது ஒனறை அககாவிரிப்பூமபட்டினத்தில் வாழுமவசியாபாலகொணடுவர, அதனையவரனைவரும் கண்டளவிற பிரமைகொணடுமயஙகினரனறிவிலையறியமாட்டாதாராய்ததயமுட்சி

றந்த திருவெண்காடர்பாற்கொண்டு வந்தனர். அப்போது திருவெண்காடர் அம்மணியை நோக்கி அதன் பருமனுக்கும் திரட்சி வடிவினுக்கும் ஒளிக்கும் நிறத்தினுக்கும் வியந்துநெடுநேரந் தம மனத்துளாராய்ச்சியுடனிருந்து பின் எவ்வகைமணிக்கும் விலையாவது கொள்வோன் விருப்பினளவாமாயினும் இம்மணி பதினாயிரம்பொன்விலைபெறுமாகத்தோற்றுவது என்றார். அதுகேட்ட அவ்வாணிபரனை வரும் ஒக்குமெனவுவந்து நின்றனர். அதனைக்கொடுவந்தவனும் பெருங்களிப்புற்று நின்றான். அத்தருணத்தில் மருவாணப்பெருந்தகையார் பள்ளிக்குச்சென்று வருபவர் வழக்கம் போலும் தம் பிதாவுடனுண்ணத் தடை நேர்ந்ததாக அவரையழைக்கவந்தனர். அங்குக்கூடியிருந்த வசியர்குழாத்தையும் அவரிடையிருந்த பெருமணிமுத்தையுங் கண்டு, அங்கிருந்தாரை நோக்கிப்பெரியீர்! இம்மணியெங்கிருந்து கிடைத்தது; இதன்விலையென்ன? யாரிதனை விலைமதித்து வாங்கினீரென்று வினவினர். அப்போது பட்டினத்துப் பிள்ளையார் மருதவாணரை நோக்கி, ஐய குழந்தாய்! இம்மணியைப் பற்றிய விசாரமுனக்கேன்? பசிபொறுக்கலாற்றாதவன் பள்ளிக்குச் சென்று வந்த நீ மனை புகுந்துண்டு பசியாறலாகாதாவென, அவரை நோக்கிமைந்தனார், அப்பரே! அங்ஙனமன்று பலகலைத் துறைபயிலவோருலகியலினு முலகியற் பொருளினும் உண்மையறிய முயல்வது கடனாதலின், நவமணிகளிலக்கணத்தினையான் எம்மாசிரியர்பாற் பயிலும்போது கேட்டதோர் குறிப்பாடிம்மணியிற்கண்டேனாகலின் அதனை நுமக்கு வெளிப்படுக்கமுயன்றேன் என்னலும், அங்குள்ள வசியருள்ளொருவர் இவர் சொற்கேட்டு வியப்புற்று அதனையறிய விரும்பினாராய்! ஐய எம்மருதப்பெருந்தகாய்! கேட்டருள்க. வேற்றூரினின்றும் இவ்வணிகர் தந்த விம்மணி எம்மான மதிப்பரிதாய நுந்தையாராகிய இப்பட்டினத்தையர் பார்த்தநந்தேமாக அவர் பதினாயிரம் பொன் மதித்தனர். இதன் வரலாறிது, இனிநீர் கூறுவது கூறுமென்னக்கேட்ட, மருதையர், பெரியீரோ! யெந்தையார் மதித்த பதினாயிரம் பொன்னையும் யானே தருகிறேன்; ஆனால் இம்மணிகண்ணாலு நோக்கத்தக்கதன்று; என்னெனில், இதனுள் நீர் கிடந்துள்ளது. இது ஆணிமுத்தன்று. இதைத்தொட்டாலும் வறுமை நோய் முதலிய வுண்டாம். அதனை நீவிர் அனைவரும் பார்க்கவென்று, முன்பின் நோக்கா தம்மணியையுடைத்தனர், உடனே அதனுள்ளிருந்த நீர் வெளிப்பட்டது. அதுகண்டயாவரும் வியப்புற்று மருதப்பிரானை மகிழ்ந்துகொண்டாடினர்.

பின்பு மருதவாணப்பெயர்வள்ளல் அம்முத்தினைத்தந்த வணிகனுக் கிரங்கித் தாமுரைத்த வண்ணம்பொருள்தர வெண்ணி, கடா

மருதப்பெருந்தகைவாணிபத்தின்மேற்கலமேறிச்சென்றது. அங்

ரபுரத்து வாழுநு சிவநேசத்திற் சிறந்தஞானானந்தனென்னுந் தம் துநேயனுக்குத் திருமுக மளிப்ப, அவ்வணிகன் அத்திருமுகம் பெற்றுக் கடாரபுரமடைந்து அச்சைவனிடந் திருமுகங் கொடுத் தலவில் அவன் அற்புதமும் ஆராமையுங் கொண்டு அன்போடெ திரேற்றுத் தத்லைமேற்றரித்துப் பூசித்து வாசித்து, உடனே அவ்வ ணிகனை உபசரித்து இனியன கூறிக் குறித்த பொன் குவியலைக் கொ டுத்து அனுப்பினான். இச்செய்தி யுணர்ந்த வெண்காடர், தமது மைந்தர்பால ஆசசமும அன்பு மிகுந்தவரா யிருந்தார்.

மருதப்பெருந்தகை வாணிபத்தின் மேற்கலமேறிச்சென்றது.

இங்ஙனம் நிகழுநாளில் பதினாறாண்டெல்லை குறுகியது, மருத வாணப் பெருந்தகையார் முன்னர் தாம் சிவசருமருக்கும், திரு வெண்காடருக்கும் அனுக்கிரகித்தபடி முத்திக்கு விடுக்குந் திரு வுள்ளமுடையராய ஒருநாள் பட்டினத்துப் பிள்ளையாரிடஞ்சென்று, ஐயரே, கலமேறிக் கடலோடி வியாபாரஞ் செய்து பலதுறை பார்த்துவரமிக்க ஆசை யொன்றுடையேன். தீவாந்தரங்களில் விலையுயர்ந்தமணி முதலிய பலசிறந்த பண்டங்கள் இருப்பதாகக் கேள்விப் படுகின்றேன் வணிகராகப் பிறந்தவர்கள் இளமைப் பருவத்தில் வருந்தியும் பொருளீட்டப்பத் தேடவேண்டுவதே கடனன்றோ? முதுமையில் என்ன செய்யக்கூடும். பொருளமிதப் பவில்லாவிடி லிம்மை மறுமைப்பயனை அடைவதெங்ஙனம் "ஒண் பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கெஃகதனிற் பொருளேனை யிரண்டுமொருங்கு" என்ப் பெரியருங் கூறினரோ "திரைகடலோடியுந் திரவியந் தேடு" என ஔவையாரும் கூறினரன்றோ ஆதலால் எனக்குக் கட்டளையானால் தீவாந்தர வியாபாரத்திற்குச் செல்லும் இந்நகர வாணிகமார்க்கரோடு யானுஞ்சென்று சின்னாளில் வருகிறேனென்றனர்.

அதுகேட்ட வெண்காடர், நெஞ்சு திடுக்கிட்டு, அண்ணலே! என்ன கூறினாய்! பிள்ளைக்கலி தீர்க்கவந்த பெருமானே! உன்னைப்பிரிந்து ஒருகணமேனும் உயிர்வாழவல்லேனோ! என்னினைந்து என்ன செய்யத்துணிந்தாய்? உனக்குப் பொருளென்ன தாழ்வாகவாவுள்ளது. வேண்டிய செல்வமிராமப் யிருக்கப் பல துன்பத்தோடு கடலோடி வருந்திப் பொருள்தேட வேண்டுமென்பதெனனை? எத்தனைகாலம் நீ எவ்வாறு செலவு செய்யினும் உலவாத்நிதிக்குவைய ல்பாசிப்பற்றிக் கிடக்கின்றனவே. நீ செல்வப்பிள்ளையாகி மனம் போனபடியுண்டுடுத் துலாவித்திரிவதை விட்டு இவ்வண்ணம் நெடுந்தூரம் போக்கு[illegible]மனைத்திவ்வாறு சொல்வது முறையன்று.

நீ இன்னும் முலைப்பால் மணம் நீங்காதவாயையுடைய சிறுமதலை இக்காலம் உண்டுடுத்தாடுந் தரத்தது. இதில் பொருள்தேட விரும் புவது முறையலல. அன்றியும் உன் அன்னையும மூததன்னையும உன் பிரிவுக்கஞ்சி உயிர் துறப்பாாகள. ஆதலாலிப்போ திவ்வெண ணத்தினை யொழிப்பாயாக ஐயனே! என்றுவருந்திச்சொல்லினர்.

அதுகேட்ட மருதப்பரும், சிறுநகைசெய்து, அப்பா! நீரு ரைத்தன முழுவதும உண்மையே உஙக ளனபுகரும் நிலைமைக் கும் தக்கதுவே கூறினீா. ஆயினும "மகனறந்தைக காற்று முதவி யிவனறந்தை யெனநோறறான் கொலலெனுஞ்சொல" எனறபெரி யோரா ஆணையை நிறைவேறறுவது என்கடன. ஆகவே அககடனை மனமொழி மெயயளவாகக கழிககவேணடுமாறுல பொருளினறி முடியாது. ஏனெனில், "தமபொருளென்பதமமககளவா பொருட நதம் வினையான வரும" என்பது சானறோா துணிபு. அனறியும் உலகியலறியாதவனுககுத் தருமவியலும கடவுளருளியலும உணா வதருமையாம. அவ்வுலகியலறிதலும பலதேயஞ் சென்று வருதல், அரசவைபுகுதல, கறறுணா புலவா கூட்டத திருத்தல, இஙகித நடபினரோடளவளாவலு மாகிய இநநானகுங கடைப பிடித்து நல்லொழுக்கத்தோடும ஒழுகினாலனறி முற்ற முடியாது. இதறகு இளமைப பருவமும ஒருகருவி. அறிவதறியும் பருவமாகிய இதுக டா்தால தருமநுணுககம் மெய்வாறு முதுமையில வெளிப்படும. முன் தசரதன் தன முதுமையில தவஞ்செயது வருநதி யீனற இரா மனிலககுவனெனனு மிளமைநதரை அரககரோடு போாசெயய வன்றோ விசுவாமித்திர முனிவாபின செலுததினா. நீா அறியாத தலலவே! குலவொழுககமும தொழிலுமாயினும, மககள காலையிற பயிலவதே சிறபபும பயனபடுவதும ஆம. "அகாலப்பயிரும் அன னையபபனிலலாப பிளளையும அலலற்படும" என்பதுலக வழகக மன்றோ? எலலாமுணாந்த நீரோ இஙஙனமாறுல ஏ்ன அன்னை மாா் பெண்பாலாா் அவாகள நிலைமை ஏதாகமாட்டாது. ஆதலால் என் விண்ணப்பத்தைப் பயனறறதாககாது கடடளை தரவேணடு மென்று கூறககேட்ட வெண்காடரு தமமுடைய மைந்தா்குறிப் பைத தெரிந்துகொண்டு, இனி இவா தடைககு அஞசாா் எனறு எண்ணி, ஆயின, ஐய! யானு முனனுடன் பொதுவல போதுக என்றோ்

அப்போது மருதவாணா அப்பா! யாமிருவரும் ஒருங்கே சென்றால் எம்மன்னையா நம் இருவா் பிரிவுமொருங்காற்று திறந் துப்டுவா். அல்லதூஉம என்முயற்சி ஊககமுறறுச் சிறவாது. ஆக வின் நீா் கருணைசெய்திருக்கதானே என்னன்னைமாரைக் காத்திடு

திர், யான்விரைவில் பொருள்தேடி வந்து சேர்கின்றே னெனச் சொல்லக்கேட்டு, பட்டினத்தையர் மறுக்கமாட்டாதவராய்ச் சிறுபோது மயங்கி நின்று பின்னொருவாறு தெளிந்து, அவர் வழிச்செலவுக்கும் வியாபாரத்திற்கும் வேண்டுங் கருவிகளையும் துணையையும் பண்டங்களையுங் குறைவறச் சேகரித்து, புதிய தொருகலத்தில் நிரப்பித்துக் கீகாமனொருவனை நியமித்து, நன்னாளில் வழிக்கொண்டு தாய், மூத்தவனை தந்தை சுற்றத்தினர் சிவனடியார் முதலிய பெரியோர் யாரையும் வணங்கி விடைபெற்றுக் கடற்றுறையடைந்தனர். அதற்கு முன்னமே அவ்வூரிலுள்ள வணிகமாக்கள் மைந்தரும் இவர்க்குத் தோழருமானவர்கள் யாவரும் வாணிபத்தை முன்னிட்டு அவ்வாறே பற்பல பண்டங் கொண்டு கலமேறவந்திருந்தவர்களோடு தாமும் ஏறிக்காற்றின் சாயலு மொத்துவரக் கலஞ் செலுத்தி மிகவிரைவிற் சென்றனர். இவர்கள் அன்னைதந்தையர் சுற்றமனைவரும் காவிரிப்பூம் பட்டினத்திற்றானே இவர்கட்கு ஊதியம் மிகப்பலகவென்று தத்தம் வழிபடுகடவுட் பராவி மைந்தர் வரவையெதிர்நோக்கி நின்றனர்.

மருதப்பெருந்தகை வாணிபத்திறனும் மீட்சியும்

இங்ஙன மிருக்கையில் பொருள்வளாக்க வாணிபங் குறித்துக் கலமேறிச் சென்றவர்களனைவரும் சிலநாளில் ஒருதீபத்தினையடைந்து அங்குத் தம்பாலுள்ள பண்டங்களை மாறிக்கொண்டு, வேறுபல நாடுநோக்கி, மருதவாண ரொழிய, மற்றையர் யாவரும் போயினர். மருதவாண ரவ்விடத்திற்றானே யிருந்துகொண்டு தம்பாலுள்ள பண்டங்களை மாறிப் பொருள்கொண்டு, கோயில், மண்டபம், மடம், சத்திரம், சாலை, நந்தவனம், சோலை, குளம், கூவல், தடாகம் முதலிய பலவகையறங்களையும் சிவகாருணியத்தாற் செய்து ஏழையர் முதலியயாவர்க்கும் உபகரித்துக்கொண்டு பல்புகழ் நிறுத்தி வந்தனர். இவ்வாறு சிலமாதங்கள் கழிந்தன.

அப்பால், வாணிபத்தின் பொருட்டு வேறுதீபநோக்கிச் சென்றிருந்த அவர் நண்பர்யாவரும் அந்தந்த தீவுகளினும் நாடுகளினு முள்ள பண்டங்களை மாறிய பொருள்விருத்தி செய்தூதிய மடைந்தவர்களாய்ச் சின்னாளிற்றானே மருதவாண ரிருந்தவிடம் வந்து சேர்ந்தவரைக்கண்டு முகமன் கூறிப் பிரிவாற்றாமை வினவி மகிழ்கொண்டாடி யிருந்து, அவர்வாணிபத் திறம் வினவினராக, அவரடைந்த விலாபம் வேறு பிறிதின்றி யிவர் பால்வரட்டிகளும், அவல் கடலையுமே யிருக்கக்கண்டு, திடுக்கிட்டு, ஐய, நீர் கொண்டுவந்த வியாவிலைப் பண்டங்களும் பெருவிலைத் திரவியங்களுமேதாயிற்று,

உம்மிடத்தில் உலர்ந்த எருக் குப்பலும், மிகுந்த அவல்கடலையுமே யிருக்கின்றனவே, என்ன காரியஞ் செய்தீர்? பட்டினத்துப் பிள்ளை யாரெனப் புகழ்பெற்ற திருவெண்காடர் தவப்பேறாய வந்த நீர் எமமனைவர்க்குந் தலைவராக விருக்கின்றீர், எமமினுஞ் சிறந்த அறி வாற்றலுடையீர், பொருள் வளாக்க எம்மையேவினீர், அருள் வளர்க்குங் கொடையாளராயினீ ரன்றி மருளவளாக்கு மாணபி லர்போல என்னபண்டம தேடிவைததுளளீா ஐயா! இது உமககு அடுக்குமே? நுநதையாா கேட்டால என்னினையாா? என்னுரையாா? நீர் என செயதீா எனசெயதீா? நும்மையாககெனனுரைப்பீா என று, மிகக பரிதாபததினாா யவாகள வினவ, மகாலிஙக மூாததியாகிய மருதவாண வளளலாா அவாகளை அருககிய நோககினறு சிறிது கடைககணிதது, அனபரே! நீவிரயாவரும எனபொருட்டேன் அவலப்படுகிறீர்கள்? எநதையாா, இககருமம் பற்றி நுஙகளை வினு வாதவகை நேருமாக. எனறனா.

அதனைககேட்ட தோழாகள யாவரும, என்னகாரணம் இது வரையு மிருநதவாறனறி நமது மருதவாணவளளல குணததான் மாறுமாக குறிப்பு வேறுபட்டின்றனா திருவெணகாடா தவப்ப யனிதுவேயோ? யாமென செயவது? போனதுபோக இனியாம னைவரு மிவரைபபிரிநது உறைவேமலலேம. எனறுதமமுள துணி ந்தனராகி யிருககையில அஙகு சிலநாளகழிய மீட்டுந தஙகள கா விரிபபூம பட்டினஞ் செலலயாவரும எணணித தததம மரககலஙக ளிறாம் தேடியபொருளையும பணடஙகளையு மேறறுவிததுததாமு மேறிக் காற்றின் வாயபபறிநது நாவாயோட்டி வருகையில, எல லாம் வல்ல மருதவாணப் பெருநதகை ஓர் திருவிளையாடலைக் கருதிததிடீரெனறோாபெருஙகாறறு மழைவரபபுரிநதுதிசைதபபிக கலஙகளோடசசெயவிததனா ஆகவே அபபெருமபியலுட சிககி யாவர் மனமுழுமையக் கப்பலிருட்சூழலுட் புகுநததாகப பலநாள திககுத் தோற்றாது அலைநது திரிகையில அவரவாகள சோதது வைததிருந்த வுணவுமுதலிய வுபகரணஙகள செலவழிநதுபோயக குளிரானமெலிநது அதனை நீககுவதற் கெரிதுருமபுமின்மையால மிகவருநதிப் பெருஙகவலை யடைநதவர்களாய, மஹாலிஙக மூாத திமானுகிய மருதப்பரிடம் வநது தோழமையா லினிய வாாததை கூறி, ஐயரே! உமமையனறி யித்தருணத்தில எமககார் திககு எம மனைவரையும் காப்பது உமதுகடன என்னெனில் பல்நாளாயககாற் றுமழையுட. சிககித திசைதப்பி யலைவதில காவிரிப்பூம படடினம் சேரும்வரையிலாவதாகத் தேடிவைததிருநத விறகு முதலிய வுபகரணங்கள்முழுவதும் செலவாய்விட்டன. இன்னம மழைவிட்

டபாடில்லை. யாம் எங்குளோமோ கலம் எத்திசை நோக்கிச் செல்கின்றதோ வொன்றுந் தெரியவில்லை. குளிரோவுயிருடலிற் றங்காவகை வாட்டுகின்றது. பிறகுமுதலியன விலைக்குக்கொள்ளவென்றாலும் கரைதுறை யாதொன்றுந் தோற்றவில்லை. என் செய்வோம். உம்மிடத்துள்ள வரட்டியையேனு மித்தருண மெங்களுக்குக் கொடுத்து உபகரிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். கேட்டீர்களோ! முனிவர்களே என்றுபமன்னியர் சொல்ல மேல் நடந்ததைக் கேட்க ஆவலுடைய அம்முனிவர்கள் அவ்வாசிரியரைவணங்கி அப்பால்நடந்ததைவினவக் கூறலாயினர்.

கேளும் முனிவர்களே! அன்பர்கள் வேண்டுதலுக்கு இரக்க முற்ற நமது மருதவள்ளல் அவர்களை நோக்கி, அன்பர்களே! நீங்கள் ஊரைச் சேர்ந்தவுடனே என்வரட்டியிடைக்கிடையாகக் கொடுத்தாற்போதும் என்று சொல்லி அதற்கவர்களிசைவு பத்திரமெழுதிப் பெற்றுக்கொண்டவ்வாறே நிறுத்துக்கொடுத்தனர். பின்பவர்கள் யாவருந் தத்தங்கலங்கட்குச் சென்று குளிர் பசி தணிந்து சுகமுற்று மருதப்பரை வாழ்த்தியிருந்தனர். அப்பால் மழையும்விட்டது; காற்றுந்தணிந்தது. யாவரும் திசை கண்டுபிடித்துக் கப்பலோட்டித் துறைமுகமறிந்து காவிரிப்பூம்பட்டினம் வந்து சுகமாகச்சேர்ந்தனர்.

## மருதப்பெருந்தகை ஊரடைந்தது.

இதற்குமுன்னே இவர்கள் பிரிவாற்றாமையால் வருத்தப்பட்டுப் பகலூணுமிரவுறக்கமுமின்றி ஏக்கங்கொண்டிருந்த அவ்வவர்கள் தாய்தந்தையருஞ் சுற்றத்தினரும் நண்பினரும் இச்செய்தி கேள்வியுற்றவளவிலே தங்கடங்களிட்ட தெய்வங்களை வாழ்த்தி வழிபட்டுக் காணிக்கை செலுத்தித் திருவிழாக்கொண்டாடினார்கள். திருவெண்காடரும் அவர் மனைவியும் துயரக்கடற்கரை காணாது உலகை மறந்து மருதவாணர் திருவுருவமொன்று தவிர மற்றொன்றும் புலப்பாடில்லாதவர்களாயிருந்தவர்கள், மருதையர் திருத்தோணி துறைமுகம்பற்றியமைவந்து சொன்னளவில், தம்மையறியா தெழுந்த களிப்பென்னும் ஊழித்தீப்பரந்து முன்னிவர்களை உமிழாது விழுங்கிக் கிடந்த துயரப் பெருங்கடலிருந்தவிடங் காணாதபடி வற்றச் செய்தது. அங்ஙனம் இன்ப மழை பொழிந்தது. இவர்கள் அங்கங்குளிர்ந்து ஐம்புலன் செழித்துத் தத்துவங்களெல்லாந் தலையெடுத்து அறிவும்பழுத்த வாறாயிற்று. உடனே திருவெண்காடர் தமது பண்டாரத்தைத் திறந்து ஏழைகள் கொள்ளவிடுத்து, தமக்குச் செய்திவந்து சொன்ன பேரனைவர்க்கும்

ஆண்ட ஆபரண நிதிக்குவைமுதலியன வெறுப்பக்கொடுத்து, தக்கார்க்குத்தானமிதப்பவளித்துச் சுற்றத்தினர், நண்பினர் முதலியோர்கட்கும உணடாட்டுச்சமைதது, தமது ஆன்மாாததமூாதிக்கும், திருவெண்காடுடையாாககும சங்கமே சுாருககும நைமிததிகத் திருவிழாக்கோளொடுபபிதது, அஙஙனே இல்லம புதுககி அணிசெய்விதது அடடமஙகலம அமைதது நகாகளிசொணடாட, யாவருந தம்மைப புடை சூழ்நதுவரக கடற்றுறைசென்று சிலரோடுபடகேறி, மருதையனாயழைததுவர நலலோரை நாடிக கப்பற்குச் சென்றனா. செலலும்போது, மருதவாணரோடு வாணிபத்திற்குச் சென்றோருளொருவன முனவநது இபபட்டினத்துப் பிள்ளைபாரோடு, ஐயா! நுமது திருககுமாரனா சிலநாளாயச் சிதத வியறகை வேறுபட்டனராகக கணடேம. ஆதலால இதனை உமககுக் குறிப்பிககவே முனவந்தேனென்று சொலலிபபோயினன். அதனைக் கேட்டவுடனே நெஞசு திடுககிட்டு உவகைமாறிச சற்றுக்கவலைகொணடனராய, எவவகையாயினும மகனவநதுசேர்நததுபோதும், மேலே விகற்பஙகளைசசீா செயது கொளவேனென னுந் துணிவாலொருவாறு தேறிக காலநதாழாது கலமபுககுத்தமமைநதனைத தழுவிககொளள, அவரும வழிபடடு நிறக, வெணகாடர் உச்சிமோநதனைதது ஆதரிததுச சாவதா எம்மயருகிருததிக் கொண்டு, பினபு, அககலததுள சிலவரட்டிகளும அவலமுதலிய சிலபண்டஙகளுந் தவிர வேறிலலாமை கண்டு, பிரமிதது, உடனசெனறோரொருவன வநது மருதவாணா சிததவிகறபததினராயினாரென்று சொனனதுண்மையேபோலும. நமசெலவன முககுறியுஞ் சிறிது வேறுபாடுறறுள்ளது. ஆயினும தேற விசாரிபபோமென்று, மெலல மகாலிஙகமூாததிமானை அழைததுககொணடுபடகிற் பிரவேசித்துக கரையை யடைநதோா மணிமாடததில மருதப்பெருமானையிருககப்பணணி, மெயககாப்பாளரை யமைததுக காககத் திட்டஞ் செய்து, மீட்டும மருதாசுவநத கலததிறகேகி, அஙகுள்ள சாக்குகளாகிய வரட்டி, அவல முதலியவற்றினையும், எனையபெட்டி கணக்குமுதலியவறறையுமெடுபபிதது வநதுமருதவாணரோடு சென்று வந்த வாணிகமாககளுடனிருநது சோதிக்கும்போது, அவர் பெட்டியில் ஒரு வரட்டியும ஓலையுமிருககககண்டு, முதலில் வரட்டிபெட்டியிலவா நிமிததமெனன? இதில ஓர் விசேடமிருக்கவேண்டுமென்றெணணி அதனை யுடைததுப் பார்க்கையில் அதனடுவே சூரியனொளிவிட்டெழுநதாற்போலும் மாணிக்கமொனறிருக்கக்கண்டு வியந்து, மற்றைய வரட்டிகளையும் சோதனைசெய்கையில் அவ்வாறே யெலலாவற்றுள்ளுமிருக்கவே வியப்பும்களிப்பும் அடஙகாதவராய்த் தம்மை மறந்து, தமமைந்தர் திறத

தையும் ஆற்றலையும் எண்ணியடங்காமகிழ்வோடுமற்றையவற்றை யும் சோதிக்கையில் அவல்கூட்டை முழுவதும் பொன்மணல் விரவியதாகவுமிருந்தன. ஓலையையெடுத்துப்பார்க்கையில் அது உடனசென்ற ஏனையவாணிகமாக்கள மருதவாணாபாற் பெற்றுக்கொண்ட வரட்டிக்காக, நகாசென்றவுடனே அவ்வரட்டியைக்கொடுக்கும்படியொப்புக்கொண்டெழுதிக்கொடுத்த பத்திரமாகவிருந்தது கண்டு, அவ்வாணிபமைந்தரைநோக்கி, இது நீவிர் எழுதிக்கொடுத்ததாமோவென அவாகள யாவரும் ஒப்புக்கொண்டு ஆம யாமெழுதித்தந்ததே என்றுகூறித்தமமுளவியப்பும அச்சமுமெய்தி மருதவாணா தரமறியாதுமயங்கிச சித்தவிகற்பங்கொண்டனனொன்றும், வாணிகமமுறையேயெசெய்யவறியாது, வறிதே வரட்டியும அவனும கொண்டுவைத்தானென்றும மயங்கி மோசம போனோமே! அடைமனழையில அவா பாலபெற்ற வரட்டிகளை நனகு சோதியாமல சாதாரணமானதெனறெண்ணி அடுப்பெரித்தொழிந்தோமே! அவர் பத்திர மெழுதிக்கொடுக்க வெனறபோதும யோசிக்காமற போனோமே! இப்போது திருவெண்காடா பத்திரப்படி வரட்டியைத் தரச்சொலவாராறல எனனசொலலவலலோம. உளவறியாது, மருதவாணா சித்த விகறபங்கொண்டாரொனறும் யாரோ அவாககுச் சொலலிவிட்டாாகள இனி அவா நமமை எனனவகையில் எண்ணுவாா? நாம அனைவரும அவனை வஞ்சிக்க முயற்சித்தவாகளாக வல்லவோ முடிந்தது. எனன நோந்தது? எனசெய்யக்கடவோமெனறு சிந்தித்துக்கொண்டிருந்தாாகள்.

பட்டினத்தார் மருதப்பிரானைக்காணுது வருந்துகை.

திருவெண்காடரோவெனறால தமக்குத்தமமகனா தேடித்தந்தமணிக்குவைநிதிக்குவைகளைக்கண்டு, களித்துமபினவராய் அங்ஙனே ஒடித்தமமகனைத் தழுவ ஆவலகொண்டு அக்காவன் மாளிகைக்குட் சென்றாா. அஙகே மருதபபெருமானைக் காணுமல் திடுக்கிட்டு மெய்காப்பாளரை வினவ, அவாகள, எமமுடையீா! நீரிட்ட கட்டளைப்படியே காத்திருந்தனம, ஆயினும் தேவரீா் திருமகனாா் சென்ற வழியாமறியோமெனறு கலங்கினனறனர். திருவெண்காடர், மனத்துளளும ஓர் கலக்கந்தோனற இனி என்செய்கேன்! நான் எனமகனுண்மையுந் திறலுமறியாது தவறிழைத்தேனே! எவ்வாறினியவனைக் காணபேன! என்னருந்தியதோ அவன் திருவுள்ளம? தந்தை நமமை இழிவெண்ணினனொன்று எண்ணுமோ? அறிவிலோா சொற்கேட்டையா அவமதித்தனனோ எனச்சிந்திக்குமோ? என னுயிர்க்கிழவனென்னையே சென்னைச் சுடப்பண்ணிமறைந்தனனே! தவறு தவறு!! ஆயாதுசெய்யுங்காரியம ஓயாத்துயரமாமன்றோ. "பதறாத காரியஞ் சிதறாது" என்னும் பழ

மொழியையுமறந்தேனே என்றிப்படி நெடுநேரஞ் சிந்தித்து, வேறோர் ஞாபகந் தோன்ற நெடுநாட்பிரிந்தபிரிவாற்றாமையால்தாயமுதலியோர்களைப் பார்க்கவென்றாலொருகால் போயிருக்கினும் இருக்கும்; ஆதலால் மனைபுகுந்து பார்ப்போமென்று விரைவோடும்போயினர். அங்கு பெருங் களிப்பிலிருக்குந்தம்மனைவி தாய்முகம்நோக்கிச் சிறிது மனத்துயரமாறினவராய்த் தம் மகனாரவரைவை விசாரித்தனர். அப்போதவ்விருவரும் இப்போதே நம்து சிறுவனவந்துண்டு இதோ புறத்திறசென்றான். எமக்கவன் வாணிபத்திறம்றேடித்தந்து பூசித்தளித்த ஆடை பூண்மணியிவைவையெனக்காட்டக் கண்டும், ஒரு சமற்றினரோயன்றித் தம் மனத்துட்டோன்றிய கலக்கமுற்று மொழிந்தவரல்லர். ஆகவே மீட்டும் மருதவாணனை ஒருக்கால் பார்க்கவேண்டுமென்னும் அவாத் தூண்டிக்கொண்டேயிருப்பவெழுந்தங்குமிங்குமோடித்தேடி நகரமுற்றும் நாடுவாராயினார். நாடியும் எங்குங் காணாமையால் பெருங்கலக்கப்பட்டவராய் மறுபடியுந் தம்மாளிகைவந்து கிலேசப்பட்டுக்கொண்டிருந்தனர்.

மருதப்பிரானுருவுருக்கரந்ததும்சிவசருமாமுத்திபெற்றதும்.

இவரிங்ஙனமாக மருதவாணரோ, இடை மருதில் தம்மை அன்போடு படவுருவத்துப் பூசித்து நேசித்திருந்த சிவசருமா பாவனைமுதிர்ந்து சிவயோகங்கூட, அவர் குடும்பத்தினரோடும் இரவுபகலற்ற சிவயோக சமாதியிலிருக்கையில், அவர்க்குக் கூறியிருந்த பதினொருண்டும் நிரம்பியதால் சோதிப்பிழம்பாக வெளிப்பட்ட சோதியில் அச்சிவசருமனையும் அவர் குடும்பத்தினரையும் ஐயிக்கம் பண்ணிக்கொண்டு தாம் தம்முடைய மூலலிங்கமூர்த்தியாகிய மஹாலிங்கத்துட்பிரிவறக் கலந்தெழுந்தருளி வீற்றிருந்தனர். கேளும் முனிவர்களே! கடவுள் "பந்தமும் வீடும் படைப்போனன்றோ" என்ற முதுமொழி உண்மையாயிற்று என்றுபமன்னிய முனிவர் கூறினர்.

பட்டினத்தடிகள் திருவருள்பெற்றது.

அப்பால் நடந்த வரலாறு கூறுமென முனிவர்கள் வினவ உபமன்னிய பகவான் சொல்லலாயினர் முனிவர்களே! இவ்வாறு திருவெண்காடர் கிலேசப்பட்டு உண்டி வெறுத்தவராய்ச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அவர் மனைவியார் ஒரு சிறு பெட்டியைத் தந்து அவர் முன்வைத்து இதனைத் தேவரீர் வந்தவுடனே கொடுக்கும்படி நமதுமைந்தன்றந்துபோயினன் என்றார், உடனே பட்டினத்தார்மைந்தனறந்ததெனவேபேரவலோடெடுத்துத்திறந்து பார்த்தார். அதில் ஓர்காதற்றவூசியுமன்றி ஓலைநறுக்குமிருக்கக்கண்டுமிருந்த ஆச்சரியமுடையவராய் அவ்வோலையைப்பார்க்கஅத

னுள் "காதற்றவூசியும் வாராது காணுங்கடைவழிக்கே" என்றெ ழுதியிருந்தது. ஆயின் இவர் முன்னரே செய்தவக்குறை முக்கடி வந்த மூர்த்தியாதலானு மருட்வாணப் பெருந்தகையார் திருநோக் கம், பரிசம், பாவனை, வார்த்தை முதலியவற்றால் மனம் முன்ன மே பக்குவப்பட்டிருந்த தாக, அவ்வளவிற்றானே இவரோடு ஒருமைப்பட்டிருந்த இருவினைக்கட்டமவே, மும்மலமும் பரிபாக பட்டு, நாற்கரணமுஞ் சுத்தமாய், ஐந்துபுலனுமொரு நெறித்தா கி, ஆறுபகையுமற்று, எழுபிறப்புங் காலற, எண்வகைச் சித்தியும் எதிரினறு பணிகேட்ப, ஒன்பது நிலையுந்தாண்டிப், பத்துத்திசை யும் சிவானந்தப் பரந்தவெள்ளமாகவெழுந்து கவர, அதனுண் மூழ்கித்தேடும் பொருள் வேறொன்றின்றிக் கவலையற்றாராதலும் அருள்வாணி முன்னிற்கவே

"பட்டைக்கிழித்துப்பருவூசிதன்னைப்பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென் மொய்குழலாள்கையின் முன்கொடுத்துக்
கட்டியிருந்தகனமாயசகாரிதனகாமமெல்லாம
விட்டுப்பிரியவென்றோவிங்ஙனேசிவன்மீண்டதுவே" எ-ம.

"சூதுற்றகொங்கையுமாதர்கலவியுஞ்சூழ்பொருளும்
போதுற்றபூசனுக்கென்செயலாஞ்செய்தபுண்ணியத்தால்
தீதற்றமன்னவன்சிந்தையினின்றுதெளிவதற்கோ
காதற்றவூசியைத்தந்துவிட்டானென்றன்கைதனிலே"

என்றுசொல்லி இருவகைப்பற்றுமற்றவராய உபசாந்தமபிற ந்த சித்தவிருத்தியுடன் உலகத்தினையருக்கிய நோக்கால் நோக்கி, "தாம் பெற்ற பேறிவ்வுலகம் பெறுக" என்பது சிவமெய்ஞ்ஞானி களது தயாவினியல்பாதலால் உலகத்தாருய்யும்பொருட்டு, தமது நெஞ்சினை முன்னிலையாக்கி யுணர்த்துவார்.

"வாதுற்றதிண்புயரண்ணலையாமலாபபத்ததைப்
போதுமறப்போதும்புகலுநெஞ்சேயிந்தப்பூதலத்திற்
றீதுற்றசெல்வமென்றேடிப்புதைத்ததிரவியமென்
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே" எனவும்.

"வேதத்தினுட்பொருண் மணஞ்சை மங்கையை விட்டுவிட்ப
போதித்தவன்மொழி கேட்டிலையோ செய்தபுண்ணியத்தா
லாதித்தன்சந்திரன்போலே வெளிச்சமதாமபொழுது
காதற்றவூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே. எனவும்,

உபநிடதப்பொருளவாகிய திருப்பாடலருளிச்செய்து, தாயா ரை நோக்கி, அம்மே! உமது தவஞ்சிறந்தது நீர் யாதொன்றற்கும் வருந்தாதிரும்., உம்மை ஒருகணமும் பிரியேன். யான் குரு பரன் ஆணைவழியினிற்பவனாயினேன். என அன்னையாருமஅகமகிழ்

ப்பறிந்து, ஐய! எனக்கிறுதிநாள் சமீபித்திருப்பதால் என்னீமக்க டனைக் கழித்தாவது செல்லலாகாதாவென, அவ்வாறேயாக, என்று சொல்லி, எதிரினின்ற தமது ஆத்தநண்பரும் தலைமைக்காரியக்காரருமாகிய சேந்தனை நோக்கியிப்பொருண்முழுவதும் இவ்வுலகிற் பல்லாருங்கொள்ளப் புரிவீரென்றுசொல்லி, சூறைவிடப்பணித்து விட்டு, தொடர்பொன்றுமில்லாராய்ப் புறப்பட்டனர். அக்காலத்திலவர்திருமேனிமேலாடைகழன்றிருந்ததமையுமுணர்ந்திலர். அதுகண்டு அவர்மனைவியார் சிவகலையம்மையாரென்று வணங்கியெம்பெருமானே! அடிமைக்குத்தேவரீரைவிட்டோர்கதியில்லையே! அடியேனுமுடன்வருகின்றேனென என்றுபணிந்துகூற,பெண்ணே! யாவர்க்குங் கதியாவார் சிவபெருமானார் ஆயினும் யான் குருபரன் திருவாணைவழிநிற்பேனாயினேன் இனி இவ்வுலக முயற்சியில் உழல்வேனல்லேன், நீயோ! என்னோடு தொடர்ந்துவருமாற்றலில்லாதவளாதலால் சிவநேசம் அடியார்நேசமறவாமல் இங்கிருந்து திருவடியடைதி. என்னுனை மறப்பதுன் கடனல்லவென்றுசொல்லி அவரைநிறுத்தி, எதிர்போற்சென்று ஊர்ப்பொது மண்டபமடைந்திருந்தார் அப்போது, அவ்வூரிலுள்ள முதியோர், நட்பினர், சுற்றத்தினர், அயலவர் முதலிய யாவருஞ்செய்தியறிந்து வந்து கூடி அவரைக்கண்டு, ஐயோ! என்செய்தீர், நீர் எங்கள் முதலியல்லீரோ? என்னகுறையுள்ளதென்றிப் பரதேசிக்கோலங்கொண்டீர்? இனி எமக்கு ஆதரவாவார் யாவர் என்றிரங்கினார் அதுகேட்டு வெண்காட்டையர் அவர்களைச்சுட்டி நோக்காமே பராமுகமாக நோக்கித்திருவருளைச் சிந்தித்து,

மனையாளுமக்களும் வாழ்வுந்தனமுந் தவாசன மட்டே
யினமானசுற்றமயானமட்டேவழிக்கேதுதுணை
தினையாமளவெள்ளளவாகிலுமுன்புசெய்ததவந்
தனையாளவென்றும்பரலோகஞ்சித்திக்குஞ்சத்தியமே.

அத்தமும் வாழ்வு மகத்துமட்டே விழியம்பொழுகம்
மெத்தியமாதருமவீதிமட்டேவிம்மிவிம்மியிரு
க்கைத்தலமேல்வைத்தழுமைந்தருஞ்சுடுகாடுமட்டே
பற்றித்தொடருமிருவினைப்புண்ணியபாவமுமே.

எரியெனக்கென்னும்புழுவோவெனக்கென்னுமிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும்பருந்தோவெனக்கெனுந்தான்புசிக்க
நரியெனக்கென்னும்புன்னாயெனக்கென்னுமிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தேனிதனாலென்னபேறெனக்கே.

அண்ணற்வீதியர் சிறுபாகு மணிபடையோர்.
கண்ணெருநாலொன்பதாமவரேவலுநண்ணுமிவ்வூர்

உண்ணென்பசிக்குமடைப்பள்ளியானைக்குமுமெல்லா
மெண்ணிலிகாலமவமேவிடுத்தனமெண்ணரிதே.

என்று நிலையாமையைப்பற்றிக்கூறிப்பின் தமது நெஞ்சை முன்னிலையாக்கி அவர்களுக்குமுன்னிலைப்புறமொழியாக

மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டென்று மகிழ்வதெல்லாம்
கேடுண்டெனும்படிகேட்டுவிட்டோமினிக்கேண்மனமே
யோடுண்டுகந்தையுண்டுள்ளேயெழுத்தைந்துமோதவுண்டு
தோடுண்டகண்டனடியார்நமக்குத்துணையுமுண்டே.

ஆறுண்டு தோப்புண்டணிவீதி யம்பலந்தானுமுண்டு
நீறுண்டுகந்தைநெடுங்கோவணமுண்டுநித்தநித்த
மாறுண்டுலாவிமயக்குநெஞ்சேமனந்தோறுஞ்சென்று
சோறுண்டுதூங்கிப்பின்சும்மாவிருக்கச்சுகமுமுண்டே.

உடுக்கக்கவிக்கக் குளிர்காற்று வெயிலுடங்கி வந்தா
றடுக்கப்பழையவொருவேட்டியுண்டுசுகமுழுதும்
படுக்கப்புறந்திண்ணையெங்கெங்குமுண்டுபசித்துவந்தாற்
கொடுக்கச்சிவனுண்டுநெஞ்சேநமக்குக்குறைவில்லையே.

நாட்டமென்றேயிருசற் குருபாதத்தை நம்புபொம்ம
லாட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே.

ஒன்றென்றிருதெய்வமுண்டென்றிருவுயர் செல்வமெல்லா
மன்றென்றிருபசித்தோர்முகம்பார்நல்லறமுநட்பு
நன்றென்றிருநடுநீங்காமலேநமக்கிட்டபடி
யென்றென்றிருமனமேயுனக்கேயுபதேசமிதே.

என்று மெய்த்தக்க தியானந்தன உறுதியைக்கூறியபின் முன்னிலைப்படுத்தி,

ஊரீருமக்கோருபதேசங்கேளு முடம்படங்கப்
போரீர்சமணைக்கழுவேற்றுநீறைப்புறந்திண்ணையிற்
சாரீரனந்தலைச்சுற்றத்தைநீங்கிச்சங்கைக்க
வேரீருமக்கவாதாமேதருவரிணையடியே

கண்ணுண்டுகாணக் கருத்துண்டு நோக்கக்கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச்செவியுண்டு கேட்கப் பல்பச்சிலையா
லெண்ணுண்டுசாத்த வெதிர்நிற்க வீசனிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோ கெடுவீரிந்த மானிடமே.

என்ற திருப்பாட்டுகளை இதோபதேசமாகவருளிச்செய்து, வேறு, வாய் பேசாதுமௌனத்திருந்தனர். இவ்வாறு இவர் கூறியதை

க் கேட்டவர்கள் வெருவி நாணமுற்று இந்த நிலை யாம் பெறுவது கிடக்க, உணர்வதும் அருமையென்றுளங்கூசிச் சென்றனர்.

அரசன சேந்தனாரைச்சிறைசெய்ததும
திருவெணகாடரைக்கண்டதும.

அப்பால் இவா துறவுபூண்டதும இவரது செல்வமுற்றும் ஊரச்சூறை கொள்ளவிடப்பட்டதுங கேளவியுற்ற அநநாட்டர சனவநது நிதியமைகொளளையாகாதவண்ணந்தடுத்து, திருவெண் காட்டடிகள தமககைமைநதனாத தருவித்து இவருரிமைமுதலிய ன கொடுததங்கு இருககசசெயது, முறைபபடியக குடும்பப பாதுகாப்பினுககுவேணடுமபொருள்தவிர வேனையவற்றைத தன து பண்டாரததுச சோபபிததுத தருமசாலைமுதலியவறறிற்குப யோகிக்கக கட்டளையிட்டான.

அப்போது, திருவெண்காட்டடிகள நணபருந தலைமை காரியக் காரருமாயிருந்தசேநதனாரது உண்மைநிலைமையை அறியாத அவவ ரசன அவரைநோககிச சேந்தனாரே! நமது திருவெணகாடா செல வமனைத்தையும் கடந்தனவென்று பலருஞ்சொலலக கேளவியுற்றிருககி னறேமாகையாலினறு மெஙகெஙகுளளதெனக கேடகச் சேநத னார் அரசனைநோககி, மஹாராஜனே! அவர் நிதியுள்ளனமுழுவ தும காட்டிவிட்டேனாக இனியொன்றுமறியேனெனறு கூற, இறை மகன அவா சொலலிலஐயங கொணடவனாயத தன் பரிசனாகளை நோககி இவர் உண்மைகூறி, வெணகாடா நிதி நிலைகளையெமக்குக காட்டுமவரையில இவரைச் சிறைசெயமின என்று கட்டளையிட்டு ததவததைத தனைசெயதாறபோலுந தனைசெயது சிறையிலிட்டு, இவர்காணியிடம பொருள முழுவதும் வெண்காடர் பொருளெ னறு கவர்நதான. சேந்தனாரோ சிவம பழுதத நெஞசத்துப் பத் திவடிவினர்; யாதோரவஞசமுமறியாதவா.ஆயினும அவாககிததுன பநோநத காரணம, வெண்காடராகிய அவா ஆசிரியா தமபொருளைச்சூறையிடப்பணித்தகாலையில் அறததின்வழியே அரிதிற்றேடிய விப்பொருளை சூறையிடற்பாலவோவென றுநெஞசிலெணணினா். இங்ஙனம குருவாகிய தனமேல்விசாரமபிறநதகுற்றம இவவா று துனபவிளைவுக்கேதுவாயிற்று. உடனே அசசேநதனார மனைவி யார் அரசனசோன் முறைககஞ்சித தமது ஒரே பேறாகிய ஆண் மகவினையெடுத்துககொண்டு வேற்றூரிற சென்றுகமபுநிலைதவறாது கூலிவேலையாற்சீவனஞ் செய்திருந்தனர். இஃதிங்ஙனமிருகக.

அரசன் பின்புபட்டினததுப்பெருந்தகையாரைக்காணவேண் டிவந்து ஊர்ப்பொது மண்டபமடைந்து அங்கு சிவஞான நிட் டையில் வீற்றிருக்கும் எமது வெண்காட்டடிகளைநோக்கி, ஐயரே! நீர் இப்பரதேசி கோலங்கொண்டடைந்த விசேடப்பேறென்னை

யென்று வினவ, அக்கோமகனை நோக்கி "நீர்நிற்க நாமிருக்க" என்றார் அதுகேட்ட வேந்தன், நாணமுற்றுச்சென்றான்.

சிவயோகசாதனையிலிருத்தல்.

அப்பாலடிகளாரும் பசிவந்தபோது ஊரிற்சென் றிருகையேற்றுண்டுதமது நாட்டமுழுவதும் சிவனடிசகண்ணதாக மாறுபாடின்றி நின்று சிவயோகசமாதியில சகசவனுபவம் பிறக்க, யாதொருபொருளினும் பற்றுவிடுதி யிரண்டுமற்ற திறமே மனைவியாகவும், பலவுயிர்களுமமைந்தராகவும, சிவனடியவர்களே சுற்றத்தினராகவும, அறியாமையே பகையாகவும, அன்பே பொருளாகவும், அருளேயிடமாகவும, தத்துவங்களேயேவலாகவும, சாந்தமேசாாபாகவும, தவமே முயற்சியாகவும, தன்னிழப்பே போகமாகவும், பிச்சையூணும நிலப்பாயலுங்கொண்டு நிரதிசயானந்தத்திருந்தனா.

இந்நிலைமை யறியாத அவ்வூர் வாழ்கின்ற விவர்சுற்றத்தினர் இவரது பிச்சையூணும புறந்திணணைக கிடக்கையுங்கண்டு, இவர் செயகையால தம மரபுக்குததாழவு நோந்ததாக வெணணி, அவ்வூரிற் பிச்சையிடாவண்ணம தடை செயதனா. அப்போது, பட்டினத்தடிகளிவர்களிடத திரக்கமுற்று உணமையறிவுண்டாமபடி பசுமேயசகுஞ் சிறுவருடனுடியும, குப்பைமேற புரணடும, தீறு நிலத்திற் றமது காலிற் பழுதைசுற்றிப் பற்றி யீர்க்குமபடி சிறுவ்வைையேவியும், பிசசரொன நாட்டவா பழித்துரைக்குமபடி குடியிருந்த மனைக்குக கொளளிவைப்போம என்று சொலலிச சரிததும வந்தனர்.

திருவெண்காடாககுத்தமக்கையார நஞ்சிட்டதும், ஊாபற்றி யெரிந்ததும, தணிந்ததும, திருவெண்காடு சேர்ந்ததும.

அதுகணடவூா முன்பிறந்தாராமானமபொறாதவராயஇவரிறக்கினு நன்றுமெனககருதி விடங்கலந்த ஓட்டபபஞ்சமைத்து இவருணணக் கொடுப்பித்தனா. அதனைத் திருவெண்காடர்திருவருளாலறிந்து, "தன வினைதன்னைச சுடும ஓட்டபப மூட்டைச்சுடும" என்று சொலலி அந்தமகையார வாழ மனையிறப்பிற்செருகவும் தீப்பற்றி ஒருவராலுந தணிககமுடியாது பிராணிகட்குஞ் சேதம் வாாதபடி யூர்முற்றுஞ் சுட்டது. அதுகண்ட யாவரும் அஞ்சிப் பட்டினத்தடிகள் திருவடிகளை வணங்கி முறையிட, இரக்கமுற்று அத்தீயினைத (தங்களைக்கேட்டுப் பிறந்திறந்திலம்) எனனும செய்யுளைப்பாடித தணிததருளித் திருவெண்காட்டை யடைந்து சிவபெருமானைத தரிசிதது (விளககினை வையமுய்ய)* என்றது முதலிய பலதமிழச செமபாடல்பாடிபலியேற்றுண்டுஅங்கு"குடியிருந்த மனைக்குக கொளளி வைக்கவேண்டும" என்று சொல்லி எழுந்தருளி யிருந்தனா.

## திருவெண்காடர் தாயாருக்குத் தகனக்கிரியை செய்தது.

அங்ஙனம் இருக்கையில் காவிரிப்பூம் பட்டினத்தில் இவருடைய அன்னையார் வாழ்நாள் குறுகித் தேகவியோகமுற்றனராக, சுற்றத்தினர் வழக்கப்படி யீமக்கடன் கழிக்க மயானத்திற் சேர்த்தனர். திருவெண்காட்டிருந்த பட்டினத்தடிகள் அதனைத் திருவருளானை யாலுணர்ந்து பெருமான் கட்டளைப்படி தாம் தம்முடைய அன்னைக்குச் சொல்லிய வண்ணம் முடிக்கவெண்ணிப் புறப்பட்டுவந்து காவிரிப்பூம்பட்டினத்து மயானவெல்லை யடைந்தவளவில் சுற்றத்தினர் வெருண்டொதுங்கவே தாம் அருகுசென்று, அவர்களடுக்கிவைத்த சிதையைத் தள்ளி வாழைப்பட்டையாற் சிதையடுக்கி அதன் மேலன்னையைக் கிடத்தி

வெண்பா

ஐயிரண்டு திங்களா யங்கமெலா நொந்துபெற்றுப்
பையலென்றபோதே பரிந்தெடுத்துச் - செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
யெப்பிறப்பிற் காண்பே னினி. (௧)

முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே
யந்திபகலாச் சிவனையாதரித்துத் - தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார்தமக்கோ
வெரியத் தழன்மூட்டுவேன். (௨)

வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோண்மேலுங்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து - முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டுவேன். (௩)

நொந்து சுமந்துபெற்று நோவாமலேந்திமுலை
தந்து வளர்த்தெடுத்துத் தாழாமே - யந்திபகல்
கையிலே கொண்டென்னைக் காப்பாற்றுந் தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டுவேன் (௪)

அரிசியோ நானிடுவே னாத்தாடன் கர்
வரிசையிட்டுப் பார்த்து மகிழாமல் - உருசியுள்ள
தேனே யமிர்தமே செல்வத் திரவியப்பூ
மானே யெனவழைத்த வாய்க்கு (௫)

அள்ளியிடுவ தரிசியோ தாய்தலைமேற்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமன் - மெள்ள
முகமேன் முகம்வைத்து முத்தாடி யென்றன்
மகனே யெனவழைத்த வாய்க்கு. (௬)

விருத்தம்.

முன்னையிட்டதீ முப்புரத்திலே
பின்னையிட்டதீ தென்னிலங்கையி
லன்னையிட்டதீ யடிவயிற்றிலே
யானுமிட்டதீ மூள்கமூள்கவே. (௭)

வெண்பா

வேகுதே தீயதனில் வெந்துபொடி சாம்ப
லாகுதே பாவியேனையகோ — மாகக்
குருவிபறவாமற் கோதாட்டி யென்னைக்
கருதிவளர்த்தெடுத்த கை. (௮)

வெந்தாளோ சோணகிரி வித்தகா நின்பதத்தில்
வந்தாளோ வென்னைமறந்தாளோ — சந்ததமு
முன்னையே நோக்கியுகந்து வரங்கிடந்தென்
றன்னையே யீன்றெடுத்த தாய். (௯)

வீற்றிருந்தா ளன்னைவீதிதனி லிருந்தா
ணேற்றிருந்தா ளின்றுவெந்து நீறானாள் — பாற்றெளிக்க
வெல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காம
லெல்லாஞ் சிவமயமே யாம். (௰)

என்று செந்தமிழ்பாடி உலகர்போலச் சடாக்கினியாற் சடாத்துமத்தை ஞானாக்கினியால் தகனஞ்செய்து, அவரைச் சிவனடி நீழல் கூடும்படி தியான சமாதியால் அந்தியேஷ்டி நிறைவேற்றி, அங்ஙனே புறப்பட்டார் புறப்பட்டவர்,

பின்பு திருவிடைமருதூ ரடைந்தது.

மென்றுவிழுங்கிவிடாயடக்கிக்கந்தேட
லென்றுவிடியுமெனக்கேகோவே-நன்றி
கருதார்புரமூன்றுங்கட்டழலாற்செற்ற
மருதாவுன்சந்நிதிக்கேவந்து.

என்று திருவெண்பா வோதித் திருவிடை மருதூர் சென்றடைந்தனர் அங்கே இவர் வரவுணர்ந்த சிவனடியார் எதிர்கொண்டு வணங்க, அவர்களைத் தாமும் வணங்கிப் பெருமான் றிருவாலயத்தையடைந்து வலம்வந்து பன்முறை பணிந்து எதிர்நின்று மனமுருக வன்புபெருகி யுடல் குழைந்து என்பு நெக்குவிட்டு வியர்வெழுந்து, கண்ணீராறாக மடைதிறந்துபாய, நாத்தழுதழுக்க வாயாரப்பாடுவாராய்,

"தெய்வத்தாமரைச்செவ்விதினமலர்ந்து"

என்று விணைக்குற ளாசிரியமுதலாக வெடுத்துத் திரு மும்மணிக் கோவைபாடிப் புறம்போந்து மனைகடோறும் பலியேற்றுண்டு கோபுரத் திருவாயில்குடியாகக்கொண்டு சிவபோகசாதனையில்வீற் றிருந்தனர்.

அப்பால் ஒருதினத்தில் இடைமருதுடையார் அவர் துன்னவில் அவ்வூர்க்காவலன்போற் றோன்றிப் புறத்திண்ணையிற்கிடக்கும் திருவெண்காடர் பால்வந்து கைக்கோலால் நிலத்தூன்றத் தாக்கித் திருவடியாற்றீண்டி யுணர்த்தி நீ! யாரென்னும், அவர் ஊர்மெய்க் காவல்! யானுவான் தோலோ, நரம்போ, தசையோ, உரோமமோ, எலும்போ, உதிரமோ, மூளையோ, மூச்சோ, மனமோ யாதோவறியேன் கலங்குறுகின்ற நெஞ்சக்கவலை யொழிந்திறங்காமேனன் என்றனர். அங்ஙனே ஆளுடைய பெருமான் மறைந்தருள, வந்தவர் இறைவனென்றுணர்ந்து ஆராமைமேற்கொண்டன்பாற் கரைந்துருகியழுது தொழுது அவர்நின்ற நிலத்து அச்சுவடடினைக் கண்ணொற்றிமார் பணைத்துப்பொடி முடிக்கணிந்து பன்னிப்பரவியிருந்தார் இருப்பவர் ஒருநாள் நீர் விடாயப்பட்டெங்குங் குடிநீர்பெறாது மருதையப்பரைப்பாடிப் பின்னுடம்பை யுருவருத்துக் கரும்பிடுங்கழனியிலே யீரக்கப்பண்ணிப் பறுப்புறவித்து ஓர்புறத் திண்ணையிற் படுத்துறங்கினார். அப்போது மருதீசர் அவர் கனவிற்றோன்றி ஐய! வெண்காட! இனிநமது திருப்பதிகடோறுஞ்சென்று பாடுதியென்று கட்டளையிட்டருள, உடனே திருக்கண்விழித்து அக்கட்டளையுணர்ந்து உலகத்துயிர்கள் பிழைக்கும் வண்ணம் பலசமயப்பிணக்குகளற, அச்சமயபேதங்களெல்லாம் ஆன்மாக்களுக்கு வினையளவாக வறிவூட்டிமுடிவிற் பக்குவத்திலவ்வான்மாக்களைத்தரவேண்டிப்பெருமானுமது ஆறுதிருமுகத்துநின்றுந்தோற்றுவித்தமையும், அவற்றின் முடிபும், பயனும், விளங்கக்காட்டிமேலுண்மையுபதேச நெறியையுமுணரப் பலதமிழ்ச்செம்பாடலைப் பாடியருளி, மருதவனத்தையர் சந்நிதியடைந்து பலகாலும் விழுந்து பணிந்தெழுந்து கோயில்வலங் கொண்டு புறத்தணைந்தன்பிற் கரைந்துருகியாடிப்பாடிப் பிரியாவிடைகொண்டுபுறப்பட்டுத் திருக்குடமூக்கு, கீழ்க்கோட்டம், சாரோணம், நாகேச்சுரம், குரங்காடுதுறை, மாயூரம், நனிபள்ளி, வலம்புரம், ஆக்கூர், கடவூர், தருமபுரம், சிவபுரம், வாஞ்சியம், புகலூர், செங்காட்டங்குடி, மருகல் முதலிய திருப்பதிகளை வணங்கித் திருவாரூர்க்குச் சென்று அடியவர் எதிர்கொள்ள வணங்கியுள்புகுந்து திருவீதி வலம்வந்து கோபுர வாயிலைப்பணிந்து பூங்கோயிலுடையாரையும் வீதிவி

டங்கப்பெருமானையும் பலகாற்றொழுது பாடிப்பிச்சையேற்று வீற்றிருந்தார்.

## திருவாரூரில் இறந்தவனை யெழுப்பியது.

இங்ஙனம் அத்திருவாரூரில் இருக்கும் நாளிலே, மிகுந்த பக்திமானான சிறீவனொருவன் பூர்வ புண்ணியமுடைமையால் எமது திருவெண்காட்டடிகள்பால் பேரன்பும் பக்தியுஞ் செய்து காலந்தவறாது திருவமுது முதலியவற்றாலுபசரித்து இரவும்பகலும் பிரியானுகிதத்தொண்டுசெய்து வருகையில், இச்சிறுவன்றாய்க்கொரு மகனாக, இவன்றந்தையோடு பிறந்த நல்லத்தையொருத்தியொரே பெண்மகப் பேறுடையவளாய் வேறுதிக்கின்மையால் அப்பெண்ணையிச்சிறுவனுக்கே கொடுத்துத் தமையன் குடியுந் தன்குடியும் விளங்கப்பண்ண வேண்டுமென்னுங் கருத்தினளாய் அவன்றாய்க்குணர்த்த, அவள் அதனை மகனுக்குணர்த்த அச்சிறுவன் தற்கிணங்கானாய் நிற்கக்கண்ட அவ்விருமுதுகுரத்தியரும் வருந்தித் தங்குறையைப் பட்டினத்துப்பிள்ளையார்பால் விண்ணப்பித்து வருந்துகையில், ஐயா அவர்கள் முறைப்பாட்டினுக்கிரங்கி, மேல்நடக்குங் கருமங்கருதி யிச்சிறுவனை நோக்கி, ஐயா! நின்றாய் அதனைத் யிவர்கள் குறையை ஒழித்தி இறைவன் றிருவருளாங்கா லுன்பரி லாம். என் சொல்லைக்கடவாது கைப்பிடித்தி என்று கட்டளையிட்டருளினார். அதுகேட்ட அச்சிறுவன் அஞ்சி, ஆளுடைய அடிகளைவணங்கி, எம்பெருமானிரே! தேவரீர் திருவடியைப்பிரியாதுபணி செய்து கிடக்கவெண்ணினேனுக்கு ஊழ்முறை யிங்ஙன மிருந்தபடிபோலுந் தேவரீர் இவ்வாறு திருவுள்ளப்பாங்காய்க் கட்டளையிட்ட திறமென்செய்யக்கடவேன். ஆயினும், எம்பெருமானே! தேவரீர் அங்ஙனம் மணம்புணருங்கால் வந்தருளி ஆசீர்வதித்துய்யக்கொண்டருளகவென்று வணங்கி விண்ணப்பித்தான். அடிகளும் அங்ஙனமாகவென்று அனுக்கிரகித்துவிடைகொடுத்தனுப்பியருளினார்.

அங்ஙனே அவன்றாயும் அத்தையும் களிப்போடும் அழைத்துச்சென்று நன்னாள்குறித்து மணம்புரிவித்தனர். அம்மணப்பந்தலிலே, பட்டினத்தடிகளுஞ்சென்று, அவனைக்கருதியவாறு வாழ்த்தி, அவ்வாழ்த்தினோடுமேலவன் உறவைத்துங் கூறுவாராய்.

"நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந்தேடி
நல்லொன்றுமறியாத நாரியரைக்கூடிப்
பூப்பிளக்கப்பொய்யுரைத்துப் புற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப் புதல்வர்களைப்பெறுவீர்

காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவர்பிளந்தமரத்துளையிற் காலைநுழைத்துக்கொண்டே
ஆப்பதனையசைத்துவிட்டகுரங்கதனைப்போல
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீரே

என்ற செய்யுளைக்கூறிச் சேஷையிட்டு ஆசீர்வதித்து இச்சைவழி சென்றனர்.

அப்பால் அவ்விடத்தில் மனைவியோடுகூடிவாழ்ந்திருக்கையில், சின்னாள் கழியலும், ஊழ்வினைப்பிரகாரம் ஓர்நாள் எண்ணெயிட்டு நீராடியன்றிரவில் காமங்கைமிக்கு மனைவியோடு புணர்ந்தனனாக, சன்னிபாதங்கண்டு, ஆயுள்முடிந்திறந்தான். இறத்தலும் அவன் மனைவிமாமிதாய் சுற்றம் அயலவரும் கூடிக்கட்டிலின்மருங்கியாகக் குளு சகியாதபேரழுகை செய்தனர்.

அத்தருணம், திருவருளிச்சைவழியுலாவும் எமது பட்டினத்தையர் அவ்வீதிவழிவரவுங் கண்டார் சிலர் ஓடிவந்து வணங்கிநின்று எம்பெருமானே! தேவரீர் கருப்பதிப்பேரன்புசெய்து திருவாக்கால் வாழ்த்துப் பெற்ற அடிமைச்சிறுவன் இன்று சன்னிபாதத்தினால் இறந்தனன் என்று கூறக்கேட்டுக்கொண்டே வந்தபோது, அவ்வழுகையோசை செவிப்பட்டிரக்கமுற்று, அவனருகே செல்ல, அங்கு இரங்குவாராயாவரும் ஐயரைக்கண்டழுகையொழித்து வணங்கிநின்றனராகவே அப்பிணமகனைக் கருணையானோக்கி,

விருத்தம்

வடிவந்தானும்வாலிபம்மகளுந்தாயுமாமியும்
படிகொண்டாருமூரிலேபழிகொண்டாடனீதியோ
குடிவந்தானுமேழையோகுயவனூனுங்கூழையோ
நடுவினானுமவீணனோநகரனுக்குறையானதே."

என்றசெய்யுளைப்பாடியப்பங்ஙனே தம்மையாட்கொண்டார் பேரருணிலையைநாடி,

விருத்தம்

மண்ணுமுருகுமரமுருகுமாயையுருகுமாலுருகும்
பெண்ணுமுருகுமானுருகும்பேதாபேதவகையுருகும்
அண்ணலுருகுமிடத்தமர்ந்தவாத்தாளுருகுமரவணையான்
எண்ணியுருகுங்குருநாதனென்பாலுரைத்தவோர்மொழியே.

என்ற திருப்பாட்டைப்பாடியருளினர். அவ்வளவில் இறந்து கிடந்த பிணமகன் உயிர்பெற்றுத் துள்ளித்துடித்து உறங்கி விழித்தவனைப்போலெழுந்து வணங்கி நின்றான். தேவர் பூமழைபொ

பொழிந்தனர் அந்தரதுந்துபி முழங்கிற்று. அடியவர் ஹரஹரமுழக்கஞ்செய்தனர். அங்குநின்ற சராசரவுயிர்களனைத்தும் ஆனந்த வெள்ளத்துண் மூழ்கின. * பின்பு உயிர்பெற்றெழுந்த காளை நடந்தவண்ணம் மொன்றும் அறியாதவனாய், பெருமான் திருவமுதுசெய்யக் காலந்தாழ்த்தமைத்தென மனம்பதைத்துவருந்திநின்று, ஐயர் பிச்சை நிவேதனத்தைச் சித்தஞ்செய்வதற்கு முயலத்தொடங்கலும், கண்ட ஆண்டகையார் திருவுளங்கனிந்து,

வெண்பா

எருவாய்த்திருவிரன்மேலெழும்புழுக்கூட்டுக்
கருவாய்க்கேக்கண்கலக்கப்பட்டாய - திருவாரூர்த்
தேரோடுமவீதியிலேசெத்துக்கிடந்தாயே
நீரோடுந்தாரைக்கேநீ

* இது சிவஞானிகளனுபவ நிலைமையை விளக்கியபடியாம் என்னை? "துரியமலைமீதுளதோர் சோதிவளநாடு, தோன்றுமதிலையாநடஞ்செய்யுமணிவீடு, தெரியுமதுகண்டவர்கள் காணியாயிரோடு, செத்தாரொழுவரொன்று கைத்தாளம்போடு" எனவும், "சொல்லாளப்பரிய சோதிவரைமீது, தூயதுரியப்பதியினேயுமறையோது, எல்லாருஞ்செய்வல்லசித்தா தமமையுறும்போது, இறந்தாரொழுவரொன்று புறந்தாரையூது" எனவும் ஞானவுடையார் கூறுதலாற்காண்க வென்க. எம்மை ஆளுடையபிள்ளையார் திருமயிலையில் எலும்பைப் பெண்ணாக்கியபடியும், ஆளுடைய நம்பிகள் புக்கொளியூர் அவிநாசியில் முதலையுண்ட பிள்ளையை மீட்டும் உய்ந்தெழுந்து வரச்செய்தபடியும் இதுவாம். "கொல்லாமைமேற்கொண் டொழுகுவானவாழ்நாண்மேற் செல்லாதுயிருண்ணுங் கூற்று" என்றதனுல் சாகாவித்தையின் சித்திநிலைமையும் வழியு மிதுவென்றதாம். இக்கருத்து வேதாகமவுபநிடதங்களானும் தேவார திருவாசகமுதலிய திருமுறைகளானும் வெளிபெறக்காண்க.

இன்னும், "அடியார்க்கெளியவரம்பலவாணரடிபணிந்தால்
மடியாமற்செல்வவரம்பெறலாமவையமேழளந்த
நெடியோனும்வேதனுங்காணாதநிர்மலனருட்
குடிகாணுநாங்களவர்காணுமெங்கள்குலதெய்வமே.
பிறவாதிருக்கவரம்பெறல்வேண்டும்பிறந்துவிட்டா
லிறவாதிருக்கமருந்துண்டுகாணிதுவெப்படியோ
வறமார்புகழ்த்தில்லையம்பலவாணரடிக்கமல
மறவாதிருமனமேயதுகாண்மருந்துனக்கே.

என இத்திருவெண்காட்டடிகளாருடன்பட்டுக்கூறுதலானும் இவரது ஐயிக்க நிலைமையின் வரலாற்றானும் உணர்க.

என்று அருளி அச்சிறுவனுக்கு நல்லருள்செய்து அறிவுணர்த்தி வாழ்த்தி அவனை அங்கிருத்தி, அப்பால் எழுந்தருளுகையில், அவ்வூரிலுள்ளார் யாவரும்வந்து வணங்கி, எம்பெருமானே! அடியோங்களுய்யும்படி எங்களைழைமைத்தொண்டுகொண் டிங்கேதானே வீற்றிருந்தருள்கவென வேண்ட, அவர்கள் குறிப்பினையுணர்ந்து,

வெண்பா

வெட்டவெளியானவெளிக்குந்தெரியாது
கட்டளையுங்கைப்மணமுங்காணுதே - இட்டமுடன்
பற்றென்றும்பற்றுதுபாவியேனெருசிலவன
இற்றெனவேவைத்தவினிப்பு

என்றருளிச்செய்து, அவர்களைநிறுத்திவிட்டு அங்கு நின்றும் புறப்பட்டு வழியிற் கிடைத்த பலதிருப்பதிகளையுந் தரிசித்து வணங்கிப் பாண்டிநாட்டையடைந்தார்

பாண்டிநாடு சென்றது.

அங்கே மதுரைப்பெருநகருமறுத திருவாலவா யுடையாரையும் அங்கயற்கண்ணம்மையாரையுந் தொழுது,

கட்டளைக்கலித்துறை.

விடப்படுமோ விப்பிரவஞ்சவாழ்க்கையைவிட்டுமனந்
திடப்படுமோ நின்னருளின்றியே தினமேயலையக
கடப்படுமோ வறபாவாயிலிறசென்று கண்ணீர்ததும்பிப்
படப்படுமோ சொக்கநாதாசௌந்தரபாண்டியனே.

என்றது முதலாகப்பலதமிழ்பாடி அங்கு சிலபகல வீற்றிருந்தருளினார். அப்பால அந்நாட்டிலுள்ள திருப்பதிகளெல்லாஞ்சென்று உடையவரைக்கும்பிட்டு, மலைநாடு அடைந்து திருவஞ்சைக்களமுதலிய திருப்பதிகளைத் தரிசித்து ஆளுடையாரைப் பணிந்து பிரிக் கொங்குநாட்டையடைந்தார்.

கொங்குநாடுசென்றது.

அகதொங்கில் பேரூர், அவிநாசி, முருகன்பூண்டி முதலிய திருப்பதிகளிற் சென்று சிவபெருமானைத் தொழுது வாய்பேசா மோனவிரதத்தோடு அங்கிருக்கையி லோர்நாள அரை யிருளில் வடவானலும்போலும் பசித்தீயெழுந்து வருத்த, பட்டினப் பெருந்தகையார் சென்று, ஒருமாககனுடைய குடும்பியின் தலைவாயிலில் நின்று கைதட்ட அவன் இவரை அறியாது ப்ரோர் காமக்கள்ளனென் றெண்ணிக் கடிகொண்டோடிவந்து ப

டைத்துத் தீங்கிழைக்க, எம்மையர் நின்ற நிலைபெயராது சிவசிவ வென்றிருக்க, அடுத்த மனைப்புறந் திண்ணையிற்கிடந்த அம்மனைக் கிழவனுணர்ந்தோடிவந்து அமணர்க்கனை விலக்கி, ஏடா!! பேதையே!! இவர் சிவயோகஞ் சிறந்த பெரியராமே, ஏனித்தீங்கிழைத்தனை யென்றுவிலக்கி, நம்பெருமானை வணங்கி யழைத்துச்சென்று, திருவமுதுபடைத்துப் பசியாற்றுவித்து உபசரித்தனன். அப்போது, அடிகளார் திருவருளை நினைந்து,

பூணும்பணிக்கல்லபொன்னுக்குத்தானல்லபூமிதனைக்
காணும்படிக்கல்லமங்கையாக்கல்லநற்காட்சிக்கல்ல
சேணுங்கடந்தசிவனடிக்கல்லவென்சிந்தைகெட்டுச்
சாணுமவளாக்கவடியேன்படுந்துயராசற்றல்லவே.

என்று சொல்லி, உடனே

இருக்குமிடந்தேடி யென்பசிக்கேயன்ன
முருக்கமுடன்கொண்டுவந்தாலுண்பேன் - பெருக்க
வழைத்தாலும்போகேனரனேயென்றேக
மிளைத்தாலும்போகேனினி.

என்றவெண்பாவைப்பாடி, அங்கிருந்து புறப்பட்டுத் துரு வம்புக்குக்கோகரணம்பணிந்துபோய்,உஞ்சேனைமாகாளம் அடைந்து, மாகாளேச்சுரரைப் பணிந்து நகருடுத்த சிறுபுன்காட்டிலுள்ளதோர் கணபதியாலய மடைந்து பரஞானநிட்டையிலவீற்றிருந்தருளினார்.

## கழுமரம்பற்றியெரிந்தது.

அங்ஙனமிருக்க, அந்நகரத்தையாளும், பத்திரகிரிமகாராஜன் இருவினையொப்பு மலபரிபாகமும் உத்தமசத்திநிபாதமும் வாய்த்து அதிதீவரபக்குவரா யிருந்ததால் அவரைத் தேமறச்சிவனருள் புரிந்தமையின், அவர் அரண்மனையில் களவுசெய்யும்படி ஓரிச்சையுண்டாகச் சிலகள்ளர் ஒருங்குகூடிவந்து அக்குறுங்காட்டிலுள்ள கணபதி சந்நிதியை யடைந்து தங்களுக்குக் களவு வாய்க்கவென்று பிரார்த்தித்துச் சென்று பட்டணத்தைச் சேர்ந்து சோரவு காலம்பார்த்து அரண்மனையினுட் புகுந்து தங்கள் ஆசைதணியுமட்டும் வேந்தன் கருவூலத்து நிதிக்குவைகளையும் மணிபூண் வகைகளையும் வாரிச்சுமைசெய்து எடுத்துச்செல்லுகையில் பிரார்த்தனை பலிக்கச்செய்த மூத்தபிள்ளையார் ஞாபகம்வரவே ஓடி,சந்நிதியடைந்து தங்களுக்குக் கிடைத்த களவுப்பொருளில் விலையுயர்ந்ததோர் பதக்கமெடுத்து விநாயகாக்குச் சாத்திச் செலவுறிச்சென்றார்கள். அது இருட்போதாகையால் அவ்விலையுயராம் அவ்வேகதந்தப் பெருமான் திருக்கண்டமணியாது தவறி அரு

கே சிவயோகசாதனையில் வீற்றிருந்த எம்பட்டினத்தையர் திருக் கழுத்தணிந்தது. இஃதிங்ஙனமிருக்க.

அங்கே அரசன் அரண்மனையிற் கருவூலத்துக் களவுபோன செய்தி வெளிப்படலும், அவ்வேந்தன் பரிவாரங்களும், காவன் மாக்களும் வெளிப்பட்டு அந்நகர்முற்றும் புறவிடம்பலவுந்தேடிச் செல்லுகையில் வேற்றோரடிச்சுவடு வெளிப்பட வக்கசுவடுபற்றிச் சென்று குறுங்காட்டிட் புகுந்து நாடிவந்து அப்பிள்ளையார்கோயிலையடைந்தனர். அவ்வளவில் வைகறையாய நிலந்தெளிந்துவர அருணோதயமாகவே, சிவயோகத்தில் வீற்றிருந்த பட்டினத்தையரையும், அவர்கழுத்தில் ஒளிவிடும் அரதனவாரத்தினையும் கண்ட அப்பார் மன்னன் படர்கள் பதைத்தோடி யெம்பெருமானைக் கள்ளருளொருவனென்று பற்றியீர்த்தலைத்துத் தமக்குத்தோன்றியபடியெல்லாம் துன்புறுத்து வாராயினர்

அப்போது, நம்மையர் சமாதிவிட்டுக்கண்விழித்து விளைவொன்றுமறியாராதலிற் காவற்படர்போன்ற இராஜகிங்கரர் அலைக்குந்தோறும் தடுத்தல் முதலிய முயற்சியொன்றும் புரியாது வேறொன்று [illegible] "சிவசிவ"வென்று அருள்கருதி உண்முகநோக்கிநின்றனர். நிற்[illegible] அவ்விறைமகன் பரிசனருட் சிலர் இவன் பெருமாயக் கள்வனென்[illegible] சிலர் அக்கள்ளரிறையிலவன், இன்னும் நம்மரசரணத்தற்றம் நோக்கிக்கொள்[illegible]பூண்டுள்ளானென்றார்கள் சிலர் அப்படியல்ல களிமயக்காற்ற சித்தனன்போலும் என்றார்கள். சிலர் நமது நலனூழிவனைமயக்கச்செய்து இங்கு கிடைக்கப்பண்ணிற்று, இல்லையேல் இக்கள்ளனை நாம் எங்கு கண்டு தேடிப்பிடிப்போம்; பிடியாவிட்டால் நமக்கிறைவன் கொடுந்தண்டம் புரியுமே என்றார்கள். சிலர் பித்தனோவென்றார்கள் சிலர் ஏடா!! வாய் பேசாது மூகையாயுற்றனை நுங்குழுவார் எனையர் யாண்டுற்றனர்? மற்றைப்பொருண் முற்றுமென்னவாயிற்று. கூறிலன்றி நீயுயிர்பிழைத்தலரிதாம் என்றார்கள் இவ்வளவு ஆரவாரத்திற்கும் சித்தவிகற்பங்கலக்கமொன்றுமின்றிச் "சிவசிவ" என்றே நிற்குநிலையைக் கண்ட அக்காவன்மாக்களுட்சிலர் உற்றுநோக்கித் துன்புறுத்தும் மற்றையரைத் தடுத்து, இவர் கள்ளரல்லர் சிவஞானச் செல்வமுடைய பெரியர்போலும் இருக்கின்றனர். கள்ளராயின் இந்தராஜயோக்கியமான கண்டாபரணம் பூண்டு, இவ்வளவு நகர சமீபமானவிடத்தில் நமது கையிற் கிடைக்கவிருப்பரோ? அன்றியும் நாம் ஈர்த்தலைத்துச் செய்யும்பெருந்துன்பங்களுக்குச்சிறிதாயினும் முகச்சுளுக்கும் துன்பத்துயப்பு மின்றிக்களிமுகத்தினராய்ச் "சிவசிவ" என்று உண்ணோக்கி நிற்றல் கூடுமோ? களிமயக்

னென்பதற்குச் சிறிதுமிடமில்லை. பித்தரோ எனில் பித்துடையார்தேகவியலொன்றுமில்லை. ஆதலால் உண்மை தேறவிசாரித்து அறியாது, நாம் கொடுமை செய்தால் பழிபாவம் ஆவதன்றி இன்னும் என்னவிளையுமோ? எல்லாம் அரசனுக்கறிவித்துக் கட்டளைப்படி நடப்பதே நலம் என்றார்கள்.

இங்ஙனம் இங்கே நிகழுகையில், முன்னம் ஐயரைக்கண்டவளவிலே சிலமூர்க்கச் சேவகர்களோடோடி அரசனைக்கண்டுவணங்கி, “இறைவ!! நமது வைப்பறையைச் சூறையாடிய கள்வர்கள் தலைவன் ஊர்ப்புறத்துக் குறுங்காட்டிலுள்ள விநாயககோயிலிற் கிடைத்தனன். அவனைக் கழுவேற்றினாலொழிய வேனையாகிடைப்பது மரிது. இன்னும் நமது பண்டாரமும் முற்றக் கொள்ளையாம். ஆகவே விரைவிற் கட்டளைதருகவென்று பதைத்தார்கள். அவ்வளவில் அரசன் நல்வினைப்பரிபாகமுடையனாதலின், நெஞ்சத்தோர் கலக்கந்தோன்றி மயங்கி நிற்கக்கண்டிங்கார், கோமகன் மயங்குங் காரணம் யாது நஞ்சொல்லிலே நம்பிக்கையில்லைபோலும் என்று எண்ணி, எம்முடையாய்!! நாங்கள் பழிக்கிடமாம்படி ஆணைக்கஞ்சி வேற்றாளைப்பிடித்து வந்தபடியன்று, அக்கள்வனிடத்தில் இன்றிரவிற் களவுபோன இராஜயோக்கியமான கண்டாபரணமொன்று இருக்கக்கண்டேபிடித்தனம். ஆதலின் வேறு ஆராய்ச்சிக்கிடனில்லை. தண்டனைக்கே கட்டளையிடவேண்டும். அக்கள்வன் மாட்டிருந்த ஹாரமீதுவென்று தந்து காட்டினர்.

ஆகவே அரசனுத்தமனாயினும் அனுக்கிரக சத்திபதிவதன் முன் திரோதை பதிதன்முறைமையாதலால் அத்திரோதை சத்தி வசத்தினராய்மயங்கிக் கழுவேற்றுக கட்டளையிட்டார். அக்கட்டளையை யவர்கள் தந்து ஏனையோர்க்குத் தெரிவித்தலும், அடிகள் பக்கல் காவலாளராய் விசாரித்திருந்த மற்றையார் மனமொவ்வா திருக்கவும் இறைமகனாணைக்கஞ்சி, ஐயரைக் கழுமரத்துக்கருகழைத்துச் சென்றனர். செல்லலும் ஐயர் கண்டு புன்னகையோடு மேலே நோக்கி,

“என்செயலாவதியாதொன்றுமில்லையினித்தெய்வமே
உன்செயலேயென்றுணரப்பெற்றேனிந்தவூனெடுத்த
பின்செய்ததீவினையாதொன்றுமில்லைபிறப்பதற்கு
முன்செய்ததீவினையோவிங்ஙனேவந்துமூண்டதுவே.”

என்றதிருப்பாடலையருளிச்செய்தனர். அங்ஙனே கழுமரம்பற்றியெரிந்துவிட்டது. அவ்வளவில் அங்கிருந்தவரசன் பரிவாரத்தினர் கண்டு பயந்தோடி அரசனுக்கு நடந்த விவரங்களை விண்ணப்பித்

தலும், இறைமகன் திடுக்கிட்டு ஒன்றுந்தோன்றாதவராய்அச்சமே ற்கொண்டு தம்மையறியாத அன்பும் ஆர்வமையும்பிடரி பிடித்துந்த, என்னையாளுடைய ஆரியமணியோ வந்தருளியதென்று நின்ற நிலையிலே பாதசாரியாகவேயோடிவந்து, பற்றியெரியுங் கழுமரத் தண்டையில் நிற்கும்தவபபெருமலையாகியவெமது வெண்காட்டடிகளைத்தரிசித்துககண்பெற்ற பேறுபெறறவராய் இவ்வுலகினை முற்றும் மறந்தனர்

பத்திரகிரியார் திருவருள்பெற்றது

அங்ஙனம தமையிழநது நினற ஆரசசிகாமணியாகிய பததிரகிரியார சிறிதுணர்ச்சி கூடவே யடியற்ற பனைபோல விழுநது பல முறைவணஙகி நினறு எமபெருமானே! அடியேனறியாமையால திருமேனி மிகவருத்தமுறறதுபோலும. பாதகனேன எனசெயக கடவேன்! என்செயர்கடவேன்! தேறவிசாரியாத பாவியேன என்று ஆராமையால வருந்துகையில், பட்டினததடிகள் கருணை மீதூர்ந்து சடைக்கணிதது நோககாதுநோககி அருள்பதிநத வருளததுச் சிவம்விளஙகத தததுவநியதிசெயது,

"நாயசொருசூலுமதறகோமருநதுவநாட்டிலுணடோ
பேயககொருஞானமபிடிபடுமோபெருங்காஞசிரங்கா
யாககுமாராதருந்துவராரதுபோலுடமபு
நீககி யாவதல்லாலேதுககாமினைதசெயபுமினே."

"மாணார்விழியைக்கடந்தேறிவந்தனனவாழகுருவுங
கோனாகியெனனைகருடியேற்றிககொண்டனனகுற்றமிலலை
போனாலுமபேறிருநதாலுநற்பேறிதுபொயயன்றுகா
ணானுமிந்தவுடமபோடிருப்பதருவருப்பே."

என்ற திருப்பாடலைச் சொல்லியவளவிலே ஐயனைப் பூட்டியிருந்த தளைகள் தெறிததுவிழுநதன. பின்பு அவாகசூறுதி கூறும்படி

அஞ்சக்கரமெனனுங்கோடாலிகொண்டிநதவைம்புலனும
வஞ்சப்புலககட்டைவேரறவாட்டிவளங்களசெயது
விஞ்சத்திருத்திச்சதாசிவமெனகின்றவிததையிட்டுப்
புஞ்சங்களையறிதேன்வளர்த்தேன்சிவயோகத்தையே.

என்ற திருப்பாட்டை யருளிச்செய்தார் உடனே அரசர்க்கரசான பத்திரகிரியார் நெஞ்சுதெளிவுற்றுத் துணிவுண்டாய் விரத்திபிறத்தலும், அங்கின்ற நிலையிற்றானே அரசகோலமுழுவதுமாற்றி, சூழவிருந்த அரசசுற்றம் பரிவாரமென்றனையும் பின்றிரும்பிப்பாராது, திருவெண்காட்டடிகள் திருவடியி லடியற்ற பனை போல் விழுந்து பற்றிக்கொண்டு, எம்பெருமானே! திருவடிக்

த்தவறிழைத்த அபராதியாகிப் பெரும்பழிசுமந்த வென்னை உய்யக் கொண்டருள்கவென்று கண்ணீருங் கம்பலையுமாகக் கலுழ்ந்து குறையிரந்து நின்றார். நிற்றலும் ஐயர்,

ஆங்காரமாய்நின்ற மலத்துவிலேயொருவித்துவந்து
பாங்காயமுளைத்தபயனறிந்தாற்பதினாலுலகு
நீங்காமனிதுகிறிறையாநிறைந்துநிறையுருவா
யாங்கார்மானவாக்கெட்டாசகனிவந்தமாந்திடுமே.

என்று அருளிச்செய்து, பாவனைதீக்ஷையால் அவருளத்துச் சிவயோகவனுபவ நிலை பதியவனுக்கிரகித்து, அவரைநோக்கித் திருவிடைமருதூருக்குச் செல்க என்றருளிச்செய்து, அங்கு நின்றும் புறப்பட்டு விந்தம், காசி, கேதாரம் முதலிய வடதிசைத் திருப்பதிகளை வணங்கி ஸ்ரீசைலமடைந்து ஆளுடையாரைப் பணிந்து பாடி சிலநாளங்கிருந்து புறப்பட்டு மறுபடியும் மேலகடற்கரையாகவே வந்து கொங்குட்புகுந்து பாண்டிநாடடைந்து திருக்குற்றாலம் பணிந்து,

வெண்பா.

காலன் வருமுன்னே கண்பஞ்சடைமுன்னே
பாலுண்கடைவாய்படுமுன்னே - மேல்விழுந்தே
யுற்றாரழுமுன்னே யூரார்சுடுமுன்னே
குற்றாலத்தானையே கூறு.

என்றது முதலிய திருப்பாடல்களைப்பாடி இராமேச்சுரம் வேதாரணியம் முதலிய திருப்பதிகளை வணங்கி, மறுபடியுந் திருவிடைமருதூரைவந்தடைந்து மருதவாணரைப்பணிந்து கீழைக்கோபுர வாயிலில் வீற்றிருந்தருளினார்.

பத்திரகிரியாரது பின்சரித்திரம்.

பத்திரகிரியாரும் குருவருளாணைப்படி சிவயோகசாதனை விடாது பிச்சையேற்றுண்டு தலங்கடோறுஞ் சென்று பணிந்து பட்டினத்தடிகள் வந்து சேர்ந்த தினமே தாமும் திருவிடைமருதூர் வந்து சேர்ந்து குருபரனைப்பணிந்து அவர் திருவாணைக்குறிப்பின்படி மேலைக்கோபுரவாயிலில் இருந்துகொண்டு நாடோறும்பிச்சை பண்ணிவந்து குருநிவேதனம் ஆனபின்பு சேடத்தைத் தாமுமுண்டு சிவயோகத்தில் வீற்றிருந்தனர்.

இங்ஙனம் நிகழுநாளிலோர் நாள் பத்திரகிரியார் தமது ஞானாசாரியன பரிகலச்சேடப் பிரசாதத்தினைத் தாம் அமுதுகொள்ளப் புகுந்தருணத்து, ஆதரிப்பாரற்றதோர் பெட்டைநாய்க்குட்டி வந்து வால்குழைத்துக் குறுகுறுத்து ஏழைமுகங் காட்டிட

பசியால் வருந்துந் தன்னிலைமையைக்குறிப்பிக்கக்கண்டபத்திரகிரியார் பரமசிவகாருணியமூர்த்தியாதலால அதனிடத் திரக்கங்கொண்டு அச்சேடப்பிரசாதத்திற் சிறிது அதற்கிட அதனை அப்பெட்டை நாயுண்டு பசியாறி அதுமுதல பத்திரகிரியாரை விடாது அவர் செல் வழிச்சென்றும் நிறபுழி நின்றும் அடி நிழலெனப்பிரியாது அவர் திருமேனி காவறறிருத்தொண்டினிலைமை பூண்டிருந்தது. அவ்வரசரோடும் அதனிடத்திரக்கம் வைத்து நாடோறும தமதுச்சிட்ட சேடப்பிரசாதத்தினை அதற்கிட்டு வந்தனர். கேட்டீர்களோ முனிவர்களே! இழிந்த நாயாயப்பிறந்தும அப்பெட்டை சிவஞானியின திருவருளுக்குப் பாத்திரமாயிறறு. இப்பேறு இவ்வுலகத்தில் யார்க்குக் கிடைக்கும என றுபமன்னிய பகவான கூறக்கேட்ட தவத்தினர் யாவரும வணங்கி வினவுவாராயினர்.

எமபெருமானே! "ஞாலமஞ் ஞானநிட்டையுடையோருக்கு நன்மையொடு தீமையிலலை நாடுவதொன்றிலலைச-சீலமிலலை தவமிலலை விரதமோடாச்சிரமச செயலிலலை தியானமில்லை சித்தமிலலை-கோலமிலலை புலனிலலை கரணமிலலை குணமிலலை குறியிலலை குலமுமிலலை-பாலருடனுன்மத்தர் பசாசர் குணமருவிப் பாடவினோடாடலினை பயின்றிடினும பயிலவர்." என்ற வேதாகமக்கருத்தின்படி சஞ்சரிக்கின்ற பரமஞானியாகிய விப பத்திரகிரியாருக்கு அந்நாயினிடத்தில என இரக்கம வந்தது? முன்னுளில சடபரதர் என்பவருக்கு ஒரு மான கன்றினிடத்தில உண்டாகிய தயவு காரணமாகப்பறறு விளைந்து பலபிறப்பி னேர்ந்ததென்று சில புராணங்கள் கூறிறறே. இஃதென்னே? தேவர்க்கும மூவர்க்கும் யாவர்க்கும பெறுதற்கரியதோர் சிவஞானியின் உச்சிட்டப்பிரசாதம், பிறவிகளுள அறக்கடையதாயும முறறும பாவதேகியாயுமுள்ள இந்நாயக்குக் கிடைக்கத்தக்க புண்ணியத்தவமேலீடு யாவை? இவை விளங்கத் திருவாய மலர்ந்தருளவேண்டுமென்று மீட்டும பணிந்தார்கள்.

அப்போது உபமன்னியபகவான் புன்னகைசெய்து, அம்முனிவர்களைநோக்கி, உங்கள் வினா மிகநன்று. இஃதுலகம அறிந்துய்யத்தக்கபடியாம். இதனையாமுங்கட்குக் கூறுவேம். ஞாபகத்தோடுங் கேட்பீர்களாகவென்று சொலலலாயினர்.

### வேதாகமத்தின் முடிவானகருத்து.

* உலகத்தில ஒருவன ஒரு தொழிலைச் செய்யப்புகின், அத்தொழில தனக்குப்பயன், பிறர்க்குப்பயன, தனக்கும பிறர்க்கும பயன, தனக்கும பிறர்க்கும பயனிலலாமையென நான்குவகைய

* "ஒங்கருளிசஞ்சொன்றியேகின்றேரும-ரங்கருணீங்கானொன்றுந்தீபற-எலலாவுயிர்க்குமென்றுந்தீபற." என்றார் பிறகாலத்துப்பெரியரும்.

தாம். அவற்றுள் சிவ னிவ்வுலகைப்படைத்தது தனக்குப்பயனே எனில், தனக்குமேல் உயர்ந்தோ ரொருவரு மில்லான் ருகுதலாற் புகழ்ப் பயனன்று. எவற்றிற்குங் காரணன் ருகவே வேறு பயனு மின்று. தனக்கும் பிறர்க்கும் பயனெனில் தனக்குவமையிலலாகுதலின் கூறவேவேண்டா. தனக்கும் பிறர்க்கும் பயனில்லையெனில் மைந்தர் விளையாட்டாம், பேரறிவுடையா ருதலி னஃதமையாது மற்றெனனெனில் அநாதிமூல மலவிருளிற்கிடந்தவுயிர்கள் உய்யவென்ற கருணையாலாக்கலிற் பிறர்க் கேபயனும். அங்ஙன மாக்குங் கால் ஆன்மாக்கள் குறையிரந்து வேண்டிச் செய்தபடி யன்று, தானே பேரருளாற் செய்த தாமாகவே, அத்தகைய பேரருளாளனாகிய சிவனடி நீழல் பிரியாத சிவஞானிகளும், சுடுமியற்கையில்லாத இரும்பும் நெருப்பு கூட்டுரவால் சுடுந்தன்மை பெற்றாற்போல, அவனருட் சேர்க்கையால் நித்தியமான வான்மாக்களுக்குச் சுகதுக்கமில்லை. மாயாதனுவுக்கேயவையுள்ளபடியென்றறிந்திருந்தார்களானாலும் பெத்த தசையில் அவவுணர்ச்சி யவ்வான்மாக்களுக் கில்லாமையாற் படும் துன்பத்திற் கிரங்கி யருள்செய்தல் இயல்பாம். இவ்வருளில்லாவிடின் முத்திப் பேறேயின்றாம். "அருளில்லார்க்கவ்வுலகமில்லை பொருளில்லார்க் கிவ்வுலகமில்லாகியாங்கு." என்றதே சான்று முத்திக்கு, அருளே சார்பு. என்பதை "நல்லாற்றானாடியருளாள்கபல்லாற்றா னேரினு மஃதே துணை" என்ற பெரியார் மொழியானுணர்க. அதனாற்றான் "அருட்செல்வஞ்செல்வத்துட்செல்வம்பொருட்செல்வம் பூரியார் கண்ணுமுளவென்றார். இனித்தமிழ்மறையாகிய தேவாரத்துள்ளும் "சலங்கெடுத்துத்தயாமூலதன்மமென்னுந் தத்துவத்தின் வழி நின்று சார்ந்தோர்க்கெல்லாம் நலங்கொடுக்கு நம்பியை நள்ளாற்றானை நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே" என்றது முணர்க.

ஆனால் கண்ணன் பாரதப்போர்த்தொடக்கத்தில் இருதிறப் படைகளையுநோக்கித் தயவால்போர்செய்யேனென்ற அருச்சுனனுக்குபதேசித்த கீதையில், இச்சாஞானக்கிரியாசொரூபத்தால் ஆன்மாவொன்றே யாகவே தயவு செய்வானும் செய்யப்படுபவனும் வேறில்லையாக நீயஞ்சாது வில்லெடுத்துப் போர் புரியென்று பலமுகத்தாலும் கூறி அவன் தயவைக்கெடுத்ததென்னையெனின்? அங்ஙனமன்று, அந்த கீதை, * ஆன்மசொரூபஞானந் திடப்படும்படி

* அருச்சுனற்கு மிராமற்கு மதிகாரமலைவபாரதத்தே யுரைத்த நூலின், கருத்தறியாய ஞானமொன்றே பிரமாணஞ்சரிதையது கணக்கன்றுகும், விருத்தமறிவாசாரமுடையோனே ஞானியில்லோன விருத்தனுதும், திருத்தமுடனமைச்சவித்துணிவென்றே யுட்கொள்வாயதிரனுகி எனக்குமாரதேவர் மகாராஜாதுறவினுட கூறுதலானு மறிக.

புலமுகத்தும் விரித்துக் கூறியபடியல்லாது, ஆன்ம அநுபவஞானத்தைக்கூறியதன்று. அதனாற்றான் அவ்வருச்சுனனுக்கு உத்தரகீதையென்று மறுபடியுங்கூறினர். அன்றியும், கண்ணனும் அருச்சுனனும் பூபாரங் கழிக்கவந்த நிமித்திகர்கள். ஆகவே உண்மையனுபவஞானம்பற்றி விசாரிக்குங்கடனவர்கட்கில்லை அங்ஙனமிருந்தும் நான்முறை பிறழாதிருக்கவேண்டுமென்னுங்கருத்தால், "இருவகையுயிர்க்கு மினியனா யின்பதுன்பம் யாவென்னவென்றறியா, தொருபொருளாலுங் குறைவுபாடின்றி யுள்ளமு மொருவழிப்பாடாய்ப், பொருவருந்துணிவுங் கருணையும்புரிந்து புலன்றெரியுணர்வை யென்பாலே, மருவி நின்றொழுகும் யோகியென்பவனே மன்னவமற்றெனக்கினியான." எனக் கருணையு மொருத்தலையாக வேண்டுமென்பதை விளக்கினார்.

அல்லாஉம, அவ்வருச்சுனற்கு அங்கேவந்த தயவு, பாட்டன, மைத்துனன், மாமன, மகன, ஆசிரியன, நண்பன், உறவினன, படைஞர் என்றெழுந்த பாசசம்பந்த தயவேயன்றி, உண்மையாலே யான்மசொரூப முணர்ந்ததனாலுண்டாகிய சருவஜீவகாருணியமன்று. அது உண்மை யுணர்ச்சியில் வந்த சருவஜீவ காருணியமேயானால மாறவும மாறாது. யுத்தமும நடவாதென்றுணர்க.

இனி சடபரதாகுமா நான வளர்த்தமானென்று சுதந்தரபுத்தியாலெழுந்த பந்த சமபந்த தயவேயாம அது அக்கதையானே விளங்கும.

அப்பால அப்பெட்டைநாயோ வெனில முற்பிறப்பில அங்கதேயத்து, அழகிலே சிறந்த விலைமாதொருத்தி மூத்தோரினையோரென்ற வரம்பின்றிப் புணர்ந்து பலவகையாலும வஞ்சித்துப பொருள்தேடி, புலைகொலைகளுண்டலிவற்றிலே தனதுளெல்லாம போக்க கழித்துத் தருக்குற்றுத் திரிந்து பலகொடுமைகள் செய்து திரிபவளோர் நாளுச்சிப்போதில சிவஞானியானொருவனொப்படி பிச்சைக்கு வீதியே சென்ற தோமாணாக்கரான பக்குவியின கையிலே தன்விடபுருடர்களோடுண்டு மிகுந்திருந்ததோர் சிற்றுண்டியைப் பத்திவகையின்றிப் பரிகாசப்பொருட்டாகக்கொடுத்தனள். அதை யம்மாணாக்கன் குருப்பிரீதிபண்ணித் தம்பசியாறி யிச்சைவழிசென்றனர். அப்பால அவ்வேசை முதுமையடைந்து வறுமை பசி பிணி முதலியவற்றால வருந்தி விலையுலப்பவிறந்தொழிந்தபின் கருமசேடத்தால் ஒரு பெட்டைநாயாயப் பிறந்தாள்.

கேட்டீர்களோ! முனிவர்களே!! அவ்வேசை தானுண்டதன் சேடத்தைப் பரிகாசமாக வொருசிவயோக சாதகியின கரத்தளி

த்த தோடத்தால் நாயாய்ப்பிறந்த னளாயினும் அச்சேடப் பண்டம் அவரது பசியைத் தணித்த பலவிசேடத்தால முத்திக கே வழியா யிப்போது பதிரகிரியாராகிய சிவயோகியின் உச்சி டட சேடப் பிரசாதத்திற்குப் பாத்திரமாய அவர் திருமேனி கால்ற்பணிககுரியதாகும பேறுபெற நேர்ந்தது. திருமநதிரம் " மாததிரை யொனறினின் மனனியமர்ந்துறை, யாததனுககீந்த வரும்பொருளானவை, மூர்ததிகணமூவர்கது மூவேழ்குரவர்க் குந், தீர்ததமதாமது தோநதுகொளளீரே." ஆதலால், "அகரமா யிர மநதணாககீயிலென, சிகரமாயிரஞ செயதுமுடிககிலென், பக ர்தருஞானிபகலூணபலததுககு, நிகரிலலையென்பது நிசசயநதா னே." ஆகவே. "ஏறுடையாயிறைவா வெமபிரானென்று, நீறிடு வாரடியாநிகழ்தேவாக,ளாறணிசெஞ்சடை யண்ணலிவரொனறு, வேற்ணிவாரக்கு வினையிலலைதானே." என்றபடி சிததிக்தது.

கேளுமமுனிவர்களே! அபபால் இஙஙனம சின்னாள கழியவே, திருமநதிரம. "வித்தகமாகிய வேடததாருண்டவூண, அதத னயனமா லருந்தியவணணமாம, சிததநதெளிந்தவர் சேடமபருகிடின, முததியாமெனறுநம் மூலனமொழிநததே." எனறபடி அப்பெட்டைநாயககுப பரிபாகம நோநதது நோக்கி, நமமருந்தாருடைய பெருமான ஓர அருட்சிததவேடராய் பட்டினததடிகளி டததி லெழுநதருளி, ஐயா! பசிததிசசுடுதலால பிசசையிடவலலீரோவென, அவரும புனனகைசெயது, ஐயரே! யான கோவணமே பாரமெனறுளளேன தேவரீர பசிககுப் பிசசையிடவலலனோ! ஆயின மேலைககோபுரவாசலில ஓர் சமுசாரியுளளான அவனபாற செலவீரோனுமதுபசிககுத தகக பொருளகிடைககுமெனறார். அது கேட்டு வலிதாளுமபேரருளாளன அஙஙனே பததிரகிரியார்பாற் செனறு, ஐயரே! கீழைககோபுரவாசலி லிருககா ரொருவரை நான பசிககுச் சோறிடுமெனறேனுக, அவர் எனககுக் 'கோவணமே பாரமாகப் போககினறி யிஙகிருககினறேன். ஆதலால மேலைக் கோபுரவாயிலில ஓர் சமுசாரியிருககினறுன அவன் பாற்செலவீரோல் உமது பசியாறுமெனறார ஆகவே நீரோனும என்பசியாறற் வலலீரோ வென்றார.

உடனே அவ்வுரைக்குறிப்புணர்ந்த பத்திரகிரிப்பெருமானும் உண்ணடுஙகி, இவ்விரந்துணணுமோடும், எச்சிலுண்ணுநாயுமோ என்னைப் பிச்சைதரவல்ல சமுசாரியாககியது. ஆண்டவர்திருவுள ளமிப்படியாயின் இனிதுதானெனக்கு என்செயயவல்லதென்று கையிலிருந்த வோட்டினைச் சுழற்றி எறிந்தார். அதுசென்று அப் பெட்டைநாயின் பொறியிற் றாக்கவே ஓடுமுடைந்தது நாயுமிற

ந்தது. பிச்சைக்குவந்த மருதப்பெருமானும் புன்னகையோடும் மறைந்துவிட்டனர். பின்பு, பத்திரகிரியாரும் திருவருணிலைமையை நாடிச் சகசநிட்டை பலிக்கத் திருப்புலம்பல் முதலிய அநேகஞ் செந்தமிழ்ப்பாடல்களை யருளிச்செய்து அலைவறறசிவயோகத்தில் வீற்றிருந்தார்.

அப்பால் அப்பெட்டைநாய், "உடையாய் கூவிப் பணிகொள்ளாதொறுத்தாலொன்றும் போதுமே." என்ற திருவாசகத் திருவுளப்பாங்கினபடி பரமயோகிகையினினறு மெறிபட்ட வோட்டினால் இறந்தவளவிலே முனபலகோடி பிறபபிலுஞ் செய்த தீவினையெல்லா மொழிந்துபோயப் புண்ணியமேலிட்டு, மக்களினறித் தவஞ்செய்திருந்த காசிமாநகரத்தரசன விசுவகுத்தனென்பவனுக்கு மகளாகப் பிறந்து ஞானவல்லி என்ற பெயரோடு உலகத்தில உயாவு ஒப்பு இலலாத அழகும், நற்குணமும், நறசெயகையும் உடையாளாய சிவயோகியின உச்சிட்டப் பிரசாதவிசேடத்தால், பூர்வஞானம் விளங்கக் குருவின திருவடியில் நேயமவைத்து வளருநாளில அப்பெண்ணுக்கு மணஞ்செய்தறகுரிய மங்கைப்பருவம் வரக்கண்ட பிதாவாகிய அந்த விசுவகுத்த மகாராஜன தன்மகளுக்குத் தக்க வரன்யாவனென்று நாடிக்கொண்டிருக்கையில வரன் கிடையாதபடியால் ஓரநாள மிகவு மனமவருந்திக் கன்னிகாமாடத்திருக்கும் தனபெண்ணைப் பாாக்கவந்தவன பெண்ணினழகை நோக்கித் தன்னருகிருந்த புரோகிதனைப்பாாத்து, ஐயா! இக்கன்னிகைக்குந் தக்க கணவன இவவுலகிலொருவனுண்டோ? அந்தோ என்செயவேன்! "பெணகளைப் பதுவிருதுக்கு மேல மணம்புரிவியாது வைத்திருத்தல பாவம்." என்று பெணபாலும் சொலலுகின்றார்களே என்று கண்ணீருகுத்தான.

அதுகணட அப்பெண் திடுக்கென்று பயந் துடலநடுநடுக்கத் தந்தையை வணங்கி நின்று, அப்பரே! நீா இப்போது கூறியதென்ன? என்னை யார்க்கு மணஞ்செயவிக்கக் கருதுகின்றீா? யான் யாருக்கு முரியவளலலள் எனது குருநாதா தென்னாட்டில திருவிடைமருதூரில மருதவாணராலயத்து மேலைக்கோபுரவாயிலில எழுந்தருளியிருக்கின்றார். ஆதலால் என்னை அவரிடத்தி லழைத்துக்கொண்டுபோ யொப்புவித்தால அவா யாாக்குக் கொடுப்பாரோ அவர்களுக்கு நான உரியவளாவேன. நீா என்னை வருந்திப் பெற்று வளர்த்த தந்தையென்பது உண்மையே லிவ்வுபகாரம நீா செய்யவேண்டும். இச்செயகை ஆண்மக்களிலலாத நமதுகுடி முன்னோர் மூவெழுதலைமுறைக்காரும் முத்திபெறும தவமாகமுடியும். ஆதலால் எனசொலலை அவமதியாது சொலலியவண்ணம முடிப்பிக்கவேண்டுமென்று மீட்டும்பணிந்தாள்.

அதுகேட்ட அரசன் நெஞ்சுதுணுக்குற்று, இன்னுந் தாய மடிவிட்டிறங்கியறியாத இச்சிறுகுழந்தைக்குக் குருநாதன் யார்? அவரிருப்புத் தென்னாடு திருவிடைமருதூர் சிவாலய மேலைக்கோபுரவாயிலாம். அது இவளுக்குத் தெரிந்தபடி எப்படி? பிறர்சொல்லக் கேட்டிருந்தவாறுமன்று. அரசாட்சிசெய்துவருகிற நானே இதுவரையில் கேளாதது, இவள் கேட்டதெங்கே. ஆனால் இவள் அழகு குணஞ்செய்கையை நோக்குமிடத்து, சாதாரணமான வுலகத்துப் பெண்களுள் ஒருத்தியல்லள் ஏதோ காரணமாதாகவே தோற்றுகின்றது. ஆதலால் இதை நன்குவிசாரிப்போமென்றுபுரோகிதரோடு தன்சபைக்குவந்து, நல்ல விவேகிகளும் யோக்கியதையுடையவர்களுமான ஒற்றுவரைத் தருவித்து, அவர்களுக்குத் தன்கருத்தைத் தெரிவித்து உண்மையையறிந்துவர, ஏவினான், அவர்களு மவ்வாறே தென்னாட்டு மருதூரடைந்து அடையாளப்படி பத்திரகிரியார் நிலைமை தெரிந்துவந்து அரசனுக்கு அறிவித்தார்கள். அங்ஙனே அக்கோமகன் பயமுற்றுத் தன்பரிவாரங்களோடும் மகளைச் சிவிகையிலேற்றிக்கொண்டு தானும் புறப்பட்டு வந்து திருவிடைமருதூரடைந்து ஆலயஞ்சேர்ந்து மேற்றிசைக் கோபுரவாயிலின் அருகே சிவிகையினின்றும் தன்மகளை யிறக்கினான்.

அத்தருணம் பத்திரகிரியார் சிவயோகசமாதியிலிருந்தார். அவ்வரசகன்னிகை அஞ்சலிபந்தத்தோடும் எதிரின்றுகாலம்பார்த்திருந்தனள். ஐயர் சமாதியினின்றும் உலகமுகமாகிவிழித்து நோக்கலும், அப்பெண், எம்பெருமானே! அடிநாயமீட்டும் திருவடிபெறுதற்கே வந்ததென்று வணங்கலும், எல்லாமுணர்ந்த பெரியோராகிய அவரும் அவ்வரலாறு முழுவதுமொருங்குணர்ந்து அப்பெண்ணைக் கைப்பற்றிச்சென்று அந்தக்கணமே கீழைக்கோபுரவாயிலிலிருக்கும் தம்முடைய ஞானாசிரியராகிய பட்டினத்தடிகள் சந்நிதியில்விட்டு, எம்பெருமான் எச்சிலுண்டநாய்க்கு மிப்பிறவிநோய்வரலாமோ என்று கண்ணீர்வார விண்ணப்பித்து நின்றனர். பட்டினத்தடிகளும், சிவசெயலுக்கென்செய்வல்லோமென்று திருவருளை நாடினராக; அந்நிலையில் ஓர் பெருஞ்சோதியுண்டாயது. அச்சோதியில் சிவபெருமான் றிருவாணைப்படி பத்திரகிரியார் அப்பெண்ணோடு புகுந்து கலந்தனர். பூமழைபொழிந்தது. தேவதுந்துபி முழங்கிற்று. அங்கிருந்த சராசரவுயிரனைத்து மானந்தமயமேயாயிற்று. அடியவர் அரகரமுழக்கஞ்செய்தனர். விசுவகுத்தமகாராஜன் முதலியோர் பரவசராயினர். உடனே சோதியும் மறைந்து மகாலிங்கத்துட்சென்றொடுங்கிற்று. கேட்டீர்களோ முனிவர்களே! நாய்பெற்றபேறு யாவரா.

ளவிட்டுச் சொல்லத்தரம? யார்க்குத் தானகிடைக்கும் ஆதலால் உலகத்தில் சிவஞானிதரிசன விசேடமே மங்கலங்களுளெல்லாம் பெருமங்கலமாவதெனறு வேதாகமங்கள் சொல்வதுண்மை. என வுபமனனிய முனிவா கூறினர்.

அது கேட்ட முனிவாகள யாவரும் அன்பு மாராமையுமே லிட உபமன்னியபகவானை வணஙகி, எமபெருமானே! "சித்தந தெளிந்தவா சேடமபருகிடின முததியாம" என்றதிருமந்திரப்படி அபபெட்டைநாய அதேதேகததில்முததிபெறறுசெததுமறுபடி யும அரசகுமாரியாகபபிறநது பூாவஞானம விளஙக வளாநதிருந் து பின் முத்திபெறறதன காரணம வெளிபபடையி லெஙகட்குண ர்வுதிகக்கும்படி அருள செயய வேணடுமென,ஸ்ரீ வுபமனனிய முனி வரும கூறததொடஙகினா.

முனிவர்களே! கேளுஙகள, நீஙகள வினவியதுணமையே ஆ னல், அதே திருமநதிரம, "ஒரொழுததொருபொரு ளுணாககூறிய, சீரொழுததாளரைச சிதையசசெபபினோா, ஊாரிடைச சுணஙகனாய ப்பிறநதோருகம, பாரிடைககிருமியாயபபடிவர்மண்ணிலே" என வும், "மநதிரமோரொழுததுரைததமாதவா, சிந்தையினொநதிடத தீமைகளசெயதவா, நுநதியசுணஙகனாயப பிறநது நாறுரு, வந்தி டும்புலையராய மாயவாமணணிலே." எனவும் விதிததது. ஆதலா ல், இந்நாய்ப்பிறப்பிற்கு முனனடைநதிருநத வேசைபபிறப்பில் செயதமறறைறதீமைகள்கிடகக,சிவயோகசாதகியொருவரைப பரி காசஞசெயத குற்றம சிறிதலல,பெரியதிறபெரியது. அது அததிரு மந்திரம விதிததபடி பலபல சனமமெடுதது இறததாலொழிய வே று வகையாலொழியாது. ஏனெனில, பிறககும்பொழுதோ;சிவதரு மோத்திரம." எனறெனறெணணியிருககு முயிரிடாபபட்டழியு மெழிலவரைககீழ், ஒனறு மொருவன நீனபயோலக் கருபபாசயப் பையுறுததுதலான, மனறவுததிமறிநதாழவான வீருத்த மென்ன வருந்தியிடும, னெறு கருபபாசயவுதகவெளளஙகொள்ள நிறையழி ந்தே." "தஙகியதனிறறஙகியிடு மயோமயததகும்பத்தில், றஙகு மொருவனறயனம போற்றபன மெயதுந்தாயுதரத், தஙகிசுடவே யழலினயகூசியதனுலாகத்தைப, பஙகிததிடவேபடுமிடாரினிருநா ற்குணிதமபட்டழுஙகும்" "கருப்பாசயமேகடடமதாமதனிலதி கங்கீடுங்காலும், முரிக்கமிகவுமோகமுற முன்னையுணர்வு மங்கிலே யே, மரிக்கவாலைக்கருமபெனவேயோனி வழியின்வலிதொலைய, நெ ருக்கப்பட்டு நிலமிசையே தோன்றுமுயி ருனிலையுடனே." என்ற படி கருப்பையுறுத்தல், அழிற்சலமபூரிததல்,உதராக்கினிசுடல், பி ரசூதவாய்முரித்துத்தளளுதல், யோனித்துவார நெருக்குண்டல் என்ற ஐவகைபபெருந்துன்பமும பொறுககமுடியாது, தாங்கமுடி

யாது, வேறொருவரால்தடுக்க முடியாதாயுள்ளன. இறக்கும்பொழு தோ? பெருந்திரட்டு, "பரணமாகியபெண்டிருஞ்சுற்றமும்பண்டுத ங்கையிறந்த, விரணமானவைகொண்டிட விவரைவிட்டியம்பிடா இவனேகும்,மரணவேதனையாவராலறியலாமயங்கியைம புலனந்த ச,கரணம்யாவையுங்கலங்கிட வருந்துயர்கடவுளேயறிகிறபான்." "வந்திடும்பிறவித்துன்பமறிந்துநை செய்யப்போமோ,வுந்திமேலே யும்பித்து முணாவொடுபொறிகலங்க,நந்திடாவிருளேமூடிநாவுலர் ந்தலமந்தேனே,இந்தமாவிறப்பிறுமூன்பமப்பவத்துன்பத்தெண்ம டங்கே." என மபூடிஅப்பிறத்தலினும மணமடங்கு அதிகமானதுக் கம அதனாலன்றோ?"சாதலினின்னாததிலலை" என்றார் தேவர். "பானேநும பிறப்பெனுஞ்சேற்றிற்பப நனுக்குள்ன்சடவே ய" என்றது திருவாசகம். "சாதல சாதல பொல்லாமை" என்ற துமது. மார்க் கண்டேயா அவ்விறத்தலுச்சஞ்சிசசெய்த முயற்சி சற்றலலவே. இனி எந்தப்பெரியாதான சாவுக்குப்பயப்படாதவாகள்; இழவு என்னுஞ்சொல எம்பொருட்சேட்டுக்கும பொதுவா யிருப்பினும தேகநெருங்கிக்கன்றோ வுலகம அப்பேரிட்டு வழங்குவது. ஆதலா ல விணையொழிவு, பிறத்தலாலும இறத்தலாலுந்தானநேரிடும். ஆக வே, பெரியோரைப்பழித்தகுற்றம நாயாயப்பிறந்து பலிபாத்திரத் தாலடியுண்டுஇறத்தலாலொழிந்தது.குரு உச்சிட்ட பிரசாதபலத் தால முன்னுணர்ச்சியோடு அரசகன்னியாகப்பிறந்து தூலவுடம் போடும அருட்பெருஞ்சோதியிற்கலக்கப்பெற்றது என்று சொல் லி அப்பால நடந்த சதையைச சொலலலாயினா.

கேளும் முனிவாகளே! அந்த அருட்பெருஞ்சோதி மறைந்த வுடனே திருவெண்காட்டடிகள திருக்குற்று ஆராமை மேலிட்டுக் கணகளில ஆநந்த நீர்பெருக்கச்சிரமேலாது அவசமுற்றுத்தெளிந்து அருட்டிற நோடி, இறைவா சந்நிதிநோக்கி, எமபெருமானே! மு ன வரகுண பாண்டியனா பத்தினியாரைத திருவடியிற் கலந்து கொண்ட பெருங்கருணையாளனே இன்றுசெய்தபெருங்கருணைக்கு எல்லையென்னுளளது, இன்னுமென்னையுமென்விணையையும்இங்கு இருத்திவைத்திபோலும,இனிஏழையடியேனசெய்யக்கடவனஎன் னென்று நின்றுருகுந்தருணத்தில, ஐயா திருவருளால, "ஐய! நம் மொற்றியூர்க்குவருதி" என்றோர அசரீரிவாக்குஉண்டாதலுமவண ங்கி விடைபெற்று அங்ஙனே புறப்பட்டு வழியிலிருந்த திருப்பதி களில் பெருமானை வணங்கித திருவெணகாட்டினை யடைந்தார். என்றுபமன்னியமுனிவா கூறக்கேட்டமுனிவர்கள அவரைவண ங்கி, எம்பெருமானே! வரகுணபாண்டியனா திருமனைவியை ஆளு டையார் திருவடியிற்கலந்துகொண்ட வரலாறென்னையெனக் கூற லாயினர்.

வரகுணதேவர் கதை.

முனிவர்களே! முன்னொருகாலத்தில் பாண்டிநாட்டில் துவாதசாந்தத்தலமாகிய மதுரையிலே அரசாண்ட சந்திரவமிசத்தர்களாகிய பாண்டியர் குடியிலவதரித்துச்சிவநேசமேவடிவமாயிருந்த வரகுணதேவர் மநுமுறை கோடாது அரசுசெலுத்தி வருநாளில் ஓர்நாள் தேரேறி உலாவரும்போது முதுவேதிய னொருவன் றேர்க்காலிற்சிக்கியிறந்தானாகவே, அப்பிரமகத்தி அவ்வரச சிகாமணியைப்பற்றி வருத்த, வேந்தன் அஞ்சி நானமுறைக்கழுவா யெல்லாம்புரிந்து மொழியாது கண்டு தங்குலதெய்வமாகிய திருவாலவாயுடையார் சந்நிதியடைந்து குறையிரப்பப் பெருமானுந் திருவுளமிரங்கி, ஐய! வரகுண, உமையவளிதயாகாசமாய் உருத்திரர் பூசித்தருள்பெற்ற திருவிடை மருதூ ரடையின் இப்பிரமச்சாயையொழியுமென்ன அசரீரிவாக்காலருளலும், உடனே அப்பஞ்சவர் கோமான உலகோம்பலையமைச்சாவசஞ்செறுவி, மறையப்புரோகிதர் முதலிய வுறுதிச்சுற்றமும் பரிவாரமும் புடைசூழச்சோணாட்டுத் திருவிடைமருதூர்புகக்குக் காருணியாமிர்த தீர்த்தத்து நீராடி நித்தகரும முடித்துக்கோயில வலம்வந்து கீழக்கோபுரவாயிலாற் புகுதலும அப்பிரமசாயை அரசனைப்பற்றிச் செல்ல அஞ்சிப் புறத்தே நின்றது. பெரும்பாரநீங்கியபெற்றோன போன றரசனாலயத்துட்புகுந்து ஆளுடையாரை வணங்கித்தொழுது துதித்து வலம் வந்து பல்லிந்து விடைபெற்று வெளிப்படுகையில், அசரீரியால கீழைவாயிற்பிரமசாயை நிற்றலால மேலைவாயிலாற் செல்கவென்று அருளாணையாதலும, அவ்வாறே சென்று இருகைசேர்த்து காலங்கடோறும் மருதவாணர சந்நிதியடைந்து தரிசித்து அன்புபெருக அங்கு வசித்திருக்குநாளில், ஒருநாள் கள்ளனொருவன அரண்மனையிற்சென்று களவுசெய்யக்காவலர் கடுகிஅக்கள்ளனைப்பற்றிக்கட்டிவந்து இறைமகன முன்னாவிடலும பாண்டியரோ அக்கள்ளன்உடம்பிற்றிருநீறு விளங்கக்கண்டு சிவனடியவரென்று கட்டவிழ்ப்பித்து வணங்கிஅவன் வேண்டும பொருள கொடுத்தனுப்பினார். மற்றொருநாளிரவில ஊர்ப்புறத்து நரிகள் ஊளையிட அவ்வோசைசிவபெருமானைப்பாடிய பாடலோசையாகவெண்ணி அவற்றிற்கு ஆடைகள பரிசாகவளித்தனர். பினனொருநாளிரவில்மழை பெய்யுங்கால் தவளைகள் இரைச்சலிட அவ்விரைச்சல சிவநாமம் போலச்செவிப்பட அங்ஙனே மனங்கனிந்து மணிகளையும் பொன்னையுங்கலந்து அந்நீரிலிறைப்பித்தார். ஒருகாலத்தில் பெருமானார் திருமஞ்சனத்துக்காம்படி தைலஞ்சமைக்கவென் றுலரவிட்ட வெள்ளினைக்காவிற்றின்ற வொருவனைக்கண்டுபிடித்துக்கொணரியர் குலமணிபால் கொண்டுவர. அவனிவ்வெள்ளைத்தின்றதனால் இனிவ

ரும் பிறப்பு எருதாகப்பிறந்து சிவபெருமான் திருவபிடேகத்திற்குத்தைலம் அமைக்குஞ் செக்குமரம் வலிக்கும் திருத்தொண்டு பெறலாமென்னு மாசையா லிங்ஙனஞ் செய்தேனெனக் கேட்டு இங்ஙனமானால யானும அச்செக்கிணையீர்க்கும மற்றொருதாம் பேறுகிடைக்க உமது வாயிலிருக்கு மெள்ளினுட் சிறிதளியுமென் றிரந்துண்டுகளித்தார். ஒருகால அம்மருதூ ரெல்லையி லுருண்டு கிடந்த வெற்றுத்தலையைக்கண்டு மருதூ ரடைவா ரடிப்பொடி யணியவன்றோ விங்ஙனங்கிடந்தருள்வது, அப்பேறு எமக்குமாக வென்றத்தலையை யெடுத்தடுத்திரந்துவந்தனர். வேறொருநாள் திருக்கோயில வலம்வருகையில் சந்நிதியின ஓர் புறத்தே நாயமலமிருக்கக்கண்டு தனை யப்புறப்படுத்துவார்க்கென்னரசிற் பாதி தருவேனென்று சாற்றி, மறுவலம் வருகையில் ஒருவருமதை நோக்காராக, இனி யெடுப்பார்க்கென்னரசு முற்று மளிப்பேனென்று சாற்றிச் சென்று, மூன்றாமுறை வலம்வருமளவும் யாரும தொடாமைகண்டு தாம தமது மேலிருந்த உத்தரியத்தாலவாரியெறிந்தார். பிறிதொருநாள ஊர் உலாவருகையில வேப்பங்கனி யுதிர்ந்திருக்கக் கண்டு அவை சிவலிங்கமாகத்தோற்றலின ஆராமை மேற்கொண்டு அவற்றினுக்கு விதானங்கள சமைப்பித்து ஆனந்தித்தனர் இங்ஙனம அப்பாண்டி வேந்தன விசாரமற்ற பத்தி பேரன்புடன பெருமானுக்குப பலவகைத்திருத்தொண்டும செய்து வருநாளில விக்கிரம சோழர் திருமகளார், இலக்குமி, சரசுவதி, இந்திராணி முதலிய தெய்வமாதர்கள யாவருமவணங்கும பேரழகும சாயலும வாய்ந்த காந்திமதியென்னும பெயரை யுடையவரைத் திருமணஞ்செய்தன றிரவில பள்ளியறைக்குச்சென்று மனைவியார் திருவடியைநோக்கி, இம்மாதரசு நமமருதவாணருக்குத் தக்கவளாமே யென்றெண்ணி அம்மனை மனைவியார் காமபற்றி ஆலயத்திற்குட்புகுதலும, அத்தருணம ஊரடங்கி இராத்திரி நடுநேரமாகவே, அர்த்தயாம பூசை நிறைவேற்றித் திருக்காப்புச்செய்து அகம்படித்தொண்டரும புறம்படித்தொண்டரும தத்தமிடஞ்சென்றனராகவே அம்மன்னவர் பெருமான திருவாயிற்புறத்துநின்று, விரைவோடு "ஐய! மருதப்பா!" என்றழைத்துத் திருக்கதவைத்தட்டலும், பெருமான், அவ்வேந்தின அன்பு வலைப்பட்டாராதலின. வரகுணா? வந்தேன! வந்தேன்!! என்றோடிவந்து திருக்கதவந்திறப்ப, உட்சென்று, எம்பெருமானே! இம்மாது தேவரீர திருவுளப் பாங்கினுக்கு ஆமேயென்று கொண்டுவந்தேனென்ன அங்ஙனே பெருமானும அவர் கருத்தினுக்கிசையக்காட்டிச் சிவலிங்கத்தினிட மாகவயிக்கஞ் செய்துகொண்டனர். வரகுணதேவரும திரும்பித் தம்மரண்மனை புகுந்து பெருங்களிப்புடனிருந்தார். கோயில பழுதவண்ணம திருக்கப்பணைக்க

கேட்டீர்களோ முனிவர்களே! மறுநாள் வைகறையில் திருவனந்தலுணர்த்த, கோயிற்றுறையா ரனைவருந் திருக்காப்பவிழ்த்துட்சென்றபோது சிவலிங்கப்பெருமானுக்கு ஓர் புறத்து, வளைமுதலிய வணிந்த பெண்கரமொன்று மணிக்கட்டு மட்டும் வெளிப்பட்டிருக்கக்கண்டஞ்சி அனைவருமொரு முகமாக வரகுணச்செல்வர்பாற்சென்றறிவித்தலும், அவ்வரசர்பெருமான் அச்சமுநாணமு மேற்கொண்டு பெருமான் சந்நிதியடைந்து அம்படித்தொண்டர்கள் தமக்கு அறிவித்தவண்ண மிருக்கக்கண்டு, பெருங்கவலையும் துன்பமும் மேலிட, எம்பெருமானே! பாவியேன் பற்றிய வெச்சிலன்றோ அக்கரத்தினையுட்கொள்ளாது விட்டபடியென்றிரங்கி விண்ணப்பித்து நிற்றலும், யாவரும் கேட்கும்படி அசரீரியால் "ஐய! வரகுண! உன்பணிவை யுலகறியச்செய்ய வைத்தபடியன்றி வேறல்ல" என்று பெருமான் கட்டளையிட்டருளியவுடனே, அங்கிருந்தாரனைவரும் காணும்படி வெளிப்பட்டிருந்தஅக்கை, சிவலிங்கத்துள் மறைந்தது. தேவர் பூமழைபொழிந்தனர். அந்தரதுந்துபி முழங்கிற்று. அடியவர் அரகரமுழக்கஞ்செய்தனர். எவ்வுயிரும் பேரின்பவெள்ளத்துள் மூழ்கின. அப்பால் வரகுணதேவரும் பலதிருத்தொண்டுசெய்து பெருமான் திருவடி நீழலை யடைந்தனர். கேட்டீர்களோ முனிவர்களே! பத்தியினிலக்கணம் இப்படி அசாரமற்றபடியில் வரம்பற்றதாக விருக்கின்றது. தேவர் மூவர் யாவர்க்கு மரிய சிவன் அன்பர்க்கெளியனாகவிருக்கின்ற தன்மைகண்டீர்களோ? அதனாலன்றோ "மெய்யன்பை யுடையாய்பெநான்வேண்டுமே" என்றது அருட்டிருவாசகம். என்று சொல்லி மனமுருகித் திருவருளைத் தியானித்து அப்பால் பட்டினத்தடிகள் சரித்திரத்தினை முனிவர்கட்குத் தொடங்கினர்.

பட்டினத்துப்பிள்ளையார் மறுபடியும்
திருவெண்காடு அடைந்தது.

கேளும் முனிவர்களே! நமது பட்டினத்தடிகள் திருவெண்காட்டை யடைந்த வளவிலே திருவெல்லையைப்பணிந்து திருவீதி வலம்வந்து கோபுரத்தை வணங்கிப் பெருமான் சந்நிதி யடைந்து அன்பு பெருக உரைதடுமாறி யுரோமஞ்சிலிர்ப்பக் கரமலர் குவித்துக் கண்ணீர்ததும்ப ஆநந்தபரவசராய் மனங்குழைந்து குழைந்துருகப்பாடுவாராயினர்,

திருச்சிற்றம்பலம்.

திருவெண்காட்டுத் திருவிசைப்பா.

பூதமுங்கரணம் பொறிகளும்புலனும் பொருந்தியகுணங்களோர்மூன்றும், நாதமுங்கடந்தவெளியிலேநீயுநானுமாய்நிற்குநாளுளதோ, வாதமுஞ்சமயபேதமுங்கடந்தமநோலயவின்பசாகர

னே, ஏதுமொன்றறியேன்யானுநின்செயலேயிறைவனேயேகநா
யகனே. (க)

யாவரேயிருந்தும் யாவரேவாழ்ந்தும் யாவரேயெமக்குறவா
யும், தேவரீரல்லாற் றிசைமுகமென்கருத் திருவுளமறியவேறுள
தோ, பாவலரொருவன் செந்தமிழ்க்கிரங்கிப் பறவையாரூடலைமா
ற்ற, ஏவலாளாகியிரவெலாமுழன்றவிறைவனேயேகநாயகனே.()

உண்டதேயுண்டு முடுத்ததேயுடுத்து மடுத்தடுத்துரைத்ததே
யுரைத்தும், கண்டதேகண்டுங் கேட்டதேகேட்டுங் கழிந்தனகடவு
நாளெல்லாம், விண்டதா மரைமேலன்னம் வீற்றிருக்கும்விழவறா
வீதிவெண்காடா, அண்டரோபோற்றவம்பலத்தாடுமையனேயுய்யு
மாறருளே. (௩)

திருச்சிற்றம்பலம்.

## திருநாங்கூர் - சேந்தனார்வரலாறு.

என்றசெந்தமிழ்த்திருவிசைப்பாபாடி வணங்கிப் புறம்போந்து அங்குவீற்றிருக்குநாளில், முன் அரசனால் சிறையுளகப்பட்டிருக்குஞ் சேந்தனாருடையமனைவியாரும், மைந்தராகியசிறுவரும், பட்டினத்தையர் இங்கு எழுந்தருளியிருக்குஞ் செய்தி கேள்வியுற்று வந்து அவரது திருவடிகளிலே வணங்கிக்கோவென்றுகதறியழுதார்கள். அப்போது, ஐயர் இரக்கமுற்று, நீவிர்யாவர் நுமக்கடுத்தகுறையென்ன, என்றுவினவ, அவர்கள் நடந்தசெய்திகளையெல்லாம் விண்ணப்பித்துச்சேந்தனார் சிறையை விடுவித்தருளவேண்டுமென்று இரந்தார்கள். அதுகேட்டையர்பேரருளாளராதலால் திருவுளங்கனிந்து, சிவபெருமான் சந்நிதியிற்சென்று,

மத்தளைதயிருண்டானுமலர்மிசைமன்னினானும்
நித்தமுந்தேடிக்காணாநிமலனே * யமலமூர்த்தி
செய்தலைக்கயலார்நாங்கூர்ச்சேந்தனைவேந்தனிட்ட
கைத்தளைநீக்கியென்முன்காட்டுவெண்காடுளானே.

என்றதிருப்பாடலையருளிச்செய்தமாத்திரத்தில், பத்திவலைப்பட்ட பரங்கருணைக்கடலாகிய சிவபெருமான் மூத்தபிள்ளையாரைநோக்கி நஞ்சேந்தனையரசனிட்ட சிறைக்களினின்று நீக்குகவென்றருளிச்செய்யக்கணேசப்பெருமானார் அங்ஙனே துதிக்கரத்தாற்சிறைக்களத்திருந்த சேந்தனார்தளையவிழ்ப்பித்துத் தூக்கித்திருவெண்காடர்முன்விட்டருளினார். சேந்தனாரும் துயிலுணர்ந்தவர்போல், வசமற்றிருந்தவர் தெளிந்தெழுந்து எதிரிற்கும் தமதுகுருமணியாகிய திருவெண்காடரைக் கண்டு திடுக்கிட்டுப்பணிந்து, எம்பெருமானே! அரசனிட்டசிறையினின்றும் மீட்பித்தாற்போலப்பாசச்சிறையினின்று மீட்பித்தருளவென்று மீட்டும்பணிந்தார்.

* நீபோயின்று - என்பாடங்கூறுவாருமுளர்.

அப்போது, பட்டினத்தடிகள் இவர்பரிபாகநோக்கி, ஐயரின் குடும்பத்தோடு காட்டுவிறகினைச் சிறுவிலைப்பொருளைக்கொண்டு இவன்னபரொருவரை யூட்டியுண்டு திருத்தில்லைப்பதியிலுறைதி என்று கட்டளையிட்டருளிச் சீகாழிநோக்கி எழுந்தருளினார். அங்ஙனே சேந்தனார்-அவரையுந் திருவெண்காடுடையாரையும் பணிந்து சிதம்பர தலத்தை யடைந்து குரவனாணைப்படி யொழுகுவாராயினர்.

இங்ஙனமொழுகுநாளில் ஓர்கால் ஏழுநாள் அடைமழைபற்றி மனிதரியங்காவகைப் பெய்யப்பசியால் வருந்திக்காடுசென்று அரிதுமுயன்று விறகுகொண்டுவந்தூரிலே மாறிப்பெற்றமாவைக்கொண்டுசென்று மனைவியார் கரத்தளிப்ப அவர்களியமுது சமைத்துத் தங்கணவனார்க்குத்தெரிவிப்பக் குரவனாணைப்படி யமுதூட்டச்சிவனடியாரைத்தேடி ஊர்முழுவதுந் திரிந்தலைந்து கோயின்மண்டபந்தோறும் புக்குநாடுமையில, இவரது பத்திப்பேரன்பமுதுசெய்ய, அழகிய திருச்சிற்றம்பலமுடையாரே மூப்பினாற்றளர்ந்த ஓர் அடியவர்திருவுருக்கொண்டு மிகுபசியால்வருந்தினாரைப்போல் ஓர்மண்டபத்திற்றங்கியிருக்கக்கண்டு, திருவடிகளிற்பணிந்து எம்பெருமானே! ஏழையேன்சிற்றிருக்கைக்கெழுந்தருளிய முதுகொள்ளத்திருவுளமாமே என்ன, ஐயருமதற்கிசைந்து பின்றொடர்ந்துவர, இருக்கை சேர்ந்து குளிர்போக்கிப் பாதம்விளக்கிப் பீடத்தெழுந்தருளப்பண்ணிக் களியமுதுபடைக்கப்பெருமானுமமுதுண்டு சேடத்தை [illegible]னருணையின முடிந்துளெழுந்தருளித் திருவம்பலம்புக்கு அங்குத்தரிசனத்துக்கு வந்திருந்த திருமால் அயன்முதலிய வானவர் முனிவராயாவர்க்கும் அக்களியமுதின் சுவையைக்கூறிச் சேடப்பிரசாதமளித்துச் சிவகாமியார்களிப்ப வீற்றிருந்தார். சேந்தனாரும் தங்குடும்பத்தோடு குறையற விரதமுடித்தனராயச் சேடவமுதுண்டு பரயோகநித்திரையிலெழுந்தருளியிருந்தார்.

அங்ஙனமிருக்க, சிவநேசத்திற் சிறந்த செல்வச சோழமகாராஜன் நாடோறும் திருவம்பலத்திற்சிறந்தபூசனைநடத்திப் பூசைமுடிவில இறைவனருளால எழும்மணியோசைகேட்டு அமுதுகொள்ளும விரதம்பூண்டான். அன்று நடுவிராத்திரியாயும் மணியோசைகேளாமையால் மனங்கலங்கி வருத்தமுற்றுத் தரையிற் கிடந்துயின்றானாக, சேந்தனாரன்பை வெளிப்படுத்தும்படி கனவில், அம்பலத்தழகர்சென்று, அரசனே! வருந்துதலொழி இன்று நம்முடையசேந்தன்நிவேதித்தகளியமுதுண்ணச்சென்றிருந்தனமாதலின் நீசெய்வித்த பூசனைக்கு வரத்தடைபட்டதென்றருளி மறைந்தார். உடனே அரசன் விழித்தெழுந்தாராமை மேவிட அச்சேந்தனார் பேரன்பும் பத்தியும் எவ்வகைத்தோ? எவ்வாறவரையான் தரிசிக்கப்பெறுவேனென்று வருந்தித் திருவருளைச்சிந்தித்திருந்து

அருணோதயமாதலும் நித்தக்கடன் முடித்துத் திருக்கோயிலுக்கு வந்தான். அங்கு, திருவம்பலத் திருமுற்ற முழுவதும் தெய்வமணம்வீசிக்களியமுது உதிர்ந்துகிடத்தலைத் திருவம்பலத்தடியரும் தில்லைவாழந்தணரும் தானுமாகக் கண்டு தன்கனவைக்கூறி, அவர்பத்தியைத் துதிக்க, யாவரும் அவரைத் தரிசிக்கும் விருப்பமுடையராயிருந்தனர். அஃதங்ஙனமாக. அப்போதுமார்கழி ஆதிரைத்திருவிழா நாளாகத் தேரணிவிழா நடத்தற்கு முன்னநாள் மழையாற்றடையுற்றன்று மழைநிற்றலும் நடேசப்பிரானைத்திருத்தேர்விழாக்கோளுக்கெழுந்தருளப்பண்ண, தேர்நடவாதாக, யாவரும் வருந்துகையில், அங்குத்தரிசனைக்குவந்திருந்த சேந்தனாரைக்குறித்து, அவ்விடத்துத்தில்லைவாழந்தணர் அரசன்முதலிய எல்லாரும் கேட்கும்படி, "சேந்த! தேர் நடக்க நம்மைப் பல்லாண்டுபாடுக" என்றோர் அசரீரிஉண்டாகலும், சேந்தனாரும் மனங்குழைந்துருகி எம்பெருமானே! நாயக்குத்தகவிசிட்டென்னையுமோர் பொருளாக்கி இத்திருப்பணி பூட்டிய திருவருட்கென்னை கைம்மாறென்று, ஆங்ஙனே.

திருச்சிற்றம்பலம்.

கோயில், திருப்பல்லாண்டு. பண் - பஞ்சமம்.

"மன்னுகதில்லைவளர்கநம்பத்தர்கள்வஞ்சகர்போயகலப் [ங்க
பொன்னின்செய்மண்டபத்துள்ளேபுகுந்துபுவனியெல்லாம விள
அன்னநடைமடவாளுமைகோனடியோமுக்கருள்புரிந்து
பின்னைப்பிறவியறுக்கநெறிதந்தபித்தற்குப்பல்லாண்டுகூறுதுமே.

"எந்தையெந்தாய்சுற்றமுற்று மெனக்கமுதாமெம்பிரானென்றெ
சிந்தைசெயுஞ்சிவன்சீரடியாரடிநாய்செப்புமுறை [ன்று
அந்தமிலானந்தச்சேந்தனைப்புகுந்தாண்டுகொண்டாருயிர்மே
பந்தம்பிரியப்பரிந்தவனேயென்றுபல்லாண்டுகூறுதுமே. [ற்

திருச்சிற்றம்பலம்.

என்றருளிச்செய்தலும் தேர் நடந்து வீதிவலம்வந்து நிலைசேர்ந்தது. பூமழைபொழிந்தது. வானதுந்துபி முழங்கிற்று, அடியவர்அரகர என்றார்த்தனர்.

அப்போது தில்லைவாழந்தணர் அரசன்முதலிய யாவரும் மிக்ககளித்துச்சேந்தனாரைவணங்க. அவர்கள் வணங்குமுன் தாம் வணங்கித் திருவிடைக்கழிசென்று, அங்கு முருகப்பிள்ளையாரை,

திருவிசைப்பா. திருவிடைக்கழி.

மாலுலாமனந்தந்தென்கையிற்சங்கம்வவ்வினான்மலைமகன்மதலை
மேலுலாந்தேவர்குடிமுழுதாளுங்குமரவேள்வள்ளிதன்மணாளன்
சேலுலாங்கழனித்திருவிடைக்கழியிற்றிருக்குராநீழற்கீழ்நின்ற
வேலுலாந்தடக்கைவேந்தனென்சேந்தனென்னுமென்மெல்லியலிவளே.

என்ற பதிகம்பாடித் திருவாவடுதுறை, திருவீழிமிழலை, திருவாரூர் முதலிய திருப்பதிகளை யடைந்து பெருமானைத் தரிசித்துத் திருவிசைப்பா திருப்பதிகம்பாடிக் குருவருளால் குடும்பத்தோடும் சிற்சபையிலாட வெடுத்த திருவடிநீழலில் வீற்றிருந்தருளினார்.

திருவெண்காடர் புகழை உலகெல்லாம் பரவித் துதித்துய்ந்தன.

இங்ஙனம் சேந்தனாரை முத்திவழிக்கு விடுத்து, ஸ்ரீபுகலிப்பதியடைந்த பட்டினத்தடிகள் ஆளுடையபிள்ளையார் திருவவதாரஞ்செய்த திருப்பதியென்று எல்லை வலம் வந்து பணிந்து சென்று கோயிலை யடைந்து திருத்தோணி வீற்றிருந்த பெரிய பெருமானையும் பெரியபிராட்டியையும் வணங்கி யன்பு பெருகினராய்,

திருக்கழுமலம் மும்மணிக்கோவை.

"திருவளர்பவளப்பெருமலை மணந்த"

என்ற விணைக்குறளாசிரியப்பா முதலாகவெடுத்து மும்மணிக்கோவைபாடி அங்கு சில பகல்வீற்றிருந்து, உலகெலாமுய்யச் சிற்சபையிலாடுந் திருநடங் கும்பிடவோரெண்ணமுண்டாதலும்,

"அத்தனை முப்பத்து முக்கோடித் தேவர்க்கதிபதியை
நித்தனையம்மைசிவகாமசுந்தரிநேசனையெங்
கத்தனைப்பொன்னம்பலத்தாடுமையனைக்காணக்கண்
ணெத்தனைகோடியுகமோதவஞ்செய்திருக்கின்றதே"

என்றருளிச்செய்து கழுமலமுடையாரைச் சென்று வணங்கி விடைபெற்றுப் புறப்பட்டு, வழிக்கணுள்ள திருப்பதிகளையெல்லாந் தரிசித்துக் கொள்ளிடக்கரையேறிப் பெரும்பற்றப்புலியூராந் திருவெல்லையடைந்து பணிந்துட்புகலும், நந்தனவனங்களெல்லாம் சிவநேசருசிறந்த மெய்யன்பர்போலத் தாது வெண்பொடிபூசி மலர் முகங்கண்ணீர் வார வண்டொலி பஞ்சசெபிக்கொட்டக்கண்டு வணங்கியப்பாற்செவலுகையில் பரதநாடகஞ் செய்யு மாதர்போற் பூங்கொடியசைய, குயில், தவளை, நாரை, வண்டு ஒலிப்பவே பல்லிய முழக்கிப்பாணர்பாடும் பாட்டொலிகாட்ட, சண்பகமரும்பிளக

---

* திருவாதிரைநாளில் இறைவருக்குக் களி நிவேதனம் செய்யும் சம்பிரதாய மிதுமுதலாக வுண்டாயிற்று. இச்சேந்தனார் திருத்தொண்டின்னிலைமையைப்பற்றிப் பின் சந்தானாசாரியார் நால்வருள் ஒருவராகிய கொற்றங்குடி வள்ளலாரும்

"அவிழ்ந்த துணியில் விழ்ந்தவமுதை
யவிழ்ந்தமனத்தோடளித்த - தவிழ்ந்தசடை
வேந்தனாக்கினமுதமாயிற்றேமெய்ப்பத்தி
சேந்தனார்செய்த்திறம்."

என்று துதித்தவாற்றாலும் காண்க

## சிதம்பரமடைந்தது.

சேந்த, தாமரை பூத்துப் பாலிகைவண்ணஞ் செய்யத், தெங்குபூரணகலசமேந்த, கமுகுபாளைவிரித்துக்கவரியசைப்ப, கொம்பிற்றேத்தடை கண்ணாடிகாட்டப், பட்டினத்துப்பிள்ளையார் வரவுகண்டு அசரங்களு மெதிர்கொள்ளப்போனற்ன. இங்ஙன மிவ்வணிகளைக்கண்டு பெருமான் திருவருட்டண்ணளியை எண்ணி, நான்மறை முழக்க மறாத திருநகரத்துட்புகுந்து, துறக்கநாடுபோலும் செல்வ நிரம்பிய மாடங்களையுடைய திருவீதி நான்கையும் பணிந்து வலமவந்து, எழுநிலைக் கோபுரவாயிலை வணங்கித் திருமாளிகையைப் பிரதக்ஷிணம்பண்ணிக் கனகசபை தொழுது சிற்சபையிற் சென்று உலகாடவாடும் ஆநந்தத்திருநடனம் கண்டார். கண்டவளவிற் றம்மைக்காணாராய் நெடுநேரம் தம்பித்துக்கம்பித்து நின்று பின் தெளிவு சிறிதுவரக் கரைந்து கரைந்துருகி யன்பின் கடல்மடை திறப்ப

கோயினான்மணிமாலை

வெண்பா

பூமேலயனறியாமோலிப்புறத்ததே
நாமேபுகழ்ந்தளவை நாட்டுவோம் - பாமேவு
மேதக்கநான்மறையின்மேலையிடத்துகந்தானம்பலத்தே
கூத்துகந்தான்கொற்றக்குடை.

என்றெடுத்து நான்மணிமாலைபாடிக் குடந்தம்பட்டுக் கூத்தாடித் திருவருள் வெள்ளத்துட்படிந்தாராய் அரிது புறம்போந்தார். பின்பசியெழலும் (பனஞ்சவாடகப்பொற்பாதம்) என்று பாடுதலும், உலகமாதாவாகிய சிவகாமியார் வேதியமாதுருவமாய் உச்சி நிவேனப்பிரசாதத்தினை வட்டகை நிறையும் கொடுத்தருள உண்டு பசியாறினவுடன் மறைந்தருளலும் பிராட்டியாரென்றுணர்ந்து ஆராமை மிகுதியாலே,

கட்டளைக்கலித்துறை

ஓடெடுத்தத்தளாடையுஞ்சுற்றியுலாவிமெள்ள
வீடுகடோறும்பலிவாங்கியேவிதியற்றவர்போ
லாடுமருட்கொண்டிங்கம்பலத்தேநிற்குமாண்டிதன்னைத்
தேடுங்கணக்கென்னகாண்சிவகாமசவுந்தரியே.

என்று துதித்து அலைவற்ற சிவயோகானுபவத்தில் வீற்றிருந்தனர். அங்ஙனமிருப்பவர்,

சோறிடுநாடுதுணிதருங்குப்பைதொண்டன்பரைக்கண்
டேறிடுங்கைகளிறங்கிடுந்தீவினையெப்பொழுத்
நீறிடுமேனியர்சிற்றம்பலவர்நிருத்தங்கண்டா
லூறிடுங்கண்களுருகிடுநெஞ்சமென்னுள்ளமுமே.

என்றபாடலை யருளிச்செய்து காலங்கடோறுஞ்சென்று சிற்சபைத்திருநடங்கும்பிட்டு "நினைமின்மனனே" யென்பதுமுதலிய அனேகதிருப்பாடல்களை யருளிச்செய்து, பலநாள் கழித்த, திருவொற்றியூர்க்கு வருகவென்ற ஞாபகந்திருவருளாற் றோற்றுவித்தலும்,

"பாற்கடல்கடையப்படுங்கடுவெண்ணெயை"

என்றவடைக்கலத்திருவகவல்பாடி (வானநேடுமறையேயோ) என்றெடுத்து (நானறேடாஞரோநாஞரோ) என்று அருளிச்செய்து திருநடங்கும்பிட்டுத் திருவம்பலந் தொழுது மாளிகை வலம் வந்து கோபுரவாயிலைவணங்கி வீதிதோறும்பணிந்து புறம்போந்து வழிக்கொண்டார்.

வழியில் திருத்தினை நகரடைந்து சிவபெருமானை வணங்கியங்குநின்றுங்கெடில நதிக்கரையடைந்து, ஆளுடையவரசுகளைக் கல்லாடமணா கடலிலேகட்டியிட்ட கற்றூணே மிதப்பாகக்கரையேற்றுவித்த திருநதியென்று பணிந்து மூழ்கித் திருப்பாதிரிப்புலியூரிலடியார்களுக்குத் தோன்றாத்துணையாயிருப்பாரைவணங்கியருந்தமிழ்பாடிச் சிலநாளிருந்து திருவதிகையடைந்து புரமட்டவீரட்டவாணரைப்பணிந்துபாடித் திருத்துறையூர், திருவாமூர், திருநாவலூர், திருவெண்ணெய்நல்லூர், திருக்கோவலவீரட்டமுந் தொழுது விருத்தகிரியைத்தரிசித்துத் திருவண்ணாமலையைக்குறுகினார்.

குறுகுதலும் மதூரத்தே மாலயன்தேட நின்றமலைக்கொழுந்தாரைக்கண்டுவணங்கி யூருள்ளேபோந்து திருவீதிபணிந்துகோபுரந்தொழுது திருக்கோயில்வலங்கொண்டு சந்நிதியடைந்து பெருமானையும் பெருமாட்டியையும் கும்பிட்டுத்துதித்து அருந்தமிழ் பலபாடி அன்பு மீதூரவுருகிப்பழிச்சி உடையவரைப் பிரியாவிடை கொண்டு புறம்போந்து திருமலைவலம்புரிந்து அங்கு சிலநாள் வீற்றிருந்தார்.

திருக்காஞ்சிபுரமடைந்தது.

அப்பால் அங்கிருந்து புறப்பட்டுத் திருவோத்தூர் முதலிய திருப்பதிகளைத்தரிசித்துச்சென்று திருக்காஞ்சிநகருக்கணித்தாகலும், திருவெல்லையைப்பணிந்து சிவலோகம்போலும் இருக்கும் சோலை நந்தவனம் முதலியவற்றை வணங்கிச்செல்லுகையில், திருவெண்காட்டடிகள் எழுந்தருளும் வைபவத்தைக்கேட்ட திருக்காஞ்சிப்பதிவாழுஞ் சிவனடியார்யாவரும் அட்டமங்கலம் கொண்டு ஆரணமுழங்க மங்கலவாத்தியத்தோடு எதிர்கொண்டு வந்து வணங்க, அவர்கள்வணங்குமுன் தாமும் வணங்கித்திருமதிலவாயில் கடந்து, அறங்களெல்லாமோங்க மூவரும் தேவரும் முனிவரு நாடோறும் பெருமான் திருவடிவணங்கித்திரியும் வீதிபணிந்து கோபுரவாயிலைக்கும்பிட்டுத் திருவேகம்பரத்தைவலங்கொண்டு வழுத்

ஆ அன்பு பெருக ஆராமையால் உளமுருகக் கண்களி லானந்தநா வாரத்தொழுது.

கச்சித்திருவந்தாதி.

கட்டளைக்கலித்துறை.

மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேனமிக்கநம்பணிசெய்
கைத்தொண்டாதம்பிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுன்னைப்போற்றுகின்ற
வித்தொண்டனேன்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே.

என்றதுமுதலாகத்திருவந்தாதிபாடிப்புறம்போந்தங்கிருந்து திருவேகம்பமாலை, கச்சித்திருவகவல் முதலிய திருப்பாடல்களையருளிச்செய்து கச்சிக்காரோணத்தருகில் வீற்றிருக்கு நாளிலொரு நாள் பசித்தீ மிகவருந்த, ஆற்றாராய்,

வெண்பா

அத்திமுதலெறும்பீறானவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந்தேசிகா - மெத்தப்
பசிக்குதையாபாவியேன்பாழ்வயிற்றைப்பற்றி
யிசிக்குதையாகாரோணரே.

என்றருளிச்செய்தார். உடனே அறப்பெருஞ் செல்வியாகிய வம்மையார் காமக்கோட்டத்திருந்து அந்தணமாதுருவாய் வந்து அமுதளிப்பவுண்டு பசியாறிக்காமக்கோட்டம், கச்சபாலயம், ஓணகாந்தன்றளி, கச்சிநெறிக்காரைக்காடு, அனேகதங்காபதமுதலியதிருக்கோயில்களைப் பணிந்து பலதமிழ்மாலை பாடி அனேகம் அற்புதங்களை விளக்கச் சிலநாள் வீற்றிருந்து, அங்குநின்றும் புறப்பட்டு திருவாலங்காடு, திருப்பாசூர், திருவெண்பாக்கம் முதலிய திருப்பதிகளை வணங்கி, கண்ணப்பதேவரும், சிவகோசரியாரும், சிலந்தியும், காளனும், அத்தியும் பூசித்துப் பேறுபெற்றதும் கடைச்சங்கவாணராகிய நக்கீரதேவர் அருளிச்செய்த திருவந்தாதியாகிய கொழுத்த தமிழ்ச்சுவையுண்டிருந்ததுமாகிய காளத்தித் திருமலையை வணங்க எண்ணிவழிச்செல்வாராயினார்.

திருக்காளத்தியடைந்தது.

அங்ஙனம் பட்டினத்தடிகள் செல்லுகையில், திண்ணனை முன்வலிதாண்ட திருவருளுள்ளே தூண்ட ஆராவன்பு மீதூர்ந்து,

"முப்போதுமன்னம்புசிக்கவுந்தூங்கவுமோகத்தினாற்
செப்போதிளமுலையாருடன்சேரவுஞ்சிவன்வீடு
மப்போதுகண்கலக்கப்படவும்மமைத்தாயையனே
யெப்போதுகாணவல்லேன்றிருக்காளத்தியீச்சுரனே."

என்று துதித்து இரவுபகலாகாது விரைந்து நடைகொண்ட போது, வழியில் பாம்புகள் மணிவிளக்கேந்தினின்றன. காட்டியானைகள்கொடிபிடித்து முன் நடந்து முள்முதலியவிலக்கிவந்தன

புலிகள்வாலினால் மார்க்கம் விளக்கிச் சுத்தஞ்செய்தன. புல்வாய்மான் மரைமுதலியன முன்னும்பின்னும் அணிவகுத்து வழிகாட்டுவனவாயின. மயில் வாரணமுதலியன சிறகுகளால் காற்றெழுப்பணியும் வெயிலுக்கு நிழல் பரப்பியும் சென்றன. குரங்கு முசுமுதலியன நல்லகனி கிழங்குவகைகளைத் தந்துபசரிப்பனவாயின. இங்ஙனம் விலங்கு பறவைகள் செய்யும் திருப்பணியை ஐயர்கண்டு, இத்திருப்பணி எம்மையுடைய காளத்தியாளவார் திருவடிக்கே பொருந்துவவென்றும், பாம்புகளை நோக்கி யிவைமுன் எம்பெருமானை மணிகள் சாத்திப்பூசித்தகாளர் மரபோ எனப் பணிந்தும், நெடியோரிச் செல்லும் யானையை ஐயனைமுன்னருச்சித்த அத்தியின் சுற்றமோவென்று தொழுதும், மான்களைநாகங்களை அப்பா கையமைந்தமானின் உறவோவென்று துதித்தும், அவ்வாறே மற்றையவற்றையும் சிவபெருமான் திருவடி நேயப்பேறுள்ளவற்றினமாக வணங்கியுஞ் செல்பவர், கண்ணப்பதேவர் திருத்தொண்டினையும் மற்றையடியார் திருத்தொண்டினையும் எண்ணி யெண்ணி மனங்குழைந்துருகி,

"வாளா னமகவரிந் தூட்ட வல்லே னல்லன் மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனல்லன் றொண்டுசெய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனல்ல னானினிச்சென்
றாளாவ தெப்படியோ திருக்காளத்தி யப்பருக்கே."

என்பதுமுதலாகத் திருத்தொண்டத்தொகையுட் குறித்துள்ள அடியவர் திருத்தொண்டினைத் திருப்பாட்டாக வருளிச்செய்து, திருமலையைத் தூரத்தே கண்டுதொழுது, அணித்தாகச் சென்றடிவாரம் பணிந்து திருமலைவலங்கொள்வார் அங்கு தவஞ்செய்யும் பெரியாரையெல்லாம் வணங்கி, வேறுதொழில் செய்யு மவரையுங் குறமகளிரையும் சிவகோசரியாராகவும் பெருமான் திருவடியடைந்த கன்னியராகவும் எண்ணிப்பரவிவந்து சந்நிதியடைந்து அன்புமீதூர வருந்தமிழ்பாடி யுடல நெக்குவிட்டுருகக் குழைந்துகுழைந்து பலவாறுதுதித்து அரிதுபுறம்போந்து அங்கிருக்குநாளில் ஆளுடையபெருமான் வடகைலைத் திருவோலக்கஞ்சேவிக்கவிரும்பி,

"மந்திக் குருளையொத் தேனில்லை நாயேன் வழக்கறிந்துஞ்
சிந்திக் குஞ்சிந்தையை யானென்செய் வேனென்னைத் தீத்தகற்றிப்
புந்திப் பரிவிற் குருளையை யேந்திய பூசையைப்போ
லெந்தைக் குரியவன காணத்தனே கயிலாயத்தனே."

என்ற திருப்பாடலைப் பாடலும் தென்கைலைவாணர் அவ்வடகைலைக்கோலந் தரிசிப்பித்தருளத் தரிசித்துப் பலதமிழ்ச்செம்பாடல் பாடி அருள்விடைபெற்றுத் திருமலை வணங்கித் திருவொற்றியூரை

க்கருளி எழுந்தருளினார் கேளும் முனிவர்களே! எங்கும் சிவன் பரிபூரணனென்று நன்குணர்ந்த சிவஞானிகளும் அனுபவமுதிர்ச்சி பெறவும் உலகவர்த்தனையோரிடம் பற்றின்றே லொழியாதெனவும் நம்மையுணர்த்தவேண்டி யிங்ஙனம் தலங்கடோறும் எழுந்தருளிய பல அற்புதங்களை விளக்கினாரென்றால் வேறியாம் சிந்திக்கத்தக்கதென்னை யுள்ளது. நெருசியியறைகைப் புதியதையே நாடுவதாகவேதும் மேருக்கவுண்மையை யுணர்த்துங் கருணையானன்றோ அப்பெரியார்த்திறங்காட்டப் பிடித்தருளிச்செய்தது என்றுபமன்னியர் அருளிச்செய்தார்.

அப்போது முனிவர்கள் அவரை வணங்கி, சுவாமி! அவ்வாறாயின் இப்பட்டினத்தடிகளே தனித்திருவெண்பா,

"ஆரூரரிங்கிருக்கவவ்வூர்த்திருநாளென்
றூரூர்கடோறுமுழலுவீர் - நேரே
யுளக்குறிப்பைநாடாதவூமர்காணீவிர்
விளக்கிருக்கத்தீத்தேடுவீர்"

என்ற தலையாத்திரை செய்பவரை நோக்கி மறுத்துரைத்தருளியவாறென்னையென்று வினவ, ஞானாசிரியராகியவுபமன்னியர் கூறுவார்: கேளும் முனிவர்களே! இத்திருவெண்பாவிற் கூறியது, சாத்திரமுதிர்ந்து சகசம் பிறந்து காருணியத்தால் தலையாத்திரை செய்கின்ற நல்லோர்களையன்று, ஞானாசாரியர் வேண்டுமென்று மூர்த்தி, தலம், தீர்த்தம் இவைகளைத் தொடங்கித் தவஞ்செய்யுமறவர்களையுமன்று, உண்மையுணராது உலகபோகம் வேண்டி யறிவின்மையாற் காமிய தவமாகிய தலயாத்திரை செய்வாரை நோக்கியவாறும். மூர்த்தியருச்சனை விடயத்திலும், "பச்சிலையிடினும் பத்தர்க்கிரங்கி மெச்சிச் சிவபத வீடருளுபவனை" எனவும் திருக்கழுமல மும்மணிக்கோவையுள், "தோணிபுரேசா - அடித்தாமரைசென்று சாருதற்குப் - போதும் பெறாவிடிற் பச்சிலையுண்டு புனலுண்டெங்கும் ஏதும் பெறாவிடினெஞ்சுண்டு" எனவும் அருளிச்செய்த இப்பெரியோர், தனிப்பொதுத் * திருவிருத்தத்துள், "சொல்லிலுஞ் சொல்லின் முடிவிலும் வேதச்சுருதியிலும், அல்லிலுமாசற்ற வாகாயந்தன்னிலுமாய்ந்து விட்டோர் - இல்லிலுமன்பரிடத்திலுமீசனிருக்குமிடம் - கல்லிலுஞ்செம்பிலுமோ விருப்பானெங்கள் கண்ணுதலே" என்றார். ஏனெனில் முத்திசாதனமாகிய பத்திசெலுத்துமிடம் குருலிங்க சங்கமம் என மூன்றும். இவற்றுள் உண்மை யுணர்ந்து அக்குருலிங்க சங்கமங்கள் மூன்றும் ஒக்கக்கண்டு பணிசெய்யும் பக்குவிகளொழிய, உண்மை யுணராது

* திருவிருத்தமென்று கலித்துறையை வழங்குமரபு திருநாவுக்கரசர் முற்றிருமுறையுட் காண்க.

மூர்க்கத்தால, கேவலவ்யபாதான காரணம் பற்றிக் குருவை மனித னென்றும அடியார்களைச் சாதாரண சீவர்களென்றும் தம்முளிக ழுந்து இலிங்கமொனறனையே பொருளெனக்கொண்டு நடிககின்ற காமியதவத்தினரையும, உலகபோகத்தை விருமபியுழலும வஞசக நடிபபினரையும் நோக்கிககூறியபடியாம. ஆனால் அவா தாமே தம தனுபவமாக "வெடடாத சக்கரம பேசாதமநதிரம் வேறொருவா க்-கெட்டாத புட்ப மிறையாத தீாததமினிமுடிந்து கடடாதலி ங்கங கருதாதநெஞசங் கருத்தினுள்ளே-முட்டாத பூசையன்றோ குருநாதன மொழிந்ததுவே" எனவும், உளியிடட கல்லையு மொ ப்பிட்ட சாநதையு மூதகதையறப் - புளியிட்டசெமபையும போற் றுகிலே றுயர்பொனனெனவே - யொளியிட்ட தாளிரண்டுளளே யிருததுவ துண்மையெனறு-வெளியிட்டடைத்துவைததே னினி மேலொனறும வேண்டிலனே" எனவுங்கூறியவாறெனனை யெனி ன்? தகரவித்தை சாாவான் மகவித்தை யெனனும ஞானவிதனை யிரண்டனுள் இவவையா தகரவிததையுடையராதலால, அது, மந திரம, கலை, வருணம, பதம, புவனம, தததுவமெனனு மததுவா வாறையு நியதிசெய்து மேனினற வருளைததரிசிததுப் பனையோக முற்றுசசிவததோடிரணடறற நிற்றன றுறைமையதாகவே, அம முறைமை விளககியபடியாம. கல்லையுஞசாநதையுஞ செம்பை யும் போறறுகிலேனென வாளாகூறி விடாது உயாபொனனெனப் போற்றுகிலேன எனக கொண்டு கூடடிமுடிந்ததுவே சானறும். இமமுனறும் இவாருளிசசெயத பூரணமாலை, நெஞசொடு மகிழ தல் என்னு மிவ்விரண்டுள விளஙககாண்க.

திருவொற்றியூரடைநததும் முததிபெற்றதும.

முனிவாகளே! அப்பால ஐயா திருவொறறியூரைக கருதிக கருதிய மனததினும கடிது வருவார், பெருமான திருவரு ளமுத மூறிபபெருசவே,

"கண்டஙகரியதாஙகணமூன றுடையதா
மண்டததைபபோலவழகிதாம - தொணட
உடலுருகததித்திககுமோஙகுபுகழொற்றிக
கடலருகேநிற்குஙகரும்பு."

என்ற தனிததிருவெணபாவைப் பாடிக்கண்ட சராசர முழுவதும் குருலிஙக சஙகமஙகளாககண்டு ஆராமை மிக அனபுபெருக,

"வாவியெலலாந்தீரத்தமணலெலலாம்வெண்ணீறு
காவனஙகளெலலாஙகணநாதர் - பூவுலகில்
ஈதுசிவலோகமென்றென்றேமெய்த்தவத்தோர்
ஓதுந்திருவொறறியூர்."

என்று திருவெண்பாவாறறுதித்துப் பலதரமும பணிந்தெழுந்து திருவெல்லையைக் குறுகிவணஙகியுட்புகுந்து திருவீதியடைதலும் தம்மையறியாதெழுந்த பேராசைக்கடலுண் மூழ்கி,

"ஓடுவிழுந்து சீப்பாயு மொன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன் - கடுவருந்துந்
தேவாதிதேவன்றிருவொற்றியூர்த்தெருவிற்
போவாரடியிற்பொடி."

என்றதனித்திருவெண்பாவோதி மேலுமேலுமடங்காதகாதலால்,

"சுடப்படுவாரறியார்புரமூன்றையுஞ்சுட்டபிரான்
றிடப்படுமாமதிற்றென்னொற்றியூரன்பெரும்பாரப்பில
நடப்பவர்பொற்பதந்தந்தலைமேற்படநன்குருண்டு
கிடப்பதுகாணுமன்மேவிதியேட்டைக்கிழிப்பதுவே."

என்று துதித்து அத்திருவீதியை அங்கவலம் வந்து சந்நிதியடைந்து, அடியவர்தங்க ளாராவமுதனை அடங்காதகாதல் பெருகவி யான்முகந்துண்டு அருட்கடலிலலைந்து அழுந்தி உடல் குழைய வென்பு நெக்கு விட்டுருக்கக் கரைந்து கரைந்து கண்ணீருங் கம்பலையுமாய்க் கைகளுச்சிமேலேற,

திருவொற்றியூர்த்தொகை.

"இருநிலமடந்தையியல்பினிலுடுத்த
பொருகடன்மேகலைமுக[illegible]மென்பப்பொலிந்த
வொற்றிமாநகருடையோய"

என்றெடுத்து அகவலெ[illegible]பாவொருபஃதாகிய ஒற்றியூர்த்தொகை பாடித்துதித்துத் தம்வசமிழந்து பரவசமுற்று நெடுநேரநின்று பின்தெளிந்து பிரியாவிடைபெற்று மீள்வார், பட்டம்பக்கத்து நிரம்பிய பேரழகனார்திருவடிகளிலே,

"ஐயுந்தொடர்ந்து விழியுஞ்செருகியறிவழிந்து
மெய்யும்பொய்யாகிவிடுகின்றபோதொன்றுவேண்டுவல்யான்
செய்யுந்திருவொற்றியூருடையீர்திருநீறுமிட்டுக்
கையுந்தொழப்பண்ணியைந்தெழுத்தோதவுங்கற்பியுமே."

என்று விண்ணப்பித்து, அரிது புறம்போந்து, திருவெல்லைப்பிரியாராய், சாக்கிரமுதலிய வைந்தவத்தைகளையுங்கடந்து அருளுக்குத் தம்மை யுணவாக்கி முழுவதும் விழுங்கப்பட்டாராய்த் தத்துவ முழுவது மிச்சைவழி பணிகேட்பப் பிரணவமே திருவுருவாக அருட்சகசம் பிறக்கவேயுலகு பேயாகப் பசுமேய்க்குஞ்சிறுவரோடுகூடி ஆடியும்பாடியும் பலவிளையாடல் புரிந்திருக்குநாளில் உலக மறிந்துபிழைக்கவும், உடனாடுஞ்சிறுவர்களிக்கவுமாக, முதல்வன் முறையீடு, அருட்புலம்பல், இறந்தகாலத்திரங்கல், நெஞ்சொடு புலம்பல், பூரணமாலை, நெஞ்சொடுமகிழ்தல், உடற்கூற்றுவண்

ணம் இவற்றை அருளிச்செய்து பசுங்கிளைமேயக்கும் அச்சிறுவரோடுகூடி மணற்குன்றிலும் புன்னைச்சூழலிலும் பலவிளையாடல் செய்து வீற்றிருக்குநாளில், ஐந்தெழுத்தருச்சனை முறைப்படிசெய்து திருவருளுக்கு முற்றும் தமமை உணவாக்கித் தத்துவமுழுவதுந் தம்மியலவேறுபட்டு அருளவடிவாய் தம் வசப்படவே தாம் பஞ்சாவத்தையையுங்கடந்து, பஞ்சபூதகாரியமாகிய தூலவுடம்பே பஞ்சாக்கரகாரியமாகிய மந்திர சரீரமாகத் திரிந்து நின்றது. அப்போது திருவெண்காட்டடிகளும், உடனவிளையாடும சிறுவர்களைநோக்கி,சிறுவீர்காள் நுங்கட்குச்சிலவிநோதங் காட்டுவல என்னை யோராகுழியிற புதையுமென அவர்களு மவ்வாறே புதைத்தவுடன், அவர்களுக்கு வியப்புண்டாமபடி வெளிபபட்டு வேறோர்மணற்குன்றின்மேனின்றனா. அதுகண்டு அவர்கள மனமகிழ்கொண்டு மீட்டு மீட்டும புதைக்கப் புதைக்க வெளிப்பட்டு நின்று பராக்குக்காட்டி அப்பால் ஒருவிசைபுதைக்கவெளிப்படாமல் சிவலிங்கவடிவமாக முளைத்து நின்றா. அப்போது சிறுவர்கள் கண்டு வியப்பும அச்சமுமடைந்து ஊரிலேயுள்ளவர்கட்கு நடந்தனவற்றை அறிவிப்ப, அவர்கள் யாவரும திரண்டுவந்து அவ்வற்புதத்தைக் கண்கள்[illegible]த தவப்பயன பலிக்குமபடி தரிசித்தாரகள். பூமழைபொழிந்த[illegible]தேவதுந்துபிமுழங்கிற்று. முனிவரும சிவனடியவர்களும் அரகர[illegible]ன்று முழக்கஞ்செய்தனர். உலகெலாம பேரானந்தவெள்ளத்து[illegible]ழ்கின.

கேட்டீர்களோ முனிவர்களே! இம்முத்திநிலையே முடிவானதும் உண்மையானதுமென் றுணர்வீர்களாக. இங்ஙனமபட்டினத்துப்பெருந்தகையாகிய திருவெண்காடர் சுத்தசனமார்க்க முத்திசித்தியாகப் பெற்ற செய்தி உலகெல்லாம பரவிப பகுவிகள யாவரும கேட்டுத் துதித்துப் பேரானந்த முற்றனா.

இதறகுமுனனே யிவா பததினியாராகிய சிவகலையம்மையாா தங்கணவனார் திருவடிதியானததிலேயேயிருந்துசிவயோகமுறறுச் சிவபதம பெற்றனா.

காவிரிப்பூம்பட்டினத்துள்ளாா யாவரும ஐயா ஐக்கியநிலைமைகேட் டங்குநின்றும புறப்பட்டுவந்து திருவொற்றியூரையடைந்து தரிசித்தும் பலதிருத்தொண்டுசெய்து திருவருட்பாங்கராயினார்கள். யாவர்க்கு மங்கலமுண்டாக. எனறுபமன்னியமுனிவர், முனிவர்கட்குக் கூறியபடி, சூதபுராணிகர் சவுனகராதியாக்கு ஸ்ரீபவிஷ்யோத்தரபுராணத்துள் திருவிடைமருதூர் மான்மியத்திலே கூறிய பட்டினத்துப்பிள்ளையார் திவ்விய சரித்திரத்தைக் கூறிமுடித்தனர்.

இந்த சரித்திரத்தை யுண்மையான பத்தியோடும் சிரத்தை யோடும் வாசிப்பவர்கட்கு இம்மையில் ஆயுள், செல்வம், மக்கள், சிவஞானமும் உண்டாய மறுமையில் பேரின்ப நிலையான சிவபத மும் உண்டாம்.

இது உண்மையான முத்திநிலையினை யென்பதுணர்த்திற்று. எங்ஙனமெனில், மற்றைய சமயமாக்கிகளெல்லாரும் கருமதேக மாகிய இத்தூலவுடம்பு பிராரத்தத்தைப் புசித்து ஒழித்து இங் கே விழுந்துபோக ஆன்மா சூக்குமதேகத்தோடு முத்தியடையு மெனவே கூறுவர். ஆனால் திருவாசகம், "செத்தேபோனாற் சிரி யாரோ" என்றதுந் தவிர, "மண்மேலயாக்கை விழுமாறும் வந் துனகழற்கேபுகுமாறும், அண்ணாவெண்ணக்கடவேனோ அடிமை சாலவழகுடைத்தே" என்றது. எனவே தேகம்பிணவியலா யிம் மண்ணிலே விழாது மூவகைச்சித்தியுள் ஓர்வகைச் சித்திபெற்று நிற்பதே முடிவான முத்திநிலையென்றவாறாயிற்று. தாயுமானவ ரும், "முத்தியிலுந்தேக மிசைமூவிதமாஞ் சித்திபெற்றோர் - எத் தனைபேரென்றுரைப்ப னெந்தாய்பராபரமே." என்றார். என்றவர், அம்மட்டில்விடாது, "தேகமயாதேனுமொரு சித்திபெறச்சீவன் முத்தி-ஆகுநெறிநல்லநெறியையா பராபரமே." என்றார்.

இனி தேகஞ் சித்திபெறப் பெறுமுத்தியேயன்றி, அதுவிழுந் தபின் ஆன்மா முத்திபெறுதலு முண்டு என்று கூறுவாரை நோக் கி அவரோ, "உலகநெறிபோற் சடலமோயவுயிர்முத்தி, யிலகுமெ னலபந்தவியலபேபராபரமே." என்று உண்மைகூறி மறுத்தனர்.

குமாரதேவரும், "சுத்தசாதகம்" என்னும் நூலுள்ளே, "தொம்பதம்விளங்கிற் மேலவினைமறைத்த தொல்விருளகன்று போயொளிக்கும், தம்பதமானதற்பதம்விளங்கிற் சஞ்சிதமாயை போயொளிக்கும், அம்பதமானவசிபதம்விளங்கி லரும்பிராரத்தம் போயொளிக்கும், செம்பரவருளேவடிவதாயான்மா சிவத்தினுக் கங்கமாய்நிகழும்." எனவும்.

"அடுத்தமற்றிரண்டுசனனத்தில்வீட்டை யடைந்திடுந்தொ ம்பதநெறியோர் - அடுத்தமற்றொருசனனத்தில்வீட்டையடை ந்திடுதற்பதநெறியோர் - அடுத்தவிச்சனனந்தனிலடைந்திடும் வீடசிபதநெறியுளோரிவரும்-அடுத்தவிவ்வுடலோ டடைந்திடா விடின்மேலயாக்கையொன்றெடுக்குமென்றுணர்வாய." எ-ம்.

"ஒடுங்கிடுங்காலந்தோன்றினவட்டவி னொடுங்கிடுமென்றுரை ப்பதனால் - ஒடுங்கிடுங்காலஞ்சத்தியவாதிக் கொடுங்குமிவ்வுடறன் மாத்திரையில் - ஒடுங்கிடுங்காலமசத்தியவாதிக் கொடுங்குமிவ்வுட

